# ஜீவகன்

## அத்தியாயம்—1

## சச்சந்தன் அரசியல்

—oo$oo—

புண்ணியபூமியாகிய இப்பரதகண்டத்திலே பண்டைக் காலத்தில் உம்பர் நாட்டினுஞ் சிறந்ததாய் நிலைபெற்றிருந்த ஏமாங்கதம் என்னும் நாடானது, குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்னும் நால்வகை நிலங்களின் வளத்தால் மிக்கோங்கியது; சரயுநதி வெள்ளம் பரவப் பெற்றது; பலசோலைகளும் தடாகங்களும் சூழ்ந்தது; மாதம் மும்மாரி பெய்யும் மகிமையுடையது; பல திவ்ய ஸ்தலங்களை யுடையது; விட்டில் தன்னரசு வேற்றரசு யானை மிகுமழை மிகுகாற்று கிள்ளை நஷ்டம் என்னும் எண்வகை நாட்டுக் குற்றங்கள் நீங்கியது; தேவாராதனை, திருவிழாக்கள் முதலியன எப்பொழுதும் நீங்காதிருப்பது; நிலங்களில் உண்டாகும் விளைவில், ஆறிலொன்று அரசற்குச் செலுத்தி, மற்ற ஐந்து பங்கையுங் கொண்டு, பிதுர்க்களுக்கும், தேவர்களுக்கும், விருந்தினர்களுக்கும், சுற்றத்தார்களுக்கும், தங்கள் குடும்பத்திற்கும் செய்வன செய்து நீதி தவறாது இல்லறம் நடத்திச் செல்வச்சிறப்புடன் வாழும் உத்தமஜனங்களை யுடையது; இன்னும் பலவகைக் கீர்த்திகள் பொருந்தியது.

இந் நாட்டிற்குத் தலை நகரம் இராஜமாபுரம் என்பதாம். இந்திரன் அரண்மனையே போன்ற பல இராஜ மாளிகைகளாலும், தேவாலயங்களாலும், அந்தணர் க்ஷத்திரியர் வைசியர் சூத்திரர் என்னும் நான்கு வருணத்தவர்களும் செழிப்புடன் வாழும் தெருக்களாலும், விண்ணுற வளர்ந்த கோபுரங்களாலும், கோட்டையாலும், ஆழ்ந்த அகழியாலும், குளிர்ந்த உத்யான வனங்களாலும், இரதம், கஜம், துரகம், பதாதி என்னும் நால்வகைச் சேனைகளின் செறிவாலும், தெய்வச்சிறப்புக்களாலும், திருமணச் சடங்குகளாலும், வேள்விகளாலும், வேதகோஷங்களாலும், வித்வப்பிரசங்கங்களாலும், தான தர்மங்களாலும், ஞானவிசாரணைகளாலும் மேன்மை பெற்றது இந் நகரம்.

இத்தகைய நகர்க் கிறைவனே, இவ்வுலக முழுதும் போற்றும் சச்சந்தன் என்பான் இவன் குருகுலத்திலுதித்தவன்; செந்தாமரைக் கண்ணன்; அடுத்தோரைக் காக்கும் அமிர்தம் போன்றவன்; பகைவரை அடக்கும் ஆற்றலுடையான்; இடைவிடாது கொடுத்தலினுற் சிவந்த கையையுடையான்; சகலசாஸ்திர விற்பன்னன்; அருள்சேர் மனத்தான்; ஆட்சிக்குட்பட்ட குடிஜனங்களுக்குத் தந்தைபோன்றவன்; அழகிற்சிறந்தவன்; அதிசூரவீரன்; இன்மொழி பகரும் நன்மதியுடையான்; எங்கும் பரவிய கீர்த்தியுள்ளான்.

இவ்வரிய குணங்களைப் பெற்ற இம்மன்னவன், மாற்றரசரை யெல்லாம் அடக்கி, மனுமுறை வழுவாது செங்கோல் செலுத்திவரும் காலத்தில், இவனுக்கு மாமனும் விதேயத் தரசனுமாகிய ஸ்ரீதத்தனுக்கு, விஜயை என்னும் பெண் பிறந்து வளர்ந்து, அழகும் சிறப்புமுடையவளாய் மங்கைப் பருவமடைந்திருந்தாள். அவள் பெண்களிற் சிறந்தவளென்பதை உணர்ந்த சச்சந்தன்,

அவளே தனக்கு மனைவியாதற்குரியளென்றெண்ணி மணம் பேசுதற்குத் தன் மந்திரிகளை ஸ்ரீதத்தனிடம் அனுப்பினுன். அவர்கள் அங்ஙனமே சென்று சச்சந்தனது எண்ணத்தை அவன் திருமுன்னர்த் தெரிவித்தனர். விஜயையும் சச்சந்தனையே மணம் புரிந்துகொள்ள விரும்பியிருந்தாள். ஸ்ரீதத்தனும், அவன் மனைவியும், விஜயை அங்ஙனம் கருதியிருந்ததை உணர்ந்திருந்தார்களாதலாலும், அவள் சச்சந்தனுக்கே தகுதியானவளாயிருந்தபடியாலும் அமைச்சருடன் ஆலோசித்து, அவளைச் சச்சந்த மகாராஜனுக்கே சகல சிறப்புக்களுடனும் மணஞ்செய்து கொடுத்தார்கள். விஜயையோ உலகிற் சிறந்த உத்தமியாதலின், கணவன் கருத்தின்படியே இல்லறவொழுக்கத்திற் குறைவுறுது நடந்து மிக்க கீர்த்திபெற்றுள். இவளும் சச்சந்தனும் எவரும் கொண்டாடுமாறு ஒருமனமுடையவர்களாய் வாழ்ந்து வந்தனர். இது நிற்க.

சச்சந்தனுக்கு நிமித்திகன், கட்டியங்காரன், உருத்திரதத்தன் என முக்கிய மந்திரிகள் மூவர் இருந்தனர். இவர்களுள், நிமித்திகனும், உருத்திரதத்தனும், மன்னனுடைய மதி மாறுபடுங் காலத்தில் அவனுக்கு இடித்துக்கூறி நீதிகளை உபதேசிக்கக் கூடிய உத்தமர்கள்; கட்டியங்காரனே, அரசன் மனம்போன வழியே பேசிச் சமயத்திற்குத் தக்கபடி தந்திரமாக நடக்கும் வஞ்சகன். ஆதலின், சச்சந்தன், கட்டியங்காரனிடத்தில் விருப்பும், மற்றையர்பால் வெறுப்புங்காட்டிவருவான். அங்ஙனம் அம்மன்னனுடைய மனப்போக்கானது நடைபெறுங்கால், அவன் சிறிது காலம் இராஜகாரியங்களைக் கவனியாது அந்தப்புரத்திலிருந்து விநோதமாகப் பொழுது போக்கக் கருதி, ஒரு தினம் கொலுக் கூடத் தமர்ந்து, குடையும் கிரீடமும் நீங்க மற்ற

இராஜ மரியாதைகளை யெல்லாம் கட்டியங்காரனுக்குச்செய் வித்து, 'எல்லோரும் கட்டியங்காரனுக்கு அடங்கிநடத்தல் வேண்டும்' என்று நகரில் முரசறைவித்து, அதன்மேல், துஷ்டனாகிய கட்டியங்காரனை நோக்கி, "எனதிஷ்டம் போல் நடக்கும் கட்டியங்கார! நான விநோதமாகப் பொழுது போக்கும் பொருட்டுச் சிறிது காலம் அரசுரி மையை விட்டு நீங்கி யிருக்க இஷ்டப்படுகின்றேன்; ஆதலின், நான் மீண்டும் செங்கோலைப் பெறும் வரையினும் நீயே எனக்குப் பிரதிநிதியாயிருந்து அரசியலைநடத்திவரல் வேண்டும்" என்றனன்.

கட்டியங்காரன், இப்படி ஒரு சந்தர்ப்பம் நேருமாயின் மெத்தவும் நலமாயிருக்கு மென்று முன்னமே கருதி யிருந்தவனாதலின், சச்சந்தன் இவ்வாறு கூறிய வார்த்தைகளைக் கேட்டவுடனே, மிக்க மகிழ்ச்சி யடைந்தான். ஆயினும், அதனை வெளிக்குக் காட்டாமல் தந்திரமாகவே பேசி வஞ்சனையை நிறைவேற்ற வேண்டு மென்று கருதி, உடனே மன்னன் முகத்தை நோக்கி, "இறைவ! என்ன காரியம் புகன்றீர்! நன்று! நன்று!! அடியேன் இவ் வரசுரிமையை ஏற்றுக்கொள்ளுதல் தகுதியாமா? தாம் சொல்லுகிறபடி நான் செங்கோன்மையைத் தாங்குவேனானால், அது ஒருபட்டத்துயானை முதுகின்மேலேற்ற அம்பாரியை அற்பமான நரி தாங்குவதை நிகர்க்கும்; ஆதலின், இப்பெருஞ் சுமையை என்மீது சுமத்தலாகாது" என்றான். அதற்குச் சச்சந்தன், "கட்டியங்கார! இஃதெப்படியாயினுஞ் சரியே; என்னுடைய சௌகரியத்தை உத்தேசித்து, இக் காரியம் என்னாலேயே செய்யப்படுகின்றமையின், இதனை நீ மறுத்தல் தகாது" என்ன, கட்டியங்காரன், மன்னனுடைய கட்டாயத்திற்காகச் சம்மதிப்பவன்போல

நடித்து, அவனை நோக்கி, "அரசர்க்கரச! தாம் வற்புறுத்திக் கூறுவதனாலே நான் தம் கருத்திற் கிசைகின்றேன்; தம் விருப்பப்படியே செய்வதைச்செய்க" என்று கூறினான். சச்சந்தன் அவ்வாறே தன் அரசுரிமையை அவன் வசப்படுத்தினான். அதன்மேல் கட்டியங்காரன், இராஜகாரியத்திற் பிரவேசித்துச் சேனைகளை யெல்லாம் தன் வயமாக்கி ஏமாங்கத நாட்டை ஆளத்தொடங்கினான்.

இவ்வாறு சச்சந்தன் கட்டியங்காரனுக்கு எல்லாச் சிறப்புக்களையுங் கொடுத்துவிடவே, அம் மன்னனுக்கு வரும் நன்மை தீமைகளை எடுத்துரைக்கும் உத்தமனாகிய நிமித்திக னென்னும் மந்திரி, இத் தகாச் செய்கையை உணர்ந்து, இதனால் மன்னனுக்குத்தீங்கு வருமென்றுன்னி, உடனே அரசன்பால் அடுத்து, "மன்னரேறே! நீர் இப்பொழுது செய்திருக்கும் காரியம் தகுதியற்ற தாகும்; உம்முடைய ஆளுகையை மற்றொருவனுக்குக் கொடுப்பதால், இப்பூமியின் சுதந்தரம் உம்மைவிட்டு நீங்கும்; சமீபத்தில் உமக்கு மிக்க தீங்கு வரும்" என்று கூறினான். சச்சந்தன் செவிக்கு நிமித்திகன் கூறிய நற்புத்தி ஏறவில்லை; அதனால், அவன், அவ் வமைச்சனை நோக்கி, "நிமித்திக! நீ சற்றும் ஆராயாது இப் பொருமைச் சொற்களைக் கூறுகின்றனை; கட்டியங்காரன் எனக்கு உயிரை நிகர்த்தவன்; அவன் என்னையே தனக்கு மி நதியுந் துணையாகக்கொண்டவன்; முற்காலத்தில் என்னுடைய பகைகளைக் களைந்து எனக்கு மிக்க வெற்றியை அளித்துள்ளான்; ஆதலின், இத் தருணம் அவனுக்குத் தகுமென்றே நான் இச் சிறப்பைச் செய்தேன்; இனி நீ இவ்விஷயத்தில் ஒன்றும் சொல்லாதே; உன் தொழிலைப் பார்" என்று கடுகடுத்துக் கூறினான். இவ்வாறு கூறியும், நிமித்திகன் அரசன்மீது மிக்க

விசுவாசமுடையவனாதலின், ‘அரசன் கெடுமதியால் இவ்விதம் கூறுகின்றான்; இம் மதியால் இனி நிச்சயமாகக் கெட்டேபோவான்’ என்று உறுதிகொண்டு அவன்கேட்டிற்குச் சகியானாய் மீண்டும் அம் மன்னனை நோக்கி, “இறைவ! நீர் என் சொல்லில் வெறுப்படைய வேண்டாம்; என் சொல் இப்பொழுது உமக்கு வெறுப்பாகத் தோற்றினும் பின்னை நன்மை பயக்கும்; ‘மந்திரிக் கழகு வரும்பொருளுரைத்தல்’ என்ற முறைப்படி, நான் பின்னே வருங் காரியங்களைத் தெரிந்து, நீர் கெட்டு விடாதபடி உமக்கு நற்புத்திகளை இடித்துக் கூறுகின்றேன்; மந்திரிகள் சமயத்தில் இடித்துச் சொல்லும் உறுதி வாக்கியங்களை மந்திரம் போல ஏற்றுக்கொள்ளும் அரசர்க்கு எப்பொழுதும் தீங்கு வரமாட்டாது; ஆகலின் நான் இப்பொழுது கூறும் வார்த்தைகளைத் தள்ளாது கொள்ளவேண்டும்; உரிய நண்பரின் உறுதி வாக்கியத்தைக் கேளாமல் முற்காலத்திற் கெட்டார் பலர்; அரசிற் புக்தியைச் செலுத்தாது இவ்வாறு வேடிக்கை விஷயங்களிற் செலுத்திக் கெட்ட மன்னரோ எண்ணிலர்” என்று பல நீதிகளையும், பண்டைய கதைகளையும் எடுத்துக் கூறினன். கூறியுமென்ன! சச்சந்தன் சிறிதும் இவன் கருத்திற் கிசைந்திலன்.

நிமித்திகன் கூறிய நீதிகளைச் சச்சந்தன் இவ்விதம் எடுத்தெறிந்து பேசவே, உருத்திரதத்தனென்னும் மற்றொரு மந்திரி, தானும் சில நீதிகளை எடுத்துக் கூற நினைத்து மன்னனை நோக்கி, “காவல! இந்திரன் முதலிய தேவர்களுங் கூட மந்திரிகளின் வார்த்தைகளைத் தட்டார்கள்; ஆதலின், நீர் இவ்வாறு அமைச்சர்கூறும் நீதிகளை விடுத்தல் கூடாது; அன்னம் விடுவீராயின், பின்னை நீர் தீங்குறுவது நிச்சயம்; உம்மால் மகிழத் தக்க நும் மனைவி முதலியோரும்

துயர்க்கடலுள் மூழ்கி வருந்துவர்; கட்டியங்கார னிடம் கொடுத்த செங்கோலை மீண்டும் பெற்றுக் கொள்வீராக" என்று கூறினன். இதைக்கேட்டுச் சச்சந்தன், அந்த உருத் திரதத்தனையும் நிமித்திகனையும் நோக்கி, "மந்திரிகளே! நீங்கள் இவ்வாறு என் மனதிற்கு விரோதமாகப் பேசுவது எவ்வளவும் எனக்குத் திருப்தியைத் தராது; மனிதர் கரு வில் உதிக்கும் அக்காலத்திலேயே எல்லாம் வல்ல இறைவன் அவரவர் தவத்திற்குத் தக்கவாறு அனுபவங்களை ஒவ் வொருவருக்கும் அளந் தேற்படுத்தியிருக்கின்றான்; அவ னுடைய ஏற்பாட்டுக்கு விரோதமாக உலகத்தில் யாதொன் றும் நடைபெறமாட்டாது; எனக்கு இவ் வுண்மை நன்று கத் தெரியும்" என்று கூறிப் பின்னர் நிமித்திகனைமட்டும் நோக்கி, "நிமித்திக! இனி இவ்விஷயத்தைப் பற்றி நீ எனக்கொன்றும் சொல்லாதே; இவ் விடத்தை விட்டு வெளியிற் செல்" என்று மிகவுங் கோபித்துக் கூறினன். அதன்மேல் நிமித்திகன், 'இனிமேற் பேசுவதாற் பயனி ல்லை; முடிவாக மன்னனுக்குச் சில வார்த்தைகள் கூறி விட்டு நாம் இங்கில்லாது போய்விடுவதே நலம்' என்று கருதி, மீண்டும் வேந்தனை நோக்கி, "மண்டலாதிபதி! நான் சொல்ல வேண்டியதைச் சொன்னேன்; உம்முடைய கெட்ட காலத்தால் என் சொற்கள் உம்முடையசெவிக்கேற வில்லை; இதனால் வரும் பயனைப் பின்னே நீர் தெரிந்து கொள்ளுவீர்; நீர் அடையும் கேட்டை நான் நேரிலிருந்து பாரேன்; இப்பொழுதே வெளிச் செல்கின்றேன்" என்று அவனை வெறுத்துப்பேசிவிட்டு அப்பொழுதே துறவுபூண்டு காட்டிற்குப் போய்விட்டான்.

அதன்மேல் சச்சந்தன், தன்னுடைய இஷ்டம்போலவே, இராஜகாரியங்களிற் சிறிதும் சிந்தை செலுத்தாதவனாய்

அந்தப்புரத்தில் வசித்து வரலாயினன். அக் காலத்திலும் உருத்திரதத்தன் முதலியோர், "இப்படி இராஜகாரியங் களைக் கவனியா திருத்தல் தகாது" என்று சச்சந்தனுக்கு அடிக்கடி வற்புறுத்திக் கூறிவந்தார்கள். கூறியுமென்ன? அவன் சிறிதும் அவர்கள் வார்த்தையைக் கவனித்திலன்.

இவ்வாறு சச்சந்தன் விஜயமாதேவியுடன் உவளகத் தில் வசித்து வருங்காலத்தில், கருப்பவதியா யிருந்த விஜ யை ஒருநாளிரவு விடியுந் தருணத்திலே, ஓர் அசோக விரு க்ஷம் தன்னிட மிருந்த பூங்கொத்துக்க ளெல்லாம் உதிரத் தானும் அடியற்று விழ்ந்ததாகவும், அப்படிவீழ்ந்தவுடனே அதனடியிலிருந்தே, அவ் விருக்ஷத்தைப் போலவே ஒரு முளை தோன்றி யெழுந்து, எட்டு மாலைகளை யணிந்த ஒரு கிரீடத்திற்கு இருப்பிடமாக நட்டு வைத்தாற்போல ஓங்கி வளர்ந்த தாகவும் ஒரு கனவு கண்டு, அதனை மறக்காமல் எழுந்து நடுங்கி, உடனே சூரியோதயமான படியால், தந்த சுத்தி முதலியன செய்து கண் கழுவி முகத்தைத் துடைத் துக்கொண்டு நல்ல வஸ்திரமணிந்து, தான் கண்ட கனவினு லேற்பட்ட அச்சம் நீங்கும் பொருட்டு அருகக் கடவுளை மலர்களால் அருச்சித்து வணங்கி ஸ்தோத்திரஞ் செய்து, பின்னர், தன் கணவனாகிய சச்சந்தனிடத்தே சென்று அவ னடியை வணங்கி, தான் கண்ட கனவைக் கூறி "நாத! இக் கனவு யாதாய் முடியுமோ வென்று என் மனம் நடுக்க முறுகின்றது; இதனை யான் விடியுந் தருணத்தில் கண்டே னாகலின், இதன் பயன் விரைவிற் சித்திக்கும்; ஆதலின், இதனா லேற்படுவதை ஆராய்ந்து எனக்குக் கூறல் வேண் டும்" என்று சொன்னாள்.

சச்சந்தன் அதனைக்கேட்டு, கனநூலின் முறைப்படி ஆராய்ந்து, அசோகமரம் பூங்கொத்துக்க ளுதிர அடியற்று

வீழ்ந்ததனால், கட்டியங்காரன் தீங்கு செய்யத் தன் சுற்ற மெல்லாமழிந்து தனக்கும் கேடுண்டாகுமென்றும், எட்டு மாலைகளை யணிந்த முடிதோன்றியதனால் விஜயையின்கருப் பத்தில் தனக்குச் சிறந்த புத்திரன் தோன்றி எட்டுப் பெண்களை மணபுரிந்து வாழ்வானென்றும், அவ்வசோக மரத்தைப்போலவே அதனடியில் ஒருமுளை தோன்றி அம் முடிக்கிருப்பிடனாய் வளர்ந்தோங்கியதால் தன் அரசுரிமைச் செல்வம் போன்ற செல்வமானது அப் புத்திரனுக்குப் பிற் காலத்திலே யுண்டாகி வளர்ந்தோங்குமென்றும் தெரிந்து, 'நிமித்திகன் முதலிய மந்திரிகளின் சொல்லைத் தட்டியதா லன்றோ இக்கேடு சம்பவித்தது' என்று தனக்கு வருங்கேட் டைக்குறித்துச் சிறிது நேரம் மௌனமாயிருந்து சிந்தித் துப் பின்பு தலையை அசைத்து, அதனைச்சொன்னால் மனைவி வருந்துவாளென்று கருதி, அதை மாத்திரம் மறைத்து விட்டு மற்றவைகளை அவளுக்குத் தெரியச் சொன்னான். அவற்றைக் கேட்டு விஜயை சச்சந்தனை நோக்கி, "பிராண நாயகரே! நீர் சொன்னவை சரியே; ஆயினும், அசோக மரம் முறிந்து வீழ்ந்ததனாலுண்டாம் பலனைத் தெரிவிக்க வில்லையே? அஃதென்ன? தயவு செய்து அதனையும் ஒளிக் காமல் உரைக்க வேண்டும்" என்றனள். அதன்மேல் என் செய்வான் சச்சந்தன்! அவனால் அதனை மறைக்க முடிய வில்லை; அதனால் அவன், 'எப்படியானாலும் நடக்கிறது நடக்கத்தானே போகின்றது; உள்ளதைத் தெரிவித்துவிடு வோம்' என்று துணிவு கொண்டு விஜயமா தேவியை நோக்கி, "பெண்மணியே! நான் சொல்வதைக் கேட்டு நீ மனம் வருந்தகே; அசோகமரம் முறிந்து வீழ்ந்ததனால் எனக்குச் சமீபத்தில் கேடுண்டாகும்; இதற்காக நீ வருந் துவாயென்று நினைத்தே நான்இதனைக்கூறாது விடுத்தனன்;

என்ன செய்கிறது? விதியை வெல்ல யாவரால் முடியும்? வருவது வந்து தானே தீரும்" என்றான்.

இவ்வாறு கூறவே, விஜயை திடுக்கிட்டு மதிமயங்கி, 'பாவியேன் இதற்கோ உடம்பெடுத்தேன்' என்று பெருமூச்சு விட்டு, ஒரு மாலையானது அறுபட்டுப் பூமியில் விழுவதுபோலக் கண்ணீர் விட்டுக் கூந்தல் சோரத் திடீரென்று கீழே விழுந்து மூர்ச்சையாயினாள். அங்ஙனம் அவள் விழுந்து உயிரற்ற தேகம்போற் கிடப்பதைப் பார்த்தவுடனே ஆண்மையிற் சிறந்தோனாகிய சச்சந்தன், ஆற்றொணாத் துயரமுடையவனாய் மனம் பதைத்து, 'அந்தோ! நான் இதை இவளிடத்தில் ஏன் சொன்னேன்' என்று அவள் சமீபத்திற் சென்று, "கண்மணியே! இந்தப் பாவியேனுடைய ஆவியை வருத்தத் தொடங்கி விட்டாயே" என்று அவளைத் தூக்கித் தன் மடிமீது சார்த்திக் காற்றுண்டாகும்படி மேல் வஸ்திரத்தால் முகத்தில் வீசினான். அவனுடைய ஸ்பரிசம் பட்ட மாத்திரத்திலே அவள் மூர்ச்சைதெளிந்து மெதுவாகக் கண்ணைத்திறந்தாள். அப்பொழுது சச்சந்தன் முகமலர்ச்சியோடு அவளைப்பார்த்து, "பெண்மணீ! நான் சொன்னவைகளை மெய்யென்று நம்பலாமோ? நான் வேடிக்கையாக அப்பயன்களைக் கூறினேனேயன்றி உண்மையாக உரைக்கவில்லை; கனவை மெய்யென்று நினைக்கும் பேதைமை உன்னிடத்தில் மிகுதியும் உளது; உலகத்தில் இவ்வாறே இரவிற் கனவுகாண்பதும், விடிந்தவுடன் அதன் பயனை ஆராய்வதும் ஒவ்வொருவர்க்கும் இயற்கை. ஆனால், கனவிற் கண்டபடி நன்மையோ தீமையோ நடக்குமென்று ஒருவரும் கருதுவதேயில்லை; மனிதர்கள் அவற்றை ஒரு வேடிக்கையாகப் பேசி மறந்து விடுவார்கள்; அவ்வாறே நானும் பேசினேன்; ஆதலின், நான் சொல்லியபடி நடக்கு

மென்று நீ சிறிதும் கவலை கொள்ளாதே; மனிதர், நிலையற்ற காரியங்களுக்குக் கனவையே ஓர் உதாரணமாகக் கொண்டு 'இது கனாக்கோற்றம்' என்று கூறிவருவதையும் கேட்டிலையோ? உன் கவலையை இப்பொழுதே நீக்கிவிடு" என்று கூறி, அக்காரியங்கள் மெய்யாகவே சம்பவிக்கக்கூடியனவா யிருந்தும் அவள் வருத்தத்தை நீக்கும் பொருட்டு அவற்றைப் பொய்யென்று ஸ்தாபித்து அவளைத் தேற்றினான். அங்ஙனம் தேற்றியதோடு உடனே அக் கனவை மறந்து விடும்படி வேறு பல இனிமையான வார்த்தைகளையும் பேசி அவளுடைய புத்தியை இதர விஷயங்களிற் செல்லும்படி செய்தான். அவ்வாறு செய்யவே அவள் கவலை நீங்கி மிக்க சந்தோஷத்தை யடைந்து சேடியரோடு கலந்திருந்தாள். சச்சந்தனும் தன்னுடைய வருத்தத்தை வெளிக்குக் காட்டாமல் அவளுடன் மகிழ்ந்திருந்தான். இனிமையான சங்கீதங்களைக் கேட்பதிலும், நாடகங்களைப் பார்ப்பதிலும், வேறு பற்பல விநோதங்களைக் கண்டு களிப்பதிலும் அவ்விருவர் நாட்களும் திருப்தியாகக் கழிந்தன. விஜயைக்குக் கருப்பமும் முதிர்ச்சி யடைந்தது.

இப்படி யிருக்குங்காலத்தில், யானைத்தீ என்னும் வியாதி பற்றிய விளாங்கனியானது உள்ளே ஒன்று மில்லாமல் வெறுங் கூடாய்ப் பார்வைக்கு மாத்திரம் வெளியில் கனிபோன்றிருப்பதுபோல, சச்சந்தன், தனது அரசுரிமையை யெல்லாம் கட்டியங்காரனிடம் கொடுத்து ஒரு சிறப்புமில்லாமல் பேருக்கு மாத்திரம் அரசனாயிருந்ததனால், அவனுக்குரிய சிறப்புக்கள் அனைத்தும் ஒன்றன்பின்னொன்றாக நீங்கின. அவ்வாறு சிறப்புக்கள் அனைத்தும் நீங்கவே அச்சமயத்தில் விஜயை கண்ட கனவினாலே நிச்சயமாகத் தனக்குக் கேடு சம்பவிக்குமென்று அவனுக்கோர் அறிவுதோன்றிற்று. அத

னுல் அவன், 'நாம் கட்டியங்காரனுல் அழிவதுநிச்சயம்;நாம் அழிந்தாலும் இனி நமக்குண்டாகப்போகும் சந்ததியையாவது காப்பாற்றுதற்குத் தக்க உபாயந் தேடவேண்டும்; விஜயை கருபத்துடனே வெளியேறிப்போகத் தகுந்த ஓர் எந்திரத்தை இப்பொழுதே சித்தப்படுத்தி அதில் அவளையேறிப் பறக்குதல் நலம்' என்று சிந்தித்து, உடனே எந்திரத் தொழிலிற் கைதேர்ந்தவனுகிய ஒரு தச்சனை அழைப்பித்து, அவனை நோக்கி, "தச்சனே! ஆகாய மார்க்கத்தில் செலுத்தக் கூடிய சூஸ்திரம் பொருந்திய மயில்வாகனமொன்றை நீ சிருஷ்டி செய்து தரவேண்டும்; அங்ஙனம் தருவையாயின் நான் உனக்குத் தக்க பரிசளிப்பேன்" என்றான். உடனே அத் தச்சன், மன்னவன் கட்டளையைச் சிரமேற் கொண்டு, பல பீலிகளையும், பிசினி வஸ்துக்களையும், நூல்களையும், அரக்கையும் மெழுகையும், இன்னும் அதற்குரிய பல பொருள்களையும் சேர்த்து, எழு தினங்களுக்குள்ளே அரசன் சொன்னபடி ஆகாய மார்க்கத்திற் பறந்து செல்லக்கூடிய ஒரு மயில் எந்திரத்தைச் செய்து முடித்து, இயற்கை மயிலுக்கும் அதற்கும் வேற்றுமை தோன்றுதிருக்கும் உபாயங்களையும் அதில் அமைத்து, அதனையும், இயற்கைமயிலொன்றையும் சச்சந்தன் முன்னே கொண்டுவந்து நிறுத்தி அவனை வணங்கி, "மன்னர் பெருமானே! இவ் விரண்டினுள்ளும் வித்தியாசங் கண்டு உரைப்பீராக" என்று கூறினன். சச்சந்தன் அவ்வாறே நோக்கி அவ்விரண்டிற்கும் வித்தியாசங் காணப் படாமையால் அத் தச்சன் வேலைப்பாட்டை மெச்சி அவனை நோக்கி, "கோமில்வல்லோய்! உன்றுற் செய்யப்பட்ட இந்த எந்திர மயிலானது சிற்பநூன் முறைப்படி செவ்வனே அமைந்துள்ளது; இது மிகவும் நன்றுயிருக்கின்றது; உன்னைப்போல் எந்திரஞ் சமைப்பார் உலகத்தில் எவருமிலர்; உன் வேலைத்திற

மைக்கு நான் மகிழ்ந்தேன்; ஆதலின், நான் கொடுக்கும் பரிசைப் பெற்றுக் கொள்வாயாக" என்று உயர்ந்த பல ஆபரணங்கள் நிறைந்த ஒரு பொற்பெட்டியை அவனுக்குக் கொடுத்தான். அத் தச்சன் மிக்க மகிழ்ச்சியடைந்து அதனைப் பெற்றுக்கொண்டு சச்சந்தனை வணங்கித் தனதிருப்பிடம் போய்ச் சேர்ந்தான்.

அதன்மேல் சச்சந்தன், தன்னுடைய மனத்துள்ளிருக்கும் இரகசியத்தை வெளிப்படுத்தாமல், அந்த மயில் எந்திரத்தை விஜயமா தேவிக்குக் காட்டி, அதனை ஆகாயமார்க்கத்தில் செலுத்தும் விதத்தையுங் கற்றுக் கொடுத்தான். விஜயமாதேவியோ, உண்மையை உணராதவளாய், தன் கணவன் தனக்கு விளையாடும் பொருட்டே அம் மயிற் பொறியைச் செய்து தந்தானென் றெண்ணி அவன் கற்றுக் கொடுத்த முறைப்படியே அவ்வெந்திரத்திலேறி அதனைப் பையப் பைய மேலே செலுத்தி மாளிகைகளின் மேலும் சோலைகளின் மேலும் செல்வதும், திரும்பி வந்திறங்குவதுமாகத் தினந்தோறும் பழகி வந்தாள். அதன்மேல் சச்சந்தன் அம் மயிற் பொறியி லேறி ஆகாயத்திற் சென்று வந்திறங்கும்படியான மார்க்கங்களையும் விஜயைக்குக் கற்பித்தான். பிறகு அவள் அதிலேறி ஆகாய மார்க்கமாக நெடுந்தூரஞ் செல்வதும் வருவதுமாகப் பழகிக் கொண்டிருந்தாள். அதனால் அவள் அதன்மீதி லேறி எவ்வளவு தூரமானாலும் போய்வருந் திறமை பெற்றிருந்தாள். அம் மயிலி னுள்ள எந்திரத்தை வலப் பக்கமாக முறுக்கினால் அது மேலே பறந்து செல்லும்; இடப்பக்கத்தை முறுக்கினால் அது கீழிறங்கிப் பூமியிற் கால்களைக் குவித்து உட்காரும்.

---

## அத்தியாயம்—2

### கட்டியங்காரன் சதியாலோசனை

விஜயமாதேவி, மேற்கூறியபடி மயிற்பொறியைநடத்தப் பழகிக்கொண் டிருக்குங் காலத்தில், செய்ந்நன்றி மறந்தவனும், சாரத்தையெல்லாம் விட்ட சக்கையை மூன்றுதரம் பிழிந்தெடுத்த சக்கை போன்றவனும், மகா பாபியுமாகிய கட்டியங்காரன், தான் சச்சந்தனிடத்தில் அரசுரிமையைப் பெற்றுச் சிலகாலம் அநுபவித்து வந்து பின்னர் அதனைத் தானே கைப்பற்றிக் கொள்ளவேண்டுமென்னும் அபகார சிந்தையுடையவனாய், ஒரு தினம் தன் மந்திரிகளை நோக்கி, "அமைச்சர்களே! இப்போது என் மனத்தில் சச்சந்தன் மீது ஒரு பகையானது தோன்றியிருக்கின்றது; அந்தப் பகையோ, 'நீ சச்சந்தனை விரைவிற்கொன்று அவனுடைய அரசுரிமையைக் கைப்பற்றிக் கொள்வாயாக' என்று அல்லும் பகலும் இடைவிடாது என்னைத் தூண்டிக் கொண்டிருக்கின்றது; இதற்கு நான் செய்யத்தக்கது யாது? அதனை நீங்கள் ஆராய்ந்து கூறுவீர்களாக" என்றுகூறினான்.

இந்தக் கொடுஞ்சொற்களைக் கேட்டவுடனே மந்திரிகளெல்லோரும், 'அந்தோ! இக் கொடியன் நிச்சயமாக அரசனைக் கொல்லவே கருதினான்' என்று சிரோரத்தினம் சிதையும்படி இடிவிழுந்த சர்ப்பம்போல நடுநடுங்கிப் பேசுவதற்கஞ்சி மௌனமுற்றிருந்தார்கள். எனினும் அவர்களுள் தைரியமுடையவனாகிய தருமதத்தனென்பான், 'நமக்கென்ன தீங்கு வரினும் வருக: நாம் இந்தக் கொடுஞ்சொற்களைக் கேட்டும் சும்மா இருத்தல் தகாது; இவற்றைத் தடுத்துத் தக்க நீதிகளை எடுத்துக் கூறவேண்டும்'

என்று கருதி, வணக்கத்தோடு கட்டியங்காரன் முகத்தை நோக்கி, 'தலைவ! நான் சொல்லும் வார்த்தைகளை அலக்ஷியம் செய்யாமல் சற்றுத்தயைசெய்து கேட்கவேண்டும்; மிகவும் சற்குணமுடைய நம் சச்சந்த மன்னர், எல்லோரைக்காட்டிலும் உம் மீது மிகவும் நம்பிக்கை வைத்து உம்மிடம் தம்முடைய அரசுரிமையைக் கொடுத்தனர்: அக்காலத்தில் அது தகாதென நிமித்திகன் கூறியும் அதனைக் கேட்டிலர்; அவ்வாறு உம்மையே உத்தமரென்று நம்பிய அம் மன்னருக்கு நீர் தீங்குசெய்ய நினைத்தல் தகுமா? தனனைப் பல்விதத்திலும் மேன்மைப்படுத்திய அரசன்மீது ஒருவன் விசுவாசமின்றிச் செய்ந்நன்றியை மறந்து அவனைக் கொல்லத் துணிவானாயின், அங்ஙனம் நினைத்தவனுடைய குலமும், செல்வமும் வெகு சீக்கிரத்தில் அவனைவிட்டு நீங்கிவிடும். அரசனால் நலம்பெற்ற ஒருவன், அவ் வரசனுடைய எண்ணப்படியே நடப்பானாயின் அவன் செல்வாக்கு உலகத்தில் ஒருபொழுதும் அவனைவிட்டு நீங்காது; அரசனே தெய்வத்தினும் மேம்பட்டவன்; ஏனெனில், 'அரசன் அன்றுகொல்லும் தெய்வம் நின்றுகொல்லும்,' என்றபடி, அரசன் ஒருவனிடத்தே கிருபையைச் செலுத்துவானாயின் உடனே அவனுக்கு அரசாட்சியையும் உண்டாக்கிவிடுவான்; ஒருவனிடத்தே கோபத்தைச் செலுத்துவானாயின் அப்போழுதே அவனைச் சுட்டுவிடுவான். தெய்வங்களினிடத்தே இத்தன்மை யில்லை. இன்னும் அரசன் நித்திரை செய்துகொண் டிருந்தாலும் அவனுடைய ஆஞ்ஞையானது எங்கும் பரவி இப் பூமியைக் காக்கும்; தேவர்கள் இமையாநாட்டம்பெற்று எப்பொழுதும் விழித்துக்கொண்டிருந்தாலும் தங்களுடைய சுதந்தரத்தைக் காப்பாற்றிக்கொள்ளும் ஆற்றலுடையவராகமாட்டார்கள்; அவர்கள் எத்

தன்னையோ முறை தங்கள் செல்வங்களை யெல்லாம் அசுரர் கொள்ளைகொள்ள விட்டிருக்கின்றனர்; இன்னும், அரசர் களை அற்பர் சேரினும், 'மேருவை யண்டின காகமும் பொன்னிறம்' என்றபடி கௌரவமுடையவ ராய்விடுவார்கள்: அரசர் இத்தகைய உயர்வுடையவர்களா யிருப்பதனாலே எவரும் அவர்களுக்கு மிகவும் அஞ்சவேண்டும்; அரசர் கோபிக்கக்கூடிய காரியங்களை இவ்வுலகத்தார் எப்பொழுதும் எக்காரணத்தை முன்னிட்டும் கூறவே மாட்டார்கள்.. இன்னும், நெருப்பானது, தன்னைத் தொட்டவர்களைமாத்திரம் சுடும்; அரசர்களுடைய கோபாக்கினியோ, தீங்கு செய்தவர்களை அவர்களுடைய சுற்றத்தோடு சேர்த்தெரித்துவிடும்; அவர்களை எப்பொழுதும் நேசிக்க வேண்டுமேயன்றி அவர்களுடன் பகைகொள்ள லாகாது; அவர்களுடைய உறவோ அமுதத்தைப்போல இனிமை செய்யும்; பகையோ, கொல்லுகின்ற நஞ்சைப்போலக் கேடு செய்யும்: ஆகலின், நீர்கொண் டிருக்கும் இந்த அபிப்பிராயம் சரியானதன்று; இன்னமுங் கேளும்; அரசன், உபாத்தியாயன், தாய், தந்தை, தமையன் என்னும் ஐங்குரவரையும் பாதுகாவாமல் கைவிட்டவரும், தம்முடைய உடம்பை வளர்ப்பதற்காகப் பிற ஜீவஜந்துக்களைக் கொன்று அவற்றின் தசையைத் தின்பவரும், மந்திரியாயிருந்து அரசனைக் கெடுத்தவரும் ஆகிய இவர்கள், இப் பிறப்பில் குஷ்டம் முதலிய பல ரோகப்பிணிகளால் வருந்துவர்; மறுமையில் மீளா நரகத்தில் அழுந்துவர்; சந்திரனிடத்துள்ள முயல் அச் சந்திரன் வளருந்தோறும் வளர்ந்து தேயுந்தோறுந் தேய்வதுபோல, ஒருவன், தனக்குதவிசெய்து மேன்மைப் படுத்தினவன் சிறப்படையுங்கால் மனக்களிப்புறவேண்டும்; தாழ்வடையுங்காலத்தில் அதற்கிரங்கித் தானும் அதனை

அநுபவித்தல்வேண்டும் ; இச் செய்கையானது பழிப்பை நீக்கி மிக்க புகழை யுண்டாக்கும் ; அரசன், செங்கோன் முறை தவறி நடக்கின் இவ்வுலகமே கெட்டுவிடும்; அவனும் கேடடைவன் ; செங்கோன்முறை தவறித் தம் அரசுரிமையை உமக்களித்துத் தமக்கும் உலகத்திற்கும் கேட்டை யுண்டாக்கின நம் சச்சந்தமன்னரே இதற்குத்தக்க சாக்ஷியா யிருக்கின்றார் ; இப்போது செங்கோலைப் பெற்றிருக்கும் நீரும் முறை பிசகி நடந்தால் உமக்கும் கேடு சம்பவிப்பது நிச்சயம் ; ஆதலின், நீர் கொண்ட எண்ணத்தை விட்டுவிடு வீராக" என்று பற்பல நீதிமொழிகளைக் கூறினான். வேறு சிலரும் சில நீதிகளைக் கூறினார்கள்.

இவற்றைக் கேட்டவுடனே கட்டியங்காரன் மைத்துன னாகிய மதனன் என்பான், அவனைப்போலவே கெட்ட சிந்தையுடையவனும், அந்தக் கட்டியங்காரனுக்கே உதவி புரிய நாடியவனு மாதலால், நீதிகளைக் கூறிய தருமதத்தன் முதலியவர்கள்மீது கோபங்கொண்டெழுந்து அவர்களை நோக்கி, "தைரியமற்றவர்களே! போர்செய்தற் கஞ்சி என்ன வார்த்தைகளைக் கூறினீர்கள் ! தோள்வல்லமையி னாலே பகைவர்களுடைய தலைகள் சிதறும்படி வாளால் வெட்டி அதனாலே நான் வீரம் பேசுவேனேயன்றி வீணாக வாயினாலேவீரம்பேசமாட்டேன்;நீங்களெல்லோரும் போர் செய்வதற்கஞ்சியே இவ்வாறு நீதி கூறுகின்றீர்கள்;பொரிக் கறியோடு சேர்ந்த நெய்ச் சோற்றை உண்பதற்குப் பிசைந் து திரட்டும் உங்களுடைய கைகள் சண்டையில் வாளாயுதத் தைப் பிடிப்பதற்கு வழுக்கும்; ஆதலின் நீங்கள் அச்சோற் றைப் பிசைந்துண்பதற்குச் செல்லுங்கள் ; உங்கள் கைகள் போர்க் குதவா ; உங்களுக்கு இஷ்டமில்லையாயின் நீங்கள் போருக்கு வரவேண்டாம்; நானே போர்செய்து பகைஞ

னாகிய சச்சந்தனைக் கொன்று என் மைத்துனனுக்கு அரசுரிமையை நிலைக்கச் செய்கிறேன்; இனி நீங்கள் இவ்விதமான வார்த்தைகளைக் கூறவேண்டாம்" என்று கடுகடுத்துப் பேசினான்.

கட்டியங்காரனும் தருமதத்தன் கூறிய வார்த்தைகளுக்காகக் கடுஞ்சின மடைந்து, முகம் வியர்த்து, கண்கள் சிவக்க, புருவங்களை நெரித்து, கையிலணிந்திருந்த கடகத்தைத் தரையில் மோதியுடைத்து, பற்களெல்லாந் தெரியும்படி வெடிச் சிரிப்பாகச் சிரித்து, அந்தத் தருமதத்தனை நோக்கி, "தருமதத்த! சற்று மஞ்சாது என்ன வார்த்தைகளைக் கூறினாய்; இக் கடுஞ்சொற்களை எவர்தாம் பொறுப்பர்? யானாதலாற் பொறுத்துக்கொண்டேன்; தன்னைச் சார்ந்தவரின் மனத்திற்குப் பொருந்தாத காரியங்களை ஆலோசித்துச் சொல்வதில் உன்னைப்போல் வேறு யாரும் இருக்கமாட்டார்கள்; இனி இத்தகைய மொழிகளைக் கூறாதே; உன் சொற்கள் என் செவிக்கேறமாட்டா; நான் எண்ணியதை முடிப்பதன்றி இனி வேறொன்றையும் சிந்தியேன்; சீக்கிரமாக என் கை வாளினாலே சச்சந்தனை விண்ணுலகுக் கனுப்பித் தேவர்க் கதிபனாகும்படி செய்து யான் இந்த மண்ணுலகத்தை ஆளுவேன்; இது சத்தியம்! சத்தியம்!!" என்று இடிமுழக்கம்போல இரைந்து பேசினான்.

இதைக் கேட்டவுடனே தருமதத்தன், கட்டியங்காரனை நோக்கி, "நீர் கூறியவாறே செய்வீராக; நாங்கள் உமது நோக்கம்போற் பேசாததனாலேயே உமக்கு இத்தகைய கோபமுண்டது; இனி உமதெண்ணத்திற்கு விரோதமாக நாங்கள் பேசமாட்டோம்; நீர் கோபிக்கவேண்டாம்; இப்பொழுதே அரசனைக் கொல்வதற்கு எல்லோரும்

போர்க்கெழுவோம்; அந்தோ பாவம்! இவ்வரசாட்சியே மன்னனுக்கு எமனாயமைந்தது; அவர் உமக்கு அரசாட்சியைக் கொடுத்த குற்றமும் அவரைக் கொல்லற்கமைந்தது; அளவற்ற ஐசுவரியமும் அவருயிரைக் கொள்ளைகொள்ளத் தக்கதாயிற்று; அவர் உம்மீது வைத்த கிருபையும் அவரைக் கொல்லத் தலைப்பட்டது; உமமீது யாதொரு குற்றமுமில்லை. குற்றங்களெல்லாம் கொற்றவரிடத்திலேயே உள்ளன; ஆகலால், அவர்க்குக் கொலை நேருவது தகுதியானதே" என்று அரசனுக் கிரங்கியும், கட்டியங்காரனை வெறுத்தும் பேசிவிட்டு மௌனமாயிருந்தான்.

அதன்மேல் கட்டியங்காரன் தன் விருப்பப்படியே சச்சந்தனையும், விஜயமாதேவியின் கர்ப்பத்திலிருக்கும் அவனுடைய புத்திரனையுங் கொல்லக் கருதி, அதற்குரிய கொடுமையான தொழில்களைத் தன் மைத்துனனாகிய மதனனுடனே கலந்து யோசித்து, அப்பொழுதே அரசனுடைய சுற்றத்தார்களை யெல்லாம் சிறைப்படுத்தி, தனக்கிதமாக நடக்கக்கூடியவர்களுக்கெல்லாம் அளவற்ற திரவியங்களை வாரிக் கொடுத்து, அவர்களெல்லோரையும் தன் மனம் போலவே நடக்கச்செய்து, நாட்டை யெல்லாம் தன் வசப்படுத்தி, மலையுச்சியி லிட்ட விளக்குப்போல எங்குந் தெரியும்படி தன்னுடைய பழியைப் பரப்பி, போர்க்கெழும்படி தன்னுடைய சேனைகளுக்கு ஆஞ்ஞாபித்தான். உடனே, யானைகளையும், தேர்களையும், குதிரைகளையும் அலங்கரித்து, வாளாயுதங்களையும், வேலாயுதங்களையும், விற்களையும், கதைகளையும், இன்னும் பற்பல ஆயுதங்களையும் தாங்கிப் போர்க்கோலங்கொண்டு சேனைகள் புறப்பட்டு இராஜமாபுரத்தின் தெருக்களில் நெருங்கிச் சச்சந்தனது அரண்மனையிற் புகுந்து அவனுடைய வாகனங்களைக்

கைப்பற்றி அதன்மேல் அவ்வரசனிருந்த அந்தப்புரத்தை வளைந்து கொண்டன. கட்டியங்காரனும் போர்க்கோலங் கொண்டு சச்சந்தனுடன் யுத்தஞ்செய்யப் புறப்பட்டான்.

மேற் கூறியபடி கட்டியங்காரனுடைய படைகள் சென்று சச்சந்தனுடைய அந்தப் புரத்தை வளைந்து கொள்ளவே, அச் செய்கையைக் கண்ட வாயில்காவலன் சச்சந்தனிடத்தில் விரைந்தோடி, "மன்னர்பெருமானே! உம்மைப் பாதுகாத்துக்கொள்வீராக: கட்டியங்காரன் உம்மைக் கொல்லக் கருதித் தன் சேனைகளுடனே வந்து அந்தப் புரத்தை வளைந்துகொண்டான்" என்று கூறினன். அதைக் கேட்டவுடனே மன்னன் அதிசயித்து, தன்னிடத்தில் எவ்வகைப் படையு மில்லாதிருந்தும், தன்னுடைய தைரியத்தினாலே மிக்க வீராவேசத்தை யடைந்து, அதனால் தன்னிடத்தில் படை யில்லை யென்பதையும் மறந்து எப்பொழுதும் போலச் சேனைக ளிருப்பதாகவே நினைத்துத் தான் செல்வாக்குட னிருக்குங்காலத்தில் பேசுவது போலவே, பக்கத்தில் வீரர்க ளிருப்பதாகவும், அவர்களை நோக்கிச் சொல்வதாகவும் கருதி, "வீரர்களே! பகைவர் உள்ளே வராதபடி விரைவில் வாயிற் கதவுகளை யெல்லாம் தாளிட்டுப் பூட்டுவீராக; சீக்கிரம் யானைகளையும், குதிரைகளையும், தேர்களையும் அலங்கரிப்பீராக; மதிற்புறத்தைக் காக்கும் காவலர், விரைவாக அவ்விடத்திற்குச் சென்று எதிரிகளுடன் போரைத் தொடங்குவீராக" என்று துடிதுடித்துச் சொன்னன். இக் கட்டளையை நிறைவேற்றுதற்கு அங்கே எவருளர்! அரசன் ஒருவனே இக் காரியங்களை நிறைவேற்றக் கூடியவனாயிருந்தான்.

அதன்மேல் சச்சந்தன், தனக்குத் துணை யொருவருமில்லாமையை யுணர்ந்து, வாளாயுதத்தை உறையினின்றும்

உருவிக் கரத்திற் பிடித்துக்கொண்டு, நான் ஒருவனுகவே அதனை நோக்கி, 'செய்ந்நன்றி மறந்த வஞ்சகனுகிய கட்டியங்காரனுடைய வல்லமையை நாம் அறிவோம்' என்று கோபச் சிரிப்புச் சிரித்துவிட்டு, 'முதலில் கர்ப்பத்துடனிருக்கும் விஜயையைக் காப்பாற்றிவிட்டுத்தான் மறு காரியம் பார்க்கவேண்டும்' என்று துலிந்து, அப் பொழுதே அவளிடத்தில் விரைந்துசென்று, "எனதாருயிர்த் துணைவியே! என் மதியினத்தால் நமக்கு ஆபத்து வந்துவிட்டது; வஞ்சகனுகிய கட்டியங்காரனே என்னைச் சந்ததியுடன் கொல்லப் படையெடுத்து வந்துவிட்டான்; இத் தருணம் நான் எவ்வாறுயினும் நின் கர்ப்பத்திலிருக்கும் சிசுவை அவசியம் காப்பாற்றல் வேண்டும்; அப் பிள்ளை பிழைக்க வேண்டுமானுல் நீ இப்பொழுதே எந்திர மயிலி லேறி வெளியே போய்விடவேண்டும்; இல்லையேல் உனக்கும் பிள்ளைக்கும் அபாய முண்டாம்; நான் இறப்பினும் புத்திரனிருந்தால் எப்படியேனும் பிற்காலத்தில் பகை முடிப்பான்; நீ அன்று கண்ட கனவை நான் பொய்யென்று கூறினேன்; அது நம்முடைய கெட்டகாலத்தால் மெய்யாகவே முடிந்தது; நீ இதற்காக வருந்தாதே; விரைவில் நான் சொன்னதைச் செய்; வேறு யோசனை செய்வாயானுல் நீயும் கர்ப்பத்துடனே ஆபத்துக்குள்ளாவாய்" என்று கூறினேன்.

•

அந்தோ பரிதாபம்! நாம் என்னென்று சொல்வோம் விஜயையின் பரிதாப நிலைமையை! இந்தத் துக்ககரமான வார்த்தைகள் அவளது செவியிற் புகவே, அவள், "ஹா! நாதா! நமக்கும் இக் கதி நேர்ந்ததா?" என்று கைகளால் முகத்தி லறைந்துகொண்டு மயங்கி, ஒரு பூமாலை அற்று விழ்வது போலத் திடீரென்று பூமியில் வீழ்ந்து தன் கர்ப்

பத்துக்கும் துன்ப முண்டாகும்படி பலவாறு புரண்டு புரண்டு அழுது புலம்பினாள். அதைக் கண்டு சச்சந்தன் அடக்கமுடியாத துக்கத்தை அடைந்தானாயினும் தன்னுடைய வீரத்தால் அதனை வெளித்தோற்றும லடக்கிக் கொண்டு உடனே விஜயமாதேவியை வாரியெடுத்து மடிமீது வைத்து அவளுடைய கண்ணீரைத் துடைத்துச் சோகத்தைத் தணித்து அதன்மேல் அவள் முகத்தை நோக்கி, "பேதையே! உன் புத்தி என்ன புத்தி! இச் சமயத்தில் அவசரப்பட்டுச் செய்யவேண்டிய காரியத்தை விட்டு அறிவிலிகளைப்போல் இவ்வாறு புலம்புதல் தகுமா? இவ்வுலகத்தில் மானிடர் இறப்பதும், பிறப்பதும் ஐசுவரியத்தை படைவதும், தரித்திரத்தை அனுபவிப்பதும் அவரவர் செய்த வினைகளுக்குத் தக்கபடி யுண்டாகும். இப்படியிருக்க, சாவதற்கும் தரித்திரத்தை படைவதற்கும் வருந்துதலும், பிறப்பதற்கும் ஐசுவரியத்தையடைவதற்கும் சந்தோஷப்படுதலும் அறிவற்றோர் செய்கைகளாகும்; இன்னும் நீ என்னைப் பிரிவது குறித்துத் தாக்கிக்கின்றனை; அதுவும் அறிவான செய்கையன்று; நம்முடைய பழைய பிறப்புக்களெல்லாம் எண்ணைத் தொலையாதனவாம்; அப் பிறப்புக்களிலெல்லாம் நாம் வெவ்வேறாகவே யிருந்தோம்; இனி நாம் இறந்த பின்னரும் ஒன்றுசேர மாட்டோம்; இந்த ஜன்மத்தில் நீயும் நானும், மனைவியும் புருஷனுமாகச் சேர்ந்திருந்தது சில தினங்களே; இந்த அற்ப உறவை நீ பெரிதாக நினைத்து மனம் வருந்தவேண்டாம்; நுட்பமாகிய நூல்களையெல்லாம் ஆராய்ந்து உலக வாழ்க்கை சதமன்றென்பதை உணர்ந்தநீயும் இங்ஙனம்கலங்கப்படலாமா? விஜயா! நான் இன்னமொன்று கூறுகின்றேன் கேள்: அரசர்கள், தங்களுக்கு ஆபத்து வந்த காலத்தில், முதலில் தங்களுடைய மனைவியரை வெளியேற்றி பனுப்பிவிட்டுத்தான்

பின்பு தாங்கள் செல்வதற்கு வழிபார்ப்பார்கள்; தங்கள் ஸ்திரிகள் எதிரிகளிடம் அகப்படுவது மிகவும் மானக் கேடென்பதை யுத்தேசித்தே அவர்கள் இக் கடமையை முதன்மையாகக் கொண்டிருக்கின்றனர்; அம் முறைப் படியே நான் இப்போது உன்னை வெளியேறச் சொல்கின் றேன். ஆதலின், நீ முதலிற் புறப்படு; பின்னால் நான் என் னுடைய உயிரைக் காப்பாற்றுதற்கு என்னாலியன்ற முயற்சி களைச் செய்துபார்க்கின்றேன்; கடவுள் எனக்கென்ன கதி விதித்திருக்கின்றாரோ அது நடக்கும்; நீ ஏறிச் செல் வதற்குத் தகுதியான எந்திரமயில் வாகனமும் உன் கையி லிருக்கின்றது; அதிலேறி நீ யாதொரு தீங்குமில்லாமற் பிழைத்துப்போகலாம்; இனித் தாமதிக்கலாகாது;விரைந்து புறப்படு! புறப்படு!!" என்று அவசரப்படுத்திக் கூறினான்.

இவ்வாறு கூறவே, இந்த வார்த்தைகளெல்லாம் விஜய மாதேவிக்கு நியாயமாகத் தோற்றிய படியாலும், அந்தச் சமயத்தில் செய்வது அஃதன்றி வேறொன்றுமில்லையாத லாலும் அவள் ஆற்றொணுத் துயரத்தோடு அக் காரியத்திற் கிசைந்தாள். அங்ஙன மிசையவே சச்சந்தன் மகா சஞ்சல த்தொடு தன்னுயிரையே வேறுபிரித் தனுப்புவது போல அந்த விஜயமாதேவியை எந்திர மயில் வாகனத்தி லேற்றி அவள் யாதொரு இடையூறு மின்றிச் செல்லும் பொருட் டுக் கடவுளுடைய மந்திரத்தைக் கூறி வாழ்த்தி, அந்த மயி லானது மேலே பறத்தற்கான சூஸ்திரத்தை முறுக்கிவிட் டான். உடனே அஃது ஆகாயத்திற் பறந்தது. விஜயமா தேவி யாதொரு செய்கையும் செய்யமுடியாதவளாய், அள வற்ற விசனத்தால் மதிமயங்கிச் சோர்ந்து சாய்ந்தபடியே அந்த மயிற்பொறியின்மேல் கண்ணுங் கண்ணீருமாய், 'இனி நமக்கு என்னகதி நேருமோ ? நம் நாயகர் கதி எவ்

வாருருமோ? அவரை நாம் காணும் நாள் என்றாளோ? அவர் சாவாரோ பிழைப்பாரோ? இனி நாம் உயிருடனிருப்பதால் யாது பயன்!" என்று என்னுதமென்னி மனம் புண்ணுகிப் பலவாறு புலம்பிக்கொண்டே சென்றுள்.

அவ்வாறு விஜயை சென்ற பிறகு சச்சந்தன், "நம்முடைய சோற்றையே உண்டு வளர்ந்த கட்டியங்காரனே நமக்கு மாற்றுனாயினு னல்லவா!" என்று கண்சிவந்து கோபித்து, சமுத்திர ஜலத்தை முன்னே உண்டாக்கின ஜ்வழித்தியே யுகாந்தகாலத்தில் அதனைச் சுட்டெரிப்பது போல, தானே முன் உண்டாக்கிக் கட்டியங்காரன்வசம் ஒப்புவித்த சேனைகளை அழிப்பதற்கு அச் சேனைகளுக்கு முன்சென்று பற்பல வீராவேசமான வார்த்தைகளை இடிமுழக்கம்போற் கூறி யுத்தஞ் செய்யத் தொடங்கினன். இவ்வாறு சச்சந்தன் தனிப்பட்டு அந்தப்புரத்திற்குள் அகப்பட்டுப் போர் தொடங்கவே, இடிபோன்ற முழக்கத்தை யுடைய ஒரு சிங்கத்தைப் பல யானைகள் சேர்ந்து வளைத்தது போல் வேலாயுதத்தையும் வாளாயுதத்தையுமுடைய வீரர்களோடு கூடிய யானைப் படைகள் அவனை வளைந்து கொண்டன. அப்படி வளைந்து கொண்ட மாத்திரத்திலே சச்சந்தன், நெஞ்சம் வெதும்பி, கண்களில் நெருப்புப்பொறி சிதறக் கோபித்து, வாளாயுதத்தை உறையினின்றும் உருவி வலக் கையிற் பிடித்து, கேடகத்தை இடக்கையிற் பிடித்துச் சுழற்றி ஆர்ப்பரித்தான். அத் தருணத்தில் கட்டியங்காரனுடைய சேனவீரர்கள், சச்சந்தன்மீது அநேக அஸ்திரங்களை மழைபொழிவது போலச் சொரிந்தார்கள். அவ்வாறு சொரிந்தும் சச்சந்தன் அவைகளுக்குப் பின்னிடையாமல், அப் பாணங்களை யெல்லாம் தன்னுடைய வாள்வல்லமையினுலே விலக்கி, முதலில் எதிர்த்த அச் சேனைகளை

நாசப்படுத்தி அப்பாற் சென்றான். அப்போது கட்டியங் காரனுடைய பேரணியில் நின்ற யானைப் படைகள் வந் தெதிர்த்தன. அந்த யானைப்படைகளையும் சச்சந்தன் வாளி னாலே வெட்டிச் சங்கரித்தான். அவ்வாறு யானைகள் அழி யவே, கட்டியங்காரன் மிகவுங் கோபங்கொண்டு யானையின் மீதேறிப் பிரகாசம் பொருந்திய சக்கரத்தைக் கையிலேந்தி வந்து சச்சந்தனுடைய கேடகத்தை இரு பிளவாக அறுத் துத் தள்ளினான். சச்சந்தன் அவனைநேரிற் காணவே, அவ னை எரிக்கும் நெருப்பைப்போலச் சினந்து, தன்னுடைய வாளினாலே அந்தக் கட்டியங்காரன் ஏறிவந்த மதயானையின் கையை வெட்டித் தள்ளினான். அதுகண்டு கட்டியங்காரன் பொறாமல் சச்சந்தன் மார்பிலே தன்னுடைய வேலாயுத த்தை எறிந்தான். அவ் வேலானது சச்சந்தன் நெஞ்சிற் பாய்ந்தது. உடனே அம் மன்னன் அதனைத் தன்னுடைய கையினாலே பிடுங்கினான். அது பாய்ந்த வேகத்தினாலே வளைவுற்றிருந்தது. அங்ஙனம் வளைவுற்றிருந்தும் மன்னன் அதனைக்கொண்டே சத்துருவின் படையை நாசஞ்செய்யக் கருதி அங்கே செத்துக்கிடந்த ஒரு யானையின் தந்தத்தி னிடையே அவ் வேலைப் புகுத்தி யிழுத்து அதன் வளைவை நிமிர்த்து, அதைக் கையிற் பிடித்துக்கொண்டு முன்னி லும் அதிகமான வீரத்தோடு போர்புரிந்தான்.

சச்சந்தன் இவ்விதம் செய்த போரினால் அநேக வீரர்கள் உயிர் துறந்தார்கள்; எஞ்சிய வீரர்கள் பயந் தோடினார்கள்: யானைக்கூட்டங்களெல்லாம் பயந்தோடின. இச் செய்கைகளைக் கண்ட கட்டியங்காரன் அவ்வாறு பயந்தோடிய வீரர்களைக் கோபித்து, மற்றொரு யானை யின் மீதேறி, இரும்பினாலே செய்த யானை நெருஞ்சி முள் ளாகிய கப்பணமென்னும் ஆயுதத்தைச் சச்சந்தன்

மீது ஏவினன். அப்போது அம் மன்னன் புருவங் களை நெரித்து மீசைகள் துடிக்கக் கோபித்துத் தான் கையிற் பிடித்திருந்த வேலினாலே, கட்டியங்காரன் இரண் டாவதாக ஏறிவந்த யானையையும் வெட்டி வீழ்த்தினன். கட்டியங்காரன் மற்றொரு யானையின் மேலேறித் தன் னுடைய வீரர்களைத் தைரியத்தோடு நெருங்கி யுத்தஞ் செய்யும்படி, ஜாடை காட்டி, வீராவேசமான வார்த்தை களைப் பேசிச் சச்சந்தன் சமீபத்தில் நெருங்கினன். அவ் வீரர்களெல்லோரும் ஊக்கத்துடனே சச்சந்தனை வளைந்து கொண்டார்கள். அப்போது அவர்களால் ஏவப்பட்ட ஆயுதங்களெல்லாம் சச்சந்தனது மார்பில் தைத்து நிறைந் தன. அப்படி நிறைந்தும் மன்னன் அஞ்சாமல் வாளா யுதத்தைப் பற்றி அதனாலே அநேக வீரர்களையும், யானை களையும், குதிரைகளையும் நாசப்படுத்தி முடிவாக அவ் வாளாயுதம் ஒடிந்துபோன படியால் அதை எறிந்துவிட்டு வெறுங் கையோடு நின்றான். அவ்வாறாகவே பகைவர்கள் எவிய ஆயுதங்களெல்லாம் அளவில்லாமல் அவனுடைய தேகத்தில் தைத்து நிறைந்தன. அங்ஙனம் நிறைந்தும் அவன் சிறிதும் மனந்தளராமல், பாரதத்தின் பதின் மூன்றாநாள் யுத்தத்திலே கர்ணனோ டெதிர்த்துச் சர மாரிக்குள்ளே மனஞ் சலிக்காது நின்ற அபிமன்னுவைப் போல நின்றான். அவ்வாறு நின்றாலென்ன! வெறுங்கை யோடு நின்ற அவன் எவ்வளவு ஆயுதங்களைத்தான் தாங்குவான்! மேலும் மேலும் பகைவர்களுடைய சக்க ரங்களும், வேலாயுதங்களும் ஒன்றின்மே லொன்றாகச் சேர்ந்து அவன் தேகமுழுவதும் பாய்ந்து அழுந்தியதனாலே, அந்தோ! அம்மன்னவன் வலிமை குறைந்தது. அங்ஙனங்குறை ந்த தருணத்திலும் அவன் வீரங்குன்றாமல், கோபத்தினாலே நெருப்பெழும்படி கண்களை விழித்து, புறங்கொடாவீரரின்

இயற்கைப்படியே பகைவர் முகத்தை நோக்கிய வண்ணமாகவே மயங்கிக் கீழே வீழ்ந்து கடவுள் தியானத்தோடு உயிர் நீங்கிச் சுவர்க்கலோகத்தை யடைந்து தேவர்களுக்கு விருந்தின ஞனான். உடனே கட்டியங்காரன் தன் வெற்றி முரசை முழக்குவித்தான்.

இவ்வாறு மன்னன் இறந்த வுடனே அந்தப்புரத்திலிருந்த அவன் சுற்றத்தாராகிய மாதர்க ளெல்லோரும் ஓடிவந்து, மார்பிலும் முகத்திலும் அறைந்து கொண்டு, அரசன் சமீபத்தில் வீழ்ந்து, "அந்தோ ! எந்தையே ! உனக்கு இக் கதியா நேர்ந்தது! நீ உயர்ந்த மலர்கள் பரப்பிய பஞ்சணையில் படுத்திருப்பதைவிட்டு இப்பொழுதுமண் மீது கிடக்கின்றாயே" என்று அழுது புலம்பினார்கள். கீதவாத்தியப் பெண்கள் சாவுக்கு முழக்கவேண்டிய வாத்தியங்களாகிய வேய்ங்குழல்களையும், வீணைகளையும், மத்தளங்களையும், ஓர்கட் பறைகளையும் முழக்கினார்கள். பின்பு எல்லோரும் சேர்ந்து, சந்தனக்கட்டை முதலிய விறகுகளை அடுக்கி ஈமப்பள்ளி உண்டாக்கி அதன்மேல் அரசனைத் தூக்கி வளர்த்தி, 'இனிமேல் மன்னனைக் காணப் போகின்றோமா, என்னும் துக்கம் அதிகரித்ததால் மீண்டும் கீழே வீழ்ந்து வயிற்றி லறைந்துகொண்டு அந்த யுத்தகளத்திற் சிதறிக்கிடந்த பற்பல ஆயுதங்கள், தங்களுடைய தேகமெல்லாம் தைத்துக் காயமாக, கூந்தல் அவிழ்ந்து இரத்தத்திற் புரள, கண்ணீர் ஆறாய்ப்பெருகி மேல்வஸ்திரத்தை நனைப்ப, மண்ணிற் புரண்டு புரண்டு அரசனுடைய குணங்களை எடுத்துச் சொல்லிப் பலவாறு அழுது புலம்பினார்கள். அச்சமயத்தில் கட்டியங்காரன் அங்குவந்து, கட்டையின்மேற் கிடத்தப்பட்ட சச்சந்தனைப் பார்த்தான் அந்தப் பஞ்சமாபாதகனாகிய கட்டியங்காரனைக் கண்டவுடனே அங்கே புலம்

பிக்கொண்டிருந்த பெண்களெல்லோரும், தாங்கள் சச்சந்தன் விஷயத்தில் துக்கப்படுவதற்காக அவன் ஏதேனும் தண்டனை புரிவானோ என்று நிகிற்பட்டுக் கைகளை நெரித்துக்கொண்டு இராஜாளியைக் கண்ட பறவைகள் ஒடுங்குவதுபோல அடங்கி நடுக்கமுற்றிருந்தார்கள். ஆனால், கட்டியங்காரன் அப் பெண்களை ஒன்றுஞ் செய்யவில்லை; அரசனைப் பார்த்தமாத்திரத்தில், எப்படியிருந்தாலும் தனக்கு அவன் முன்னை அரசனாயிருந்ததை யுத்தேசித்து, அவன் அங்ஙனம் பிணமாய்க் கிடந்த பரிதாப நிலைமைக்கு இரக்கங் கொண்டான்; அம்மன்னன் மீது ஏற்பட்டிருந்த பகையும் அப்பொழுது கட்டியங்காரனுக்கு நீங்கிவிட்டது. அதனால் அவன், மன்னனுக்கு முன்னே வணங்கினான். அவனை யறியாமலே பழைய பாசத்தால் அவனுடைய கண்களில் கண்ணீர் சொரியத் தலைப்பட்டது; ஒரு பக்கத்தில் ஜெயங்கொண்டோம் என்னும் ஆனந்தத்தாலும் ஆனந்தக் கண்ணீர் வடிந்தது.

கட்டியங்காரன் அவ்வாறு கண்ணீர் வடித்துநிற்கவே அவனுடைய மன இரக்கத்தைக் கண்ட அம்மாதர்களெல்லோரும், சச்சந்தனுக்கு ஈமக் கிரியைகளைச் செய்வதற்கு அக்கட்டியங்காரன் கோபிப்பானோ என்று கொண்டிருந்த அச்சம் நீங்கினவர்களாய், அரசன் சவத்திற்கு அடுக்கப்பட்டிருந்த சந்தன விறகிலே நெய்க்குடங்களையும், சந்தனம் முதலிய பற்பல வாசனை வஸ்துக்களையும் சொரிந்து, தணலை மூட்டி ஓலமிட்டழுது, "எம்பெருமானே! நெருப்பானது உன் தேகத்தை யுண்ண நீ யெங்களை விட்டு மறைந்து போகின்றாயோ" என்று கண்களிலே நீர் தாரை தாரையாக வடிய, கைவளையல்களை உடைத் தெறிந்தும், மாலைகளை அறுத் தெறிந்தும், கூந்தலில் முடித்திருந்த புஷ்

பங்கலை அவிழ்த்துச் சிதறியும், காதணிகளைக் கழற்றி யெறிந்தும், "ஐயோ! நீர்க்கடன் முதலியன கூடச் செய்யப்பெறாமல் உனக்கு இவ்வித ஈமக் கடன் செய்யுங் காலம் நேர்ந்ததே" என்று புலம்பியும், "எம்பெருமானே! உனக்குத் தொண்டு செய்த நாங்கள் இனி இங்கிருந்து மற்றொருவருக்குப் பணிவிடை செய்வோமோ; இதோ உன்னுடனே நாங்களும் அவ்வுலகத்திற்கு வந்து உனக்கே பணிவிடைகளைச் செய்கின்றோம்" என்று கதறியும் தங்கள் துக்கத்திற்கு எல்லை காணாதவர்களாய்த் தங்களிருப்பிடம் போய்ச் சேர்ந்தார்கள்.

அதன்மேல் வஞ்சகனாகிய கட்டியங்காரன், தன் வேலையாட்களால் அரசன் சவத்தை எரிக்கும்படி செய்து விட்டுத் திரும்பித் தன்னிருப்பிடஞ் சேர்ந்து, ஒரு சிறு நரியானது, ஒரு பெரிய ஆண் சிங்கத்தைக் கொன்று, அப்பொழுதே அச் சிங்கத்துக்குச் சொந்தமாகிய இடத்தைக் கைப்பற்றி, அச் சிங்கத்தின் வீரம் பொருந்திய தொழிலை நடத்தாமல், நண்டு முதலியவற்றைப் பிடித்துத் தின்று வாழும் தன்னுடைய அற்பத் தொழிலை நடத்தத் தொடங்கியது போல, அரசனுடைய உயர்ந்த ஆளுகையைக் கைக்கொண்டு தன்னுடைய தாழ்ந்த அரசாட்சியை நடத்தத் தொடங்கித் தன்னைச் சூழ்ந்திருந்தவரிடம், "ஏமாங்கத நாடு முழுவதும் எனக்கு உரியது; இந் நாட்டினர் யாவரும் என்னுடைய ஆஞ்ஞைக்குட்பட்டு நடக்க வேண்டும்; அங்ஙனம் நடக்காதவரை நான் தண்டிப்பேன்" என்று அரசுரிமை தன் பெயரால் விளங்கும்படி சொல்லி, இவ் விஷயம் ஊரெங்கும் பரவும்படி பணியாளரால் முரசறைவித்து, இதனை எங்கும் தெரிவிப்பித்தான். இதைக் கேட்டு இராஜமாபுரத்திலும் ஏமாங்கத நாட்டிலுமிருந்த

ஜனங்க ளெல்லோரும், ஊரில் மேல்மழை பெய்தால் அதற்காக எப்படி வருந்துவார்களோ அப்படியே வருந்தி மனங் கலங்கினார்கள். அன்று முதல் கட்டியங்காரன், மிகுந்த மகிழ்ச்சியோடு இராஜமாபுரத்திலே யிருந்து அரசு செலுத்திவந்தான்.



# அத்தியாயம்-3

## ஜீவகன் உற்பத்தி

இனி, எந்திர மயிற்பொறியிலேறிச் சென்ற விஜயை என்ன கதி அடைந்தாளென்று நோக்குவாம். முன்னே கூறிய படி சச்சந்தனால் மயிற்பொறியிலேற்றி யனுப்பப்பட்ட விஜயமாதேவி, அரசனைப் பிரிந்துசென்றும் வருந்த மிகுதியால் செயலற்று வலிகுறைந்து அம் மயிற் பொறியின் வலப் பக்கத்தை விசைபாக முறுக்கமுடியாமல் இலகுவாக முறுக்கி அதன்மேற் சாய்ந்தபடியே மெதுவாகச் சென்றாள். அவ்வாறு சென்று சிறிது தூரங் கடந்தபின், சச்சந்தன் இறந்த சமயத்தில் கட்டியங்காரன் முழக்குவித்த வெற்றி முரசொலியானது அவள் செவியிற் கேட்டது. அதைக் கேட்டவுடனே அந்த மாது சிரோமணி, " ஆ தெய்வமே ! கட்டியங்காரனுடைய வெற்றி முரசம் முழங்குகின்றது ; நிச்சயமாக என் நாயகர் இறந்துபோயினர்; இனி இந்தப் பாவியாகிய நான் எதற்காக உயிர்வைத்திருக்கவேண்டும்" என்று வேலெறிபட்ட பெண்மானைப்போல அந்தரத்திலேயே மயங்கி மெய்ம்மறந்து அம் மயிற்பொறியின் மேற் சாய்ந்தபடியே மூர்ச்சித்து விட்டாள். அவ்வாறு மூர்ச்சித்தவுடனே அவள் கையினால் வலப்பக்கமாக முறுக்கப்பட்டுக் கொண்டிருந்த எந்திரமானது அவள் கையைவிட்டு நழுவி விட்டது. அங்ஙனமாகவே அது தானாகவே இடப்பக்கஞ் சுழல ஆரம்பித்தது. அதனால் அம் மயில் தானாகவே கீழ் இறங்கி, எங்கும் பிணப்புகை சூழ்ந்து, கழுகுகளும், நரிகளும், நாய்களும், பேய்களும் நிறைந்து, மிகவும் பயங்கரத்தை விளைவிக்கத்தக்க ஒரு சுடுகாட்டிற் சேர்ந்தது. அது ஒரு இயற்கை மயில் இறங்குவதுபோலவே இறங்கி இரண்டு கால்களையுஞ் சேர்த்துப் பூமியிற் போய் மெதுவாக

நின்றபடியால், விஜயமாதேவி மூர்ச்சித்திருந்தும் அவளுக்கு எவ்வித அபாயமும் உண்டாகவில்லை. பின்னே நடக்க வேண்டிய காரியங்களை உத்தேசித்து இவள், தன்தமையனாகிய கோவிந்த ராஜனுக்கும், பகைவனாகிய கட்டியங்காரனுக்கும் அகப்படாமலிருத்தலே தகுதி யென்று கருதிய ஒரு தேவதையின் சகாயத்தினாலேயே இவள் அவ்வாறு அவர்களுக்கு அகப்படாமலும் அபாய மின்றியும் அச்சுடுகாட்டிற் சேர்ந்தாள்.

அவ்வாறு சேர்ந்தவுடனே, அம் மயிற் பொறியின் மேலிருந்த விஜயைக்கு மயக்கம் நீங்கிச் சிறிது உணர்ச்சி யுண்டாயிற்று. அங்ஙனமுண்டாகவே அவள், இறந்து போன அரசனுக்காக இரங்கி, கண்ணீரானது தன்னுடைய நெஞ்சகத்தை நனைக்கும்படி அழுது, தனக்கு வருத்தம் அதிகரித்திருந்தபடியினாலே சித்தப் பிரமையடைந்து அங்குள்ள பேய் முதலியவற்றிற்கும் அஞ்சாமல், தன்னுடைய துணையைப் பிரிந்த அன்றிலைப்போலப் புலம்பிக்கொண்டிருந்தாள். சிறந்த மாளிகையிலே ஒரு தேவஸ்திரியைப்போல வசித்து வந்த அவள் அவ்வாறு சுடுகாட்டில் தனித்துப் பேயோடு பேயாயிருந்து வருந்தும்போது, கர்ப்பம் முதிர்ந்து பிரசவிக்கும் சமயம் வந்தபடியால் அவளுக்கு வேதனை அதிகரித்தது; அந்தோ! அந்நிலைமையில் அவள் என் செய்வாள்! நெருப்பிலெரிந்து வெடித்துப் பல வெண்மையான தலைகள் நிறைந்து கிடந்த அச்சுடுகாட்டினுள்ளே யாதொரு திக்குமின்றிப் பிரசவவேதனை யடைந்த அவளுக்குண்டான துன்பத்திற்கோ அளவில்லை. அவள் இத்தகைய துன்பத்தை அனுபவிக்கும்போது, அச் சுடுகாட்டில் எங்கும் இரத்தினங்களே விளக்குகளாகப் பிரகாசிக்கவும், கிருபை பொருந்திய தேவதைகளெல்லாம் வணங்கி நிற்கவும், அவ்

விஜயமாதேவியின் துன்பமாகிய இருள் நீங்கவும், கட்டியங் காரனாகிய சந்திரன் ஒளிகுறைந்து கெடவும், இளஞ்சூரிய னைப்போல் ஓர் அழகிய புத்திரன் அவளிடத்தேபிறந்தான். அவ்வாறு பிறந்தவுடனே அவ் விஜயை அடைந்திருந்த பிரசவ வேதனையானது நீங்கிற்று.

அதன்மேல் அவ் விஜயை, பகைவன் கையில் அகப் படாமல் சச்சந்தனால் காப்பாற்றி யனுப்பப்பட்ட அப் புத் திரனை விருப்பத்தோடு பார்த்து, தன்னிடத்தேபக்ஷத்தால் சுரந்த பாலினால், அவனுக்குத் திலகமிட்டு, அரசர்களுக் கெல்லாம் திலகம் போன்ற அப்பாலகனை மடிமீது வைத் தாள். அப்படி வைத்த மாத்திரத்திலே பல பாங்கிகள் உப சரிக்க மிக்க சிறப்போடு அந்தப்புரத்திற் பிறக்கவேண்டிய அவன் அவ்வாறு சுடுகாட்டில் உபசரிப்பாரின்றிப் பிறந்த தன்மையை நினைக்க அவளுக்கு அடக்க முடியாத துக்க முண்டாயிற்று. அதனால் அவள், அப்புத்திரனை நோக்கி, “என்னுயிர்க் குயிரான செல்வனே! நீ பிறந்த மாத்திரத் திலே அரண்மனையில் சேர்திடர்க ளெல்லோருங் கூடி ஜாத கம் கணிக்க, உனது தந்தை, நீ பிறந்தசெய்தியை எல்லாத் தேசத் தரசர்களு மறியும்படி எழுதியனுப்பி, பெருமங்க லம் பாடுவோராகிய வித்வான்களுக்கு, யானைகளையும், குதிரைகளையும், திரவியங்களையும், மேற் போர்வைகளையும் ஆசீசதிரக் கொடுத்து, அதன்மேல் பக்கத்தில் நிற்கும் மந்திரிமார்களை நோக்கி, ‘குழந்தைகளுக்குப் பன்னிரண்டு வருஷங்கள் வரை பேய் முதலியவைகளா லேற்படும் பாலக் கிரகாரிஷ்டம் உண்டாகு மாதலினாலே அத் தோஷம் நம் புத்திரனுக்கு உண்டாகாதிருப்பதற்குச் சாந்தியாக அந்தப் பன்னிரண்டு வருஷங்கள் கழியும்வரை நமது நாட்டில் பகுதியை வாங்காமல்தானமாகவிட்டு விடுங்கள்; தர்மசாலை,

கோவில்கள் முதலியவைகளைப் பாலனுடைய ஞாபகார்த்த மாகக் கட்டி நிலை நிறுத்துங்கள்; சிறைப்பட்டிருப்பவர் களை வெளியில் விடுத்து அச்சிறைக் கூடங்களை இடித்துப் பரிசுத்தமான இடமாக்குங்கள்; திரவிய சாலைகளைத் திறந்து வேண்டிய திரவியங்களை எடுத்துக் கொண்டு போய், இராஜகுமாரன் பிறந்தா னென்று சந்தோஷித்து யாசிப்பவர்களுக் கெல்லாம் தானஞ் செய்யுங்கள்; நம் குழந்தைக்கு எழு பிறப்பினு முண்டாகுந் தீவினைகளும் நீங்கும் பொருட்டு, நமது பண்டக சாலையைத் திறந்துவிட்டு அதிலுள்ள தானியங்கள், ஆடையாபரணங்கள் முதலிய வற்றை யெல்லாம் ஜனங்கள் அவரவர்களின் ஆசை தீரு மட்டும் எழு நாட்கள் வரை வாரிக் கொள்ளும்படி செய் யுங்கள்; மனிதர் தேகத்தில் மூன்றரைக் கோடி உரோ மங்கள் உள்ளன வாதலின், ஒன்றுக்கு ஒரு பொன் விகித மாக மூன்றரைக் கோடி பொன்களை யாசகர்க்குக் கொடுங் கள்' என்று சொல்லி அளவற்ற தான தருமங்களையும், சிறப்புக்களையுஞ் செய்து சந்தோஷங் கொண்டாடு வாரே; அவ்வளவு சிறப்புக்களுடனே பிறக்கவேண்டிய நீ இவ்வாறு நிராதரவாய்ச் சுடுகாட்டிற் பிறந்தனையே; அடா என் கண்மணியே! இப்பொழுது உனக்கு இங்கே உலாவு கின்ற நரிகளின் கூக்குரலே மத்தள வோசை யாயிற்று; இறந்த பிணங்களுக்கு அடுக்கி எரிகின்ற கொள்ளிக் கட் டைகளே விளக்காயின; இச் சுடு காடே நாடக மேடை யாயிற்று; நிழல் போல் இங்கே அசைந்தாடும் பேய்களே நிருத்த மாதர்களாயின; இங்குக் கூவும் கூகைகளே அந்த ஆட்டத்தைப் புகழ்வோராயின; எனது செல்வனே! இவை தாமோ நீ பிறந்த சந்தோஷத்திற்கு நடக்கும் சிறப்புக்கள்! பூமியை ஆளப் பிறந்த என் புதல்வனே நீ இவ்வாறு தாழ்ந்த நிலைமையோடு பிறந்து கிடக்கின்ற

இடமும், முன்னே நமக்குச் சொந்தமா யிருந்தாலும் இப்போது பகைவனுடைய இடமா யிருக்கின்றது; மெல்லிய பஞ்சணையிற் படுக்கக்கூடிய உனது படுக்கையும் பிணப்புகை நாறும் சுடுகாட்டுச் சாம்பலா யிருக்கின்றது; உன்னைப்பெற்ற பாவியாகிய யானும் வாய்ப்பேச்சுப் பேசுவதற்கும் ஒரு துணையில்லாத அநாதையா யிருக்கின்றேன்; உன்னை எங்கேனும் ஒரு நகரத்திற்கு எடுத்துச் செல்லலாமென்றாலோ வழியொன்றுந் தெரியாமல் இருள் சூழ்ந்திருக்கின்றது. உன்னை இனி இன்னவிதமாகத் தான் நான் வளர்ப்பேன் என்பதும் எனக்கு விளங்கவில்லை; ஐயோ! நான் என்னதான் செய்வேன்" என்று கூவிப் பின்னரும் தன்னுயிரை நோக்கி, "எனது கொடிய உயிரே! எனக்கும் என் புதல்வனுக்கும் நேர்ந்திருக்கின்ற இக்கதியைப் பார்த்தும் நீ இன்னும் என்னை விட்டு நீங்கிச் செல்லாதிருக்கின்றாய்" என்று சொல்லி மீண்டும் புத்திரனை நோக்கி, "சிந்தாமணியே! என் புத்திர ரத்தினமே! துணையின்றி இங்ஙனம் வருந்துகின்ற எனக்குத் தேறுதலான வார்த்தை யொன்றேனும் கூறாமலிருக்கின்றாயே; நீயும், அசோக விருக்ஷத்தினடியில் வீற்றிருக்கும் அறக்கடவுளுமே என் துன்பத்தை நீக்கி என்னை ஆதரிக்கக்கூடியவர்கள்; அப்படி யிருந்தும் நீ ஒரு வார்த்தையேனும் பேசாதிருப்பது அழகாமோ? உன்னைக் காப்பாற்றும் பொருட்டே உன் தந்தையின் ஏவலால் நான் மயிற்பொறியி லேறிவந்தேன்; நீ பிறந்தவுடனே அவர் இறந்த துக்கத்தையும் மறந்தேன்; இனி எனக்கு நீயே துணையெனத் துணிந்தேன்; ஆதலால், எனக்குத் தேறுதலான ஒரு வார்த்தை கூறுவாய்" என்று பலவாறு புலம்பி அழுதாள். அப்படி மேலும் மேலும் அழுதும் அங்கே "ஏனம்மா அழுகின்றாய்?" என்று கேட்பாரொருவருமில்லை. அதனால் அவள், "நாம் எவ்வளவு அழுதாலும்

நம் துக்கம் நீங்கப் போகிறதில்லை. எல்லாம் கடவுளிட்ட கட்டளைப் படியே நடக்கும்'' என்று தனக்குள் தானே தேறுதலடைந்து ஏங்கிப் பெருமூச்சு விட்டுக்கொண் டிருந்தாள். அவள் அவ்வாறு சிறிது தேறுதலடைந் திருந்தாலும், புத்திரனை எவ்வாறு வளர்ப்பது என்ற கவலைமாத்திரம் அவள் மனத்தை விட்டகல வில்லை.

இப்படி யிருக்கும்போது, முன்னே விஜயமாதேவியை மயிற்பொறியில் அபாய மின்றிக் கொண்டுவந்து அங்கே சேர்த்த தேவதையானது, அவளுடைய துன்பத்தை நீக்குதற்கும், பின்னே நடக்கவேண்டிய காரியங்களை நிறைவேற்றுதற்கும் நினைவுகொண்டு, விஜயை அந்தப் புரத்திலே யிருக்குங் காலத்தில் அவளுடனே நீங்காதிருந்த கூனியாகிய சண்பகமாலையின் வடிவந் தாங்கி அவ் விஜயமாதேவியின் பக்கத்திற் சென்றது. அவ்வுருவத்தைப் பார்த்தவுடனே, விஜயை, சண்பகமாலை யென்றே நினைத்து, நடுக்கடலில் தெப்பம் அகப்பட்டது போலத் தெளிவடைந்து, அதனை நோக்கி, "தோழி! சண்பகமாலா! பகைவனுக்குத் தெரியாமல் யானிருக்கும் இவ்விடத்தை யறிந்து இங்கே எப்படி வந்து என்னைக் கண்டாய்? உன்னுடைய அன்பே அன்பு! இந்த நடுநிசியில் புத்திரனைப் பெற்றுத் துணையின்றி அஞ்சி வருந்திய எனக்குத் துணைபுரிய வந்த உன்னை நான் எம்மையினும் மறவேன்; இனி நான் பிழைக்கும் மார்க்கத்தை நீ தான் எனக்குத் தெரிவித்தல் வேண்டும்'' என்று உபசார வார்த்தைகள் கூறினள். இதைக் கேட்டவுடனே அந்தத் தேவதை, சண்பகமாலை போலவே நடித்து, விஜயமாதேவியை நோக்கி, "என தன்னையே! நீ பிரசவிக்குங் காலத்தில் எத்தனையோ மருத்துவ மாதர்கள் சேர்ந்து நினக் குபசாரம் புரிவார்கள்; அப்படி யிருந்தும் தீவினைவச





த்தால் ஒரு திக்கற்ற ஏழைபோல இச் சுடுகாட்டில் தனித்திருந்து புத்திரனைப்பெற்றனை; நானும் பாவியாகையினாலே இந் நிலைமையில் வந்து உன்னைக் கண்டேன். ஆயினும் இனி நீ வருந்த வேண்டாம்; நான் உனக்குத் துணைபுரிகின்றேன்; பிற்காலத்தில் இப் புத்திரனே இவ்வுலகத்தை யாள்வான்; நம் பகைவனாகிய கட்டியங்காரனைக் கொல்வான்; நான் கூறியபடி கட்டியங்காரனையும் கொல்வதற்கு இவனை எடுத்து வளர்ப்பதற்காக இப்பொழுது இங்கே ஒருமனிதன் வருவான்; புத்திரன் அவனிடம் சென்றால் மாத்திரந்தான் பகை முடிப்பான்; நீ இப்பிள்ளையைப் பிரிவதற்கு மனங்கலங்காதே; எப்படியேனும் நம் பகைவனை வெல்வதே நமக்கு மேன்மை; ஆதலின் அவன் புதல்வனை எடுத்துச் செல்வதற்கேதுவாக நாம் நடந்துகொள்ள வேண்டும்; நாம் இங்கே இருந்தால், அவன் இப் பிள்ளையை எடுப்பதற்கு மனங்கூசுவான்; அவன், யாதொரு அச்சமுமின்றி இம் மதலையை எடுத்துச் செல்லுமாறு நாம் இக் குழந்தையை விட்டு நீங்கி மறைந்திருக்கவேண்டும்" என்று கூறிற்று.

இக்காரியம் விஜயைக்கு உத்தமமானதாய்த் தோற்றிய படியால், அவள், "எப்படியேனும் நம் புத்திரன் வளர்ந்து பகை முடித்தால் அதுவே போதும்" என்று அதற்கிசைந்தாள். அவ்வாறிசையவே அத் தேவதையானது ஒரு மர நிழலில் விஜயமாதேவிக்குத் தெரியாமல் ஒரு சயனத்தை உண்டாக்கி அதில் அக் குழந்தையை வாங்கிப் படுக்க வைத்து, "பகைவர்கள் உனக்கு அநேக இடர்களைச் செய்யினும் அவை யனைத்தும் நன்மையாகவே முடிக" என்று அப்புதல்வனை வாழ்த்தி, விஜயையை அவனுக்குப் பால் கொடுக்கச் செய்து, அதன்மேல் அப் புதல்வனை எடுத்துச் செல்பவன் அவன் இராஜபுத்திரனென்

றறிந்து ஜாக்கிரதையாக வளர்க்கும் பொருட்டு, விஜயை யின் கணவனாகிய சச்சந்தனது பெயர் எழுதப் பெற்ற இரத்தின மோதிரத்தை அப்புத்திரனுடைய விரலில் அணி ந்துவிட்டு விஜயமாதேவியை அழைத்துக்கொண்டு போய்ப் பக்கத்தில் ஒரு மறைவான இடத்தில் நிறுத்தி, தானும் அவளுடனே மறைந்து நின்றது. அப்போது விஜயை தன் புத்திரனுடைய பிரிவுக் காற்றாது வருந்தி அவனை நோக்கி "என் அருந்தவப் புதல்வா ! உன்னைப் பெறுவத ற்கு மாத்திரம் நான் நல்வினை செய்தேனே யன்றி வளர்ப் பதற் குரிய தவத்தைச் செய்திலேன் ; ஐயோ ! கொடிய மிருகங்கள் சூழ்ந்த இச் சுடுகாட்டிலே நீ யாரும் துணையின் றிக் கிடக்கின்றாயே ; இக் கதியைப் பார்ப்பதற்கோ யான் பெண் ஜன்ம மெடுத்தேன்" என்று அழுதபடியே ஒரு மரக் கிளையைப் பற்றிக்கொண்டு நின்றாள்.

இப்படி அவ்விருவரும் நிற்கும் போது, இராஜமா புரத்திலே யுள்ள கந்துக்கடன் என்னும் வைசியன், இற ந்து போன தன் சிறு புதல்வனைக் கொண்டு வந்து அச் சுடு காட்டில் அடக்கம் செய்து விட்டுத் திரும்பி வந்தான். அப்படி வரும் போது அங்கே போடப் பட்டிருந்த விஜ யையின் புதல்வனைக் கண்டான். அங்ஙனம் பார்த்த மாத் திரத்திலே, "ஆ ! ஆ ! ! என்ன அதிசயம்! இங்கே இளஞ் சூரியனைப் போலவே ஒரு புத்திரன் கிடக்கின்றான் ; இக் குழந்தை இவ்விடம் வந்து தனித்துக் கிடத்தற்குக் கார ணம் யாது?" என்று விரைந்து அப் புதல்வன் சமீபத்திற் சென்று நன்றாக அவனை உற்று நோக்கி அவனுடைய விர லில் அரசனுடைய முத்திரை மோதிரம் விளங்கக் கண்டு, "ஆ ! இவன் இராஜ புத்திரன் ; இப்பொழுது பகை மூண் டிருப்பதால் இவன் எவராலோ இங்கு இரகசியமாகக்

கொண்டு வந்து சேர்க்கப்பட் டிருக்கின்றான்; இவன் இராஜபுத்திர னென்பதைப் பகைவர் உணர்ந்தால் தீங்குண்டாகும்; நம் பிள்ளை இறந்ததற்குப் பதிலாகவேதெய்வ சங்கற்பத்தால் இவன் நமக்குக் கிடைத் திருக்கின்றான்; ஆதலின், இவனை இரகசியமாக நாம் எடுத்துச் சென்று வளர்க்க வேண்டும்" என்று ஆலோசித்து உடனே அம் முத்திரை மோதிரத்தைக் கழற்றி மறைத்து அப் புத்திரனைத் தன் கைகளால் எடுத்தான். அப்போது அப் புதல்வன் தும்மினான். அவ்வாறு தும்மிய வுடனே 'ஜீவித்திருப்பாய்' என்று பொருள் படும் 'ஜீவ' என்னும் வார்த்தையைக் கொண்டு கூனி வடிவா யிருந்த தேவதையானது, தனது ஒற்றைக் குரலால், கந்துக்கடன் செவிக்குக் கேட்கும்படி 'ஜீவ' என்று வாழ்த்திற்று; விஜயை பயத்தினால் தன்னுடைய குரல் வெளிக்குத் தோற்றாமல் மனத்தினுள்ளேயே அவ் வார்த்தையால் வாழ்த்தினாள். கந்துக்கடன் தேவதை கூறிய தொனியை, தெய்வச் செயலால் உண்டான அசரீரீ யென்றும், அதுவே நல் நிமித்த மென்றும் கருதினான். அவன் இவ்வாறு கருதிப் புத்திரனை எடுத்த வுடனே விஜயை அதைக் கண்டு, 'புத்திரன் முகத்தைப் பார்க்கும் பாக்கியத்தை நம் நாயகர் பெறவில்லையே' என்று தன் கணவனை நினைத்து வருந்திப் பின்பு தெய்வத்தை வணங்கிப் புதல்வனை நோக்கி, "உன்னுடைய பழைய பகையைச் சுற்றத்தோடும் ஒழித்து ஜயம் பெறுவாயாக" என்று வாழ்த்தினாள். அதன்மேல் கந்துக்கடன் அப் புதல்வனைக் கையி லெடுத்தபடியே சந்தோஷித்துத் தன் வீடுபோய்ச் சேர்ந்தான்.

அங்ஙனம் போய்ச் சேர்ந்த வுடன், புத்திரன் இறந்த சோகத்தாலே மிகவும் வருந்தி யிருந்த தன் மனைவி

யாகிய சுநந்தையை அழைத்து, "குற்ற மற்ற கற்பினை யுடைய பெண்ணே! இறந்த நின் புதல்வன் மீண்டும் பிழைத்தெழுந்தான்; இதோ அவனை எடுத்து வந்தேன்; இனி நீ வருத்த மொழிவாயாக" என்று, அப் பிள்ளையை அவள் வேறு பிள்ளை யென்று கருதாதிருக்கும் படி அவனுக்கு விஜய மாதேவியால் இடப்பட் டிருந்த திலகத்தை அழித்து விட்டு அவனை அவள் கையிற் கொடுத்தான். இச் சமயத்தில் இந்தக் கந்துக்கடனும் சுநந்தையும் புத்திரனை யிழந்து வருந்தியது போலவே இதற்கு முன்னும் சில புத்திரர்களைப் பெற்றிழந்து வருந்தி யிருக்குஞ் சமயத்தில் ஒரு முனிவர் வந்து இவர்களை நோக்கி, "நீங்கள் இனிமேல் ஒரு புண்ணியம் பொருந்திய புத்திரனைப் பெறுவீர்கள்; அவன் எப்பொழுதும் நிலைத்திருப்பான்; அவன் பொருட்டு எல்லோரும் இரங்கும்படி விசேஷ மொன்றும் நடக்கும்; ஆதலின், இனி நீர் வருந்தாதீர்" என் றுரைத்துச் சென்றார். அவர் மொழிப்படி தான் இந்தப் பிள்ளை இவர்களிடத்திற் சேர்ந்தான். மேற் கூறிய படி கந்துக்கடன் புத்திரனைச் சுநந்தை கையிற் கொடுக்கும்போது இம் முனிவர் வாக்கையும் ஞாபகப் படுத்திக் கொடுத்தான். அவளும் நீங்கின உயிரை மீண்டும் பெற்றவர்களைப் போல உள்ளத்தில் மகிழ்ச்சி மிக்கு, குழந்தையை வாங்கினாள். அங்ஙனம் அவள் கைக் கொண்ட மாத்திரத்தில் வலம்புரிச் சங்குகள் முழங்கின; இன்னும் பல சந்தோஷ வாத்தியங்களெல்லாம் முழங்கின; ஆங்குள்ள பெண்களெல்லோரும், சந்தோஷ மிகுதியினாலே, யாவரும் கைக் கொள்ளும் படி பொன்களை வாரி யிறைத்தார்கள்; இன்னும் பல சந்தோஷ காரியங்களெல்லாம் கந்துக் கடன் வீட்டில் நிகழ்ந்தன.

சச்சந்த மன்னன் இறந்து நகர மெங்கும் அழுகைக் குரல் மிகுந்திருக்கும் அச் சமயத்தில், கந்துக்கடன் வீட்டில் மாத்திரம் அவ்வாறு சந்தோஷ முழக்கம் உண்டாவதைக் கட்டியங்காரன் கேட்டு, அதனைப் புத்திரப் பேற்றினுலுண்டாகின்ற சந்தோஷ கோஷ மென்று நினையாமல் தான் அரசனைக் கொன்று ஜெயம் பெற்றதற்காகக் கந்துக்கடன் கொண்டாடுகின்ற சந்தோஷ முழக்க மென்று நினைத்து, 'அரசன் இறந்த விசனத்தினுலே எல்லா ஜனங்களும் அழுதுகொண்டிருக்கும் இந்தச் சமயத்தில் கந்துக்கடன் மாத்திரம் எழு பிறப்பிலும் நீங்காத என்னுடைய சிநேகத்தைப் பெற விரும்பி நான் கொண்ட ஜயத்திற்காக வாத்தியங்களை முழக்கிச் சந்தோஷங் கொண்டாடுகிறுன்; இவன் ஒருவனே எனக்குத் தகுந்த நட்பாளன்'' என்று மகிழ்ந்து அப்பொழுதே அளவற்ற திரவியங்களைக் கந்துக்கடனுக்கு அனுப்பினுன். கந்துக்கடனும் கட்டியங்காரனுடைய எண்ணத்தை யுணர்ந்து, அவன் மூடமதியால் அவற்றை அனுப்பினுனென்று புன் முறுவல் கொண்டு தான் பெற்ற அவ்வரச புத்திரன்விருத்தியடைந்து போர்க்களத்தில் அக் கட்டியங்காரனுகிய பகைவனையே வென்று தன் சுதந்தரத்தைக் கொள்ளும்படி, அவ் வஞ்சகன் அனுப்பிய திரவியங்களையும், தன்னுடைய பொக்கிஷ சாலையிலிருந்த திரவியங்களையும் யாசகர்க்கு வேண்டிய வரை கொடுத்து, மேலும் பலவகையான தான தருமங்களைச் செய்து, அவனைப் பகைவனுகிய கட்டியங்காரனுக்குத் தெரியாமல் வளர்த்து விருத்தி யடையச் செய்து, போர் முடித்தற்கு அவனுக்குத் தக்க பக்கத் துணைகளையும் சேர்க்க வேண்டிய விஷயத்தைப் பற்றி, 'இவனை எப்படி இரகசியமாக விருத்திக்குக் கொண்டு வரலாம்' என்று யோசித்துக் கொண்டிருந்தான்.

## அத்தியாயம்-4

## விஜயை துறவு

கந்துக்கடன் குழந்தையை எடுத்துக்கொண்டு போன பிறகு விஜயமாதேவி, புத்திரனைப் பெற்றவுடனே பிரிந்த வருத்தத்தினால், "ஐயோ! என் அருமைப்புதல்வ! நின் தந்தையைப் பிரிந்து நான் மிக்க துயர்க் கடலில் அழுந்தியும், நின்னைப் பெற்றெடுத்தவுடன் நீயாவது எனக்குத் துணையாவாய் என்று ஒருவாறு மனந்தேறி யிருந்தேனே: அப்படியிருக்க இப்பொழுது நீயும் பிரிந்துவிட்டனையே; இனி எனக்கு எவர் துணையாவர் ஐய? உன்னை நான்காணும் நாள் எந்நாளோ: என்னைப் போன்ற பாவியரும் உலகில் உண்டோ" என்று பலவாறு புலம்பி யழுது சூத்திரமற்ற பாவையைப் போல மயங்கி வெறுந்தரையிலே திடீரென வீழ்ந்தாள். அப்படி விழுந்த அவளைத் தூக்கி, கூனிவடிவமாயிருந்த தேவதை மடிமீது வைத்துக்கொண்டு, "அம்மே! நீ வருந்தாதே; புத்திரன் பிரிந்ததனால் பாதகமில்லை; அவன் பிரிவால் உனக்கும் அவனுக்கும் பின்னால் நன்மையே ஏற்படப் போகின்றது; அவன் வளர்ந்து பகைவனை வென்று உங்களரசை மீண்டும் பெறப்போகின்றான்; அப்படியிருக்க நீ ஏன் கவலைப்படுகின்றாய்" என்று பல இனிய வசனங்களைக் கூறித் தேற்றிற்று. அதன்மேல் விஜயை வருத்தம் நீங்கியவளாய், மேல் நடக்கவேண்டியவைகளை ஆலோசித்து அக் கூனியை நோக்கி "அன்னையே! உன் அமுதமொழிகளால் நான் விசனம் நீங்கினேன்; இனிமேல் நான் செய்யத்தக்க காரியங்கள் யாவை?" என்று வினவினாள். அதற்குக் கூனி, "உயர்ந்த கற்பினை யுடைய மாதே! சமீபத்தில் அமரிகை யென்னும் நதி யொன்றிருக்கின்றது; நாம் இப்பொழுதே அந் நதியைச் சார்ந்து ஆங்குள்ள மணல்

மேடையில் தங்கி இளைப்பாறுவோம்; அதன்மேல் அங் கிருந்து விடிந்தபின் புறப்பட்டு அப்பாற் செல்லுவோம்; அவ்வாறு செல்லும்போது அமரிகைக் கப்பால் ஐம்பது யோசனை தூரத்தில் மிக்கசெல்வம் பொருந்திய தரணிதிலக மென்னும் நகர் எதிர்ப்படும்; அங்கே நம்மவர்கள் வாசஞ் செய்கின்றன ராதலின், நாம் இந்தத் தாழ்ந்த நிலைமை யோடு அந் நகர்க்குச் செல்ல லாகாது; குவளை மலர்கள் நிறைந்த ஆறுகளும், நீரோடைகளும், பொய்கைகளும், சோலைகளும் நெருங்கிய தண்டகாரணிய மென்னும் வனம் அதற்கப்பால் உளது; நாம் அவ் வனத்திற் கேகி ஆங்குள்ள முனிவ ரிருப்பிடத்திற் சேர்ந்திருக்க வேண்டும்; அங்குச் சென்றால் மாத்திரந்தான் நம் மனக்கவலை யெல்லாம் ஒழி யும்" என்று கூறினாள்.

விஜயை அவ்வாறே செய்தற் கிசைந்து, இரத்தினங் கள் நிறைந்த ஒரு பவளக் கொம்பின்மேல் சிலந்திப்பூச்சி யானது பட்டு நூலைச் சுற்றிவைத்த தோற்றத்தைப்போல், இரத்தினாபரணங்கள் நிறைந்த தன் தேகமுழுவதும் மறை யும்படி போர்வையால் போர்த்துக்கொண்டு, அரத்தைப் போல் உறுத்தி வருத்தஞ் செய்யக்கூடிய பரற்கற்கள் மிகு ந்த காட்டிலே தாமரை மலர்போலும் மெல்லிய பாதங்கள் பட்டு வருந்த, கொடிபோன்ற இடை அசைய, கைகளை வீசி ஒரு மயில் நடந்ததுபோலக் கூனியுடன் நடந்தாள். அப்பொழுது அவளுடைய முகத்தின் ஒளியும், ஆபரணங் களின் பிரகாசமும் விளக்குகளைப் போன்று இருளை நீக்கி அவளுக்கு வழி காட்டின. அப்பிரகாசத்தின் உதவி கொண்டு நடந்த அவளும் கூனியும், காடுகளையும் மலைகளை யுங்கடந்து அமரிகை யாற்றைச்சார்ந்து, அதன்நடுவேயுள்ள ஒரு திட்டில் தங்கினார்கள். அங்குப்போய்ச் சேர்ந்தவுடன்

கூனி கூறியபடியே இளைப்பு நீங்கும்படி விஜயை நித்திரை செய்தாள். கூனியோ அவளுக்குக் காவலிருந்தாள். அவ்வாறு விஜயமாதேவி நித்திரைசெய்து சிறிதுநேரங் கடந்தபின், சூரியன் கீழ்த்திசையில் உதயஞ்செய்ய, உலகத்திற் பரவியிருந்தஇருளானது நீங்கி விடிந்தது. அவ்வாறு விடிந்ததும் தனக்கேற்பட்டிருந்த அளவற்ற களைப்பினால் விஜயை நித்திரை தெளியாமல், ஒரு மின்னற் கொடியானது ஒரு சோலையின் மத்தியிலுள்ள மேகத்திற் படுத்திருந்ததைப் போல சோலையாற் சூழப்பட்ட அவ் வமரிகையாற்றின்திடரிலே படுத்திருந்தாள். அப்போது கூனியானவள்பொழுது விடிந்ததையும், விஜயை எழுந்திராமல் படுத்திருப்பதையும் உணர்ந்து அவளை நோக்கி, "தாயே ! சூரியன் உதயமாயினான்; இனி நித்திரைசெய்தல் தகாது; ஆதலின்எழுந்திருப்பாயாக" என்று அவளுடைய பாதங்களைத் தடவினாள். அப்பொழுது விஜயை தன் நாயகனாகிய சச்சந்தனுடன் வார்த்தை யாடிக்கொண் டிருப்பதுபோலச் சொப்பனங் கண்டுகொண்டு படுத்திருந்தபடியால், அச்சொப்பனவல்லை யுடனே விழித்து, அத் தோற்றம் பொய்த் தோற்றமாய்ப் போனபடியினாலே திடுக்கிட்டு வருந்தி, 'அந்தோ !' என்னும் பரிதாபக் குரலுடனே முகத்தில் ஒளியிழந்து, பிரகாசமில்லாத ஒரு சந்திரன் இப்பூமியில் முளைத்தெழுவது போல எழுந்தாள். அப்படி யெழுந்தவுடனே, அங்குள்ள மான் கூட்டங்களும், அன்னங்களும், மயில்களும், குயில்களும், விஜயமாதேவியின் வாட்டத்தை நோக்கி, அவளுக்காக வருந்தி அழுவதுபோல ஆர்ப்பரித்தன. அதன்மேல், தன் பழைய தீவினையினாலே அதுவரை துன்பத்தையடைந்த அவ் விஜயமாதேவியானவள், அத் தீவினை அன்றோடு நீங்கியபடியால் தன் துயரங்களெல்லாம் நீங்கி, மேலே நல்வினை வந்து கூடியதால் நன்மையை அடையும் பொருட்டு

அந்தக் கூனியுடனே அவ்விடத்தினின்றும் பிரயாணப் பட்டு, தண்டகாரணியத்திலுள்ள முனிவர் ஆசிரமத்திற் போய்ச் சேர்ந்தாள்.

அவ்வாறு சேர்ந்த வுடனே அங்கிருந்த தவ மாதர்க ளெல்லோரும், ஒன்ருகக் கூடி, விஜயமாதேவியை அன்பு டனே எதிர் கொண்டழைத்துத் தங்கள் ஆசிரமத்தில் உட் காருவித்து, உபசார வார்த்தைகள் கூறி அவளுக்குத் தேவ தையின் சகாயத்தால் வருத்தமில்லா திருந்தும், காட்டில் வழி நடந்து வந்ததனல் மிகுந்த வருத்த மிருக்கு மென்று நினைத்து, அவளுடைய பாதங்களின் நோவுக்குச் செய்யத் தக்க பரிகாரங்களைச் செய்து, அவள் அங்குச் சென்றதனல் தவஞ் செய்தல் குறித்தே வந்திருப்பா ளென்று குறிப்பா லுணர்ந்து, தவஞ் செய்தற்கு முன்பு அனுஷ்டிக்கத் தகுந்த நோன்பை அவளுக்கு ஏற்படுத்தி அவளை அனுஷ்டிக்கும்படி செய்து, அதன் மேல் வளர் பிறையிலே நல்ல சுப தினத்தில் அந் நோன்பிற்குத் தகுதி யாக ஆபரணங்களைக் களைந்து, அதற் குரிய ஆசாரங்களைக் கைக்கொள்ளு மாறு அவளுக்குக் கட்டளை யிட்டார்கள். அவர்களுடைய கட்டளையைப் பெற்ற வுடனே விஜயை, தலை யணிகளை யெல்லாம் நீக்கி, நெற்றியிலுள்ள திலகத்தை அழித்து, தேகத்திலுள்ள மற்ற ஆபரணங்களை யும் களைந்தாள். அப்படி அவள் எல்லாவற்றையும் நீக்கி நின்ற தோற்றத்தைக் கண்டு கூனி, 'உனக்கும் இக் கதி நேர்ந்ததே' என்று வருந்தி நோன்பிற்குத் தக்க காவி வஸ்திரத்தை அவளுக்கு உடுத்தினள். இவ்வாறு எல்லா அணிகளையும் நீக்கிக் காவி வஸ்திரம் தரித்துக் கொண்ட பின்பு, விஜயை, முன்னே அந்தப்புரத்தி லிருந்த காலத் தில் சேடியர் பாலொடு கலந்த அன்னத்தைப் பொற் கலத்

திட்டேந்தும் பொழுது அதையும் வேண்டா திருந்தது போய், குளநெல்லரிசி யுணவையும், அல்லி யரிசிக் கஞ்சியையும், இலைக் கறியையும் ஆகாரமாக உண்டு கொண்டு நோன்பை அநுஷ்டித்து வந்தாள். அப்படி யிருக்குங் காலத்தில், ஆசிரமத்தின் முற்றத்திலே, தவசிரேஷ்டர்களின் உணவுக்காகத் தவமாதர்களால் காய வைக்கப்பட் டிருந்த குளநெல்லையும் அல்லி யரிசியையும் தின்றுகொண் டிருக்கும் அணிலானது தன்னைக் கண்டு பயந்தோடி மரத்திலேறும்படி கவரிமானானது வந்து, அங்கு நின்ற காட்டுப் பசுவின் கன்றைத் தன் குட்டி யென்று நினைத்து அதனிடத்தே போய் அதற்குப் பாலூட்டும். அதைக் கண்டவுடன் விஜயை, "நம்முடைய புதல்வனும் இப்படியே அன்னியருடைய பாலை யுண்டு வளர்கின்றானன்றோ" என்று மகனை நினைத்து வருந்துவாள்.

இப்படி அவள் மகனை நினைத்து அடிக்கடி வருந்திக் கொண் டிருக்கும்போது கூனி வடிவாயிருந்த தேவதையானது, அவளைவிட்டு நீங்கக் கருதி ஒரு சமயம் அங்குள்ள தவமாதர்களை நோக்கி, 'அன்னைமாரே ! நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்னும் நால்வகைக் குணங்களும் ஓருரு வெடுத்து வந்தாற் போன்ற இந்தப் பெண்மணி உங்களுக்கு அடைக்கலம்; இவளை நீங்கள் எப்பொழுதும் பாதுகாத் தருளவேண்டும்" என்று கூறி விஜயமாதேவியை அவர்களிடம் அடைக்கலமாகச் சேர்த்து அவளுடைய நாட்டையும், குலத்தையும் அவர்களுக்கு வேறு விதமாக மறைத்துக் கூறி, விஜயைக்கு மேல் நடக்கவேண்டிய காரியங்களெல்லாம் கிரமமாக நடக்கும்படி அநுக்கிரகஞ் செய்து, அவளுடைய மனத்தையும் தன் பிரிவுக்கிணங்கும்படி திருப்பி, பின்னர் அவளை நோக்கி, "தாயே !

நான் சென்று நம்முடைய புத்திரனது க்ஷேமத்தை அறிந்துகொண்டு மீண்டும் இங்கு வருகின்றேன்; எனக்கு நீ விடை கொடுப்பாயாக'' என்று கூறிற்று. விஜயமா தேவியும், "அவ்வாறே போய்ப் புத்திரனைப் பார்த்து விரைவில் மீண்டு வருவாயாக'' என்று கூறி அத் தேவதை யை அனுப்பினாள். அதன்மேல் அந்தத் தேவதையானது, 'ஐயோ! நிராதரவான அந்தப் பெண்ணிடம், புத்திர னைப் பார்த்து வருகின்றேன் என்று சொல்லி அவளை ஏமாற்றி வந்து விட்டோமே; பல தினங்கள் வரை அவள் நம் வரவை எதிர் பார்த்துக்கொண் டிருப்பாளே; நாம் வரும் வழியைப் பார்த்துப் பார்த்து அவளுடைய மனம் என்ன பாடுபடுமோ' என்று அவள்மீது இரக்கமுற்று வருந்திக் கொண்டே போய்த் தன்னிருப்பிடமாகிய இராஜமாபுரத் துச் சுடுகாட்டிற் சேர்ந்தது.

இவ்வாறு தேவதை ஏமாற்றிச் சென்ற பிறகு அதனைத் தேவதையென் றுணராமல் தன் தோழியாகிய கூனியென்றே நினைத்திருந்த விஜயை, தான் சுற்றத்தை விட்டு நீங்கியிருக்கும் அப் பரிதாப நிலைமைக்காக மனந் தளர்ந்து, தன்னை ஏமாற்றிச் சென்ற தேவதை வரும் வழியைப் பார்த்து, 'சண்பகமாலை, புத்திரன் க்ஷேமத் தைத் தெரிந்துகொண்டு இன்று வருவாள் நாளைவருவாள்' என்று பல இரவும் பகலுங் கருதி அத் தவப் பள்ளியினிட த்தே வசித்துவந்தாள்.

——:0:——

# அத்தியாயம்-5

## ஜீவகன் வித்தியாப்பியாசம்

விஜயை இங்ஙனம் இப்படியிருக்க, இவள் புத்திரனை அன்றிரவு அடைந்து மகிழ்ந்திருந்த கந்துக்கடனும் சுநந்தையும், அதன்மேல் அப் புத்திரனுக்கு நாமகரணம் முதலிய சிறப்புக்களைச் செய்யத் தொடங்கியவர்களாய், பெரியோர்களை அழைத்து, அன்று கந்துக்கடன் அப் பிள்ளையை எடுக்குங் காலத்தில, 'ஜீவ' என்று தேவதை வாழ்த்திய சப்தத்தைக் கேட்டபடியால் அது தெய்வ வாக்கென்றும், அந்த வாக்கை முதற் குறிப்பாக வைத்துப் பெயரிடவேண்டுமென்றும் கருதி, அதற்குப் பொருத்தமாக அப் பெரியோர்களால், 'ஜீவகன்' எனப் பெயரிடுவித்து, அவனை அருமையாக வளர்த்து வந்தார்கள். அந்த ஜீவகனும் மகாவிஷ்ணு கிருஷ்ணாவதார காலத்தில், கம்சனைக் கொல்லும் பொருட்டு ஆயர்பாடியிலே நந்தகோன் மனையில் மறைந்து வளர்ந்ததுபோல, கந்துக்கடன் வீட்டில் கட்டியங்காரனைக் கொல்லும் பொருட்டு இராஜபுத்திரனென்னும்உண்மை வெளிப்படாமல் இரகசியமாக வளர்ந்து வந்தான். சில தினங்கள் கழிந்த பின்னர் சுநந்தைக்கு மற்றொரு புத்திரன் பிறந்தான். அவனுக்கு நந்தட்டனெனப் பெயரிட்டுக்கந்துக்கடன் அவனையும் ஜீவகனுடனேவளர்த்து வந்தான். அதன்மேல் கந்துக்கடன் வீட்டில் இளம்பருவமாயிருந்த ஜீவகனை, அக் கந்துக்கடன் கட்டளையால், பாராட்டுந்தாய், உணவூட்டுந்தாய், தாலாட்டும் தாய், வார்த்தை கற்பிக்கும் தாய், கையிலேந்தி வளர்க்குந்தாய் என்னும் ஐவகைத் தாய்மார்களும் மிக்க சிரத்தையோடு வளர்த்து வந்தமையினாலே அவன் வெகு சீக்கிரமாகவே வளர்ச்சியுற்று விளையாட்டுப் பருவத்தையடைந்து, சிறு பொற்சக

டம், சிறுபொற்றேர், செயற்கைப் பொன்யானை, பொற்குதிரை முதலியவற்றை அழகிய பொற்பூமியிலே செலுத்தி விளையாடிப் பாலாரிஷ்ட தோஷங்களி னின்றும் நீங்கி, வளர்பிறையைப் போலச் செழிப்புற்று வந்தான். அக்காலத்தில் அந்தப்புரத்தி லிருந்த அகப்பரிவார மகளிர் புத்திரராகிய ஐஞ்ஞாற்றுவரும், சாகர னென்னும் மந்திரியின் புத்திரனாகிய ஸ்ரீதத்தனும், சச்சந்தனுடைய அந்தணனாகிய அசலன் மகன் புத்திசேனனும், அம்மன்னனுக்குரிய செட்டியாகிய தனபாலன் புத்திரன் பதுமுகனும், அவ்வரசன் சிநேகனாகிய விசயதத்தன் மகன் தேவதத்தனும் ஆகிய ஐஞ்ஞாற்று நால்வரும், கந்துக்கடனுக்குப் பிறந்த நந்தட்டனும், சச்சந்தனுடைய அபிமான தாரபுத்திரர்களாகிய நபுல விபுலரும் ஜீவகனுக்குத் துணைவரானார்கள். அவன் எல்லோருக்கும் தலைவனானான். இவ்வாறு தனக்குத் துணைவர் சேரவே ஜீவகன், அத் துணைவரோடுகூடி, பொய்கையி லுள்ள பலபுஷ்பங்களில் உயர்ந்து விளங்கும் தாமரை மலரைப் போலவும், தேவர்களுடைய அறிவெல்லாந் திரண்டு ஒரு வடிவெடுத்தாற் போலவும், தனக்குப் பகையாகிய யானையைக் கொல்ல வளரும் ஒரு சிங்கக் குட்டியைப் போலவும் எல்லோரும் கொண்டாடும்படி அங்கு வசித்து வந்தான்.

அதன்மேல், கந்துக்கடனும், சுநந்தையும் ஜீவகனுடைய மிகுதிப்பாட்டை யுணர்ந்து மேன்மேலும் சந்தோஷமுற்றவர்களாய் அவனுக்குச் சௌள கன்மத்திற்கு முன்னால் நடத்தவேண்டிய சிறப்புக்களை யெல்லாம் செய்து, பின்னர் குடுமி வைத்தலாகிய அச் சௌள கன்மத்தையும், மற்றக் கன்மங்களையும் முறையே நிறைவேற்றினார்கள். அதற்குப் பிறகு ஜீவகன் வித்தியாப்பியாசஞ் செய்யும் பருவத்தை

யடைந்து பிரமதேவன் புத்திரனாகிய சுவாயம்புமனுவையே நிகர்த்திருந்தான். அங்ஙனம் ஜீவகன் வித்தியாப்பியாசஞ் செய்யும் பருவத்தை யடைந்தவுடனே, கந்துக்கடனும், சுநந்தையும் நல்ல சுபதினத்தில், ஜீவகனை நீராட்டி அலங்கரித்து அச்சணந்தி யாசிரியருக்கு முன்னே உட்காருவித்து, பொன்னையும், இரத்தினத்தையும், முத்தையும், பழங்காசையும் வகைக்குக் குறுணியளவாகும்படி பிரப்பரிசியாக வைத்து, முறைப்படி இன்னும் செய்யவேண்டிய சிறப்புக்களையுஞ் செய்து, அவ்வாசிரியரைக் கொண்டு அவனுக்கு அக்ஷராப்பியாசஞ் செய்வித்தார்கள். ஜீவகனும் அன்று முதல் மையேடு பிடித்து வாசித்து வந்தான். அவனுடைய தோழரும் அவனோடுகல்வி பயின்று வந்தார்கள். இவ்வாறு கல்வி கற்கத் தொடங்கிய ஜீவகன், தோழரோடு வேதசாஸ்திரக் கல்விகளை யெல்லாம் விரும்பிக் கற்று, உபநயன முதலிய சடங்குகளும் செய்யப்பெற்று, பின்னர் ஆயுத வித்தைகளிலும் தேர்ச்சியடைந்து, இசை நாடக நூல்களினும் வல்லவனாய்க் குமரப் பருவத்தை யடைந்து மன்மதனும் நாணும் அழகுபெற்றுச் சிறப்புடன் விளங்கினான்.

இவ்வாறு ஜீவகன் அச்சணந்தி யாசிரியரிடத்தே கற்க வேண்டிய கல்விகளை யெல்லாங் கற்றுக் குமரப்பருவத்தை அடைந்திருந்த காலத்தில், அவர், ஜீவகனுக்கும் அவனுடைய தோழருக்கும் ஞானோபதேசஞ் செய்தற் குரிய பருவம் வந்ததென் றுணர்ந்து அதனை உபதேசித்தற் கெண்ணி ஒரு சமயம் அவர்களை முன்னே யிருத்தி, "உத்தமகுண சீலர்களே ! ஆகமங் கூறியபடி நன்மை தீமைகளை ஆராய்ந்து, தீமைகளை நீக்கி நன்மைகளைக் கைக்கொண்டு, கடவுளால் ஏற்படுத்தப்பட்ட நல்ஞானம், நற்காட்சி, நல்லொழுக்கம் என்னும் முக்குணங்களையுந் தழுவி யொழுகினால்,

நரக்கதி, விலங்குகதி, மக்கட்கதி, தேவகதி யென்னும் நால்வகைக் கதிகளில் சார்ந்து நின்ற பக்குவ சீவன்களுக்கு மிக்க ஆக்க முண்டாகும்; அறிவிற் சிறந்த பெரியோர் தீவினை நீங்குதற் கேதுவாகிய சன்மார்க்கத்திற் சேர்ந்து, அநந்த சுகமாகிய இன்பத்தை அனுபவிப்பார்கள்; உலக ஆசையிற் சிக்கிப் பொறிகளின் வழியே புலன்களைச் செலு த்தினவர்கள் துன்பசாகரத்தில் அழுந்துவார்கள்; எமனென வன், ஜீவர்களைப் பிடிப்பதற்கு மிருத்தியு என்னும் வலையை விசி வைத்திருக்கின்றான்; அப்படி வீசிவைத் திருப்பதை நாம் உணர்ந்திருந்தும், அதினின்றுந் தப்பி, முத்தியுலகத் தை நோக்கி நேரானவழியிற் செல்வதை அறியா திருக்கின் றோம்; நம்மைக்காட்டிலுந் தாழ்ந்தவர் எவருமில்லை; தவஞ் செய்தற்குரியதும், பிறப்பை நீக்கிக்கொள்ளற் கேதுவா யிருப்பதுமாகிய இம் மானிட தேகத்தை மிகுந்த தவப்பய னாலே நாம் அடைந்தோம்; அங்ஙனம் பெற்றும், இதனு லடைய வேண்டிய பயனை எய்தும் விதத்தை அறியாம லிருக்கின்றோம்; நாம் இப்படியே அறியாமல் உலக இன்ப த்தை அனுபவித்துக்கொண் டிருப்போமானால், நம்முடைய ஆயுள் சீக்கிரம் கழிந்து, தேகம் அக்கினிக் கிரையாகி விடும்; ஆதலின், நாம் விரைந்து அறத்தைத் தேடவேண் டும்; அங்ஙனம் தேடாமல் பின்னே பார்த்துக்கொள்ளலா மென்றிருந்தால் நமக்கு மரணஞ் சமீபித்த அக் காலத்தில் அவ் வறம் கைகூடுமோ? இன்னும், உலக மயக்கத்திற் பொருந்தினவர்களுக்கு அறிவுடையோர் நல்ல ஞானங்களை வற்புறுத்திக் கூறினாலும் அவர்கள் நல்வழிக்குத் திரும்ப மாட்டார்கள்; தங்கள் இயற்கைப்படி தீக்காரியங்களையே செய்து நரகத்திலே மூழ்குவார்கள்; அவர்களை நல் வழிக் குத் திருப்புதல் ஒருவராலும் இயலாது; அவர்களுக்கு ஞானோபதேசஞ் செய்யப்புகின் அங்ஙனம் செய்யப் புகுந்த

வனுடைய அறிவுங் கெடும்; ஆதலின், இத்தகைய அறிவிலி களுடைய கூட்டுறவை விட்டு நீங்கி நல்லோருறவை நாட வேண்டும்; இன்னும் மானிட ஜன்மமாகிய பயிரானது முளைத்தெழுந்து காளைப் பருவமாகிய கதிரையீன்று மூப்பாகிய விளைவை யுண்டாக்கி, நற்கதியாகிய இன்பத்தை நல்கும்; இத்தகைய இதனை இடையில் தீவினைகளாகிய பல மிருகங்கள் மேய்தற்கு வரும்; அந்த மிருகங்கள் மேயாத படி நாம் சீலமாகிய வேலியை ஏற்படுத்திக்காக்கவேண்டும்'' என்றுரைத்தருளினார்.

இவற்றையெல்லாங் கேட்ட பின்பு, ஜீவகன், உலக வாழ்க்கை நிலையற்றதென்பதை யுணர்ந்து தவஞ்செய்து பேரின்பமாகிய முத்தியை அடைதற் கெண்ணினான். அக் குறிப்பை யுணர்ந்த ஆசிரியர், அவனை நோக்கி, “உத்தம! நீ இப்பொழுதே தவத்தை நாடுதல் தகுதியன்று; உலகத்தில் எவ் வகுப்பாரும் தங்கள் தங்கள் குலதருமங்களை முறையே நடத்தி, இல்லறவொழுக்கத்தினின்றும் தவறாதிருந்து பின்னர்த் துறவு பூணுதல் கிரமம்; அறந் தவறாதியற்றும் இல்லறமே மோக்ஷத்திற்கு வழிகாட்டியாகும்; செவ்வனே இல்லறம் நடத்தாதார்க்கு மோக்ஷம் சித்திக்காது: ஆதலின், நீ உன் குலதருமங்கள் தவறாது இல்லறத்தை நல்லறமாகப் பூண்டொழுகி, பின்னர்த் துறவை நாடுவாயாக'' என்று கூறினார். ஜீவகன் இவ் வுபதேசத்தையுங் கேட்டு இதன்படி நடத்தற் கிசைந்திருந்தான்.

அதன்மேல் ஆசிரியர் ஜீவகனுடைய உண்மையான பிறப்பைத் தாம் அறிந்திருந்தபடியால் அவனுக்கு அதை உணர்த்த விரும்பி, அவன் தோழர்களை நீக்கி அவனைமாத்திரம் தனியாக ஒரு சோலைக் கழைத்துச்சென்று, ஓர் அழகிய அசோக விருக்ஷத்தினடியில் உட்கார்ந்து, அவனு

டைய விஷயம் மிகவும் இரகசியமா யிருக்கவேண்டிய தாத லால், அக்கம் பக்கங்களில் எவர்களேனு மிருக்கின்றார்களா என்றும், பகையரசர்களால் வளர்க்கப்பட்டுப் பேசுதலும் பிறர் சொல்லும் விஷயங்களை யறிந்து சொல்லுதலும் கற் றுக்கொடுக்கப் பெற்று, எதிரிகளிடம் சென்று காட்டுப்பற வைகள் போல நடித்து அவர்பேசும் விஷயங்களை அறிந்து வரும்பொருட்டுத் தூதாக அனுப்பப்படும் நாகணவாய்ப் புள், கிளி முதலிய ஜீவவர்க்கங்க ளிருக்கின்றனவா என் றும் ஆராய்ந்து பார்த்துக்கொண்டு, பின்னர் ஜீவகனை நோக்கி, "என் அருமை மாணவ! நான் உனக்கு ஓர் இரகசிய மான கதையைச் சொல்லப் போகின்றேன்; அதனை மிக்க கவனத்தோடு நீ கேட்பாயாக; இந்த இராஜமா புரத்தை யும், இதைச் சார்ந்த ஏமாங்கத நாட்டையும் சச்சந்தன் என்னும் அரசன் ஆட்சி புரிந்து வந்தான்; விஜயை என் பாள் அவனுக்கு மனைவியா யிருந்தாள்; சச்சந்தன், தன்னு டைய மனைவியின்மீது மிக்க அன்புடையவனாதலின், அவளை விட்டு நீங்க இஷ்டமில்லாமல் கட்டியங்கார னென்னும் மந்திரியி னிடத்தே தன்னுவடய இராஜ காரியங்களை ஒப்புவித்து மனைவியுடனே சில மாதங்கள் அந்தப்புரத் தில் வசித்து வந்தான். கட்டியங்காரனோ நன்றி மறந்தவ னாய், அவ்வரசனைக் கொன்று ஆட்சியைத் தானே கைப்பற் றிக்கொள்ள வேண்டுமென்று நினைத்து அதற்குரிய சூழ்ச் சிகளை இரகசியமாக நடத்திவந்தான். அக்காலத்தில் சச்சந் தன் இறந்துபோவதற் கறிகுறியாக விஜயை ஒருநாளிரவு கனவுகண்டு அதனை அவனிடம் தெரிவித்தாள். உடனே சச் சந்தன் தனக்கு அபாயம் வருமென் றுணர்ந்து, அவ்வாறு கேடு சம்பவிக்குங் காலத்தில் முதலில் தன் மனைவியை அக் கேட்டினின்றுந் தப்புவிப்பதற்காக, ஆகாயத்திற் பறக்கும் மயில் எந்திரமொன்று தச்சனாற் செய்வித்து, அதில் தினந்

தோறும் விஜயை ஏறி ஆகாயத்திற் சென்று வரும்படி அவளைப் பழக்கிவைத் திருந்தான். அப்படி யிருக்கச் சில தினங்கள் கழிந்த பின்னர், கட்டியங்காரன், சச்சந்தனைக் கொல்லுதற்குப் படையெடுத்தான். அதையுணர்ந்த சச்சந்தன், விஜயமா தேவியை முன்னே பழக்கிவைக்கப்பட்டிருந்த மயில் எந்திரத்தி லேற்றி ஆகாயமார்க்கமாக வெளியேறிப் போகும்படி அனுப்பிவிட்டுத் தான்மாத்திரம் தனியே கட்டியங்காரனோ டெதிர்த்து யுத்தம் புரிந்து மரணமடைந்தான். மயிற்பொறியி லேறிச்சென்ற விஜயை, கட்டியங்காரனுடைய ஜயபேரிகை முழக்கத்தால் தன் நாயகன் இறந்ததை யுணர்ந்து, மதிமயங்கி, மயிற் பொறியை நடத்தும் சூஸ்திரத்தைக் கைநழுவவிட்டு, அவ்வெந்திர மயிலின்மேலேயே மூர்ச்சித்து விட்டாள். எந்திரமானது தானே சுழலவும் அம்மயில் சுடுகாட்டில் இறங்கியது. விஜயை மூர்ச்சை தெளிந்து பார்த்து அது சுடுகாடா யிருக்கக் கண்டு மிகவும் பயந்து வருந்தினாள். அச் சமயத்தில் அவள் பூர்ணகர்ப்பிணி யாதலால் குழந்தை பிரசவிக்குஞ் சமயம் நெருங்கி, வலம்புரிச் சங்கின் முத்தைப்போன்ற ஒரு புத்திரனைப் பெற்றுத் துணையின்றி வருந்தினாள். அப்பொழுது ஒரு தேவதை அவள் மீது இரக்கமுற்று அவளுக்குத் துணை செய்யக் கருதி அவளுடைய தாதியாகிய கூனியென்னும் சண்பகமாலை வடிவங்கொண்டு வந்து அவளுடைய வேதனையைப் போக்கி, அப் புத்திரனை யெடுத்து ஓர் ஆசனத்தின் மேல் வைத்து, விஜயையினிடத்தில், ‘பகைவர் இருக்குமிடத்தில் இப் புத்திரனோடு நீ தனித் திருந்தால் ஆபத்துண்டாகும்; ஆதலின், இப் பிள்ளையை இவ்விடத்திலேயே வைத்து நீங்கிச்செல்வது நலம்; அப்படி வைத்து விலகினால் இப்பொழுதே ஒருமனிதன் இங்கு வந்து இவனைக்கொண்டு போய் வளர்ப்பான்; பின்பு இவன் வளர்ந்து பகைவரை

வெல்வான்; உன்னையும் பாதுகாப்பான்' என்று சொல்ல அவள் அப்படியே செய்து அக் கூனியுடனே விலகி மறைந்துநின்றாள். அத் தருணத்தில் உத்தராட்டாதி நக்ஷத்திரத்திற் பிறந்தவனாகிய அப் புதல்வனை, இந் நகரத்திலுள்ள ஒரு வணிகன், இறந்துபோன தன் புத்திரனை அடக்கஞ் செய்து திரும்புங் காலத்திற் கண்டெடுத்து வந்து தன் மனைவியிடம் கொடுக்க, அவள் வளர்த்தாள்" என்று ஒரு கதையாக, கிருஷ்ணன் கர்ணனுக்கு உண்மைப் பிறப்பை உணர்த்தியது போல உணர்த்தினார்.

இக் கதையைக் கேட்ட ஜீவகன் ஆசிரியரை நோக்கி, "சுவாமி! நீர் கூறிய அப் புத்திரன் யாவன்? அவன் எங்குளன்?" என்று வினவினான். ஆசிரியர், "நீ தான்" என்று கூறினார். இந்த வார்த்தை செவியிற் புகுமுன்னரே, அவன் இடிவீழ்ந்த சர்ப்பம்போலச் சுழன்று, "அந்தோ! என் தந்தைதாயர்க்கோ இக் கதி நேர்ந்தது!" என்று மூர்ச்சித்துக் கீழே வீழ்ந்தான். அவ்வாறு ஜீவககுமாரன் மூர்ச்சித்துவிழவே அச்சணந்தியாசிரியர் உடனே அவனைத் தூக்கி மடிமீது சேர்த்து மயக்கம் நீங்குதற்குரிய சில பரிகாரங்களைச் செய்து அவனுக்கு மூர்ச்சையை நீங்கினார். அங்ஙனம் மூர்ச்சை நீங்கப்பெற்ற அவன் தெளிவு வந்தவுடனே ஆற்றெணாத் துயரத்தை அடைந்தான். அதைக் கண்ட ஆசிரியர், அவனை நோக்கி, "இராஜகுமார! நீ இவ்வாறு பிறந்ததற்குக் காரணம் உனக்குரியாராகிய நாங்கள் செய்த பாவமேயாம்; ஆயினும் பாதகமில்லை; நீ விருத்தியடைந்து பின்னால் பகைவனைக் கொல்வாய்; ஆதலால், நீ இப்பொழுது கவலை கொள்ளாமல் பகைமுடிக்கும் காரியங்களை நாடிச் செய்வாயாக; வீரமற்ற புருஷரைப் போன்று புலம்புவது நன்றன்று; இனி, கவலையை விடு விடு" என்று அவனுடைய

கண்ணீரைத் துடைத்துத் தேகத்தைத் தடவி அவனைத் தேற்றினர். அவனும் தெளிவடைந்தான்.

அங்ஙனம் தெளிவடைந்த மாத்திரத்தில் அவனுடைய மனத்தில் வீரம் வந்து குடியேறியது. உடனே அவன் அடங்காக் கோபங்கொண்டு சமுத்திரத்தைப்போல முழங்கி, மலையும் பிளக்கும்படி கர்ச்சிக்கின்ற சிங்கக்குட்டியைப்போலச் சிறு வில்லையும் பாணத்தையுங் கரத்திலேந்தி, "அந்த துஷ்டனாகிய கட்டியங்காரனை இப்பொழுதே நிர்மூலமாக்குகிறேன்" என்று காலனைப் போலக் கன்சிவந்தெழுந்தான். யுத்தம் புரிவதற்கு அது தருணமன்றென் றுணர்ந்த ஆசிரியர், அவ்வாறு கொதித் தெழுந்து நின்ற ஜீவகனுடைய கோபத்தைத் தணிப்பது தமக்கருமையா யிருந்தபடியால் ஒருபாயத்தால் அதனை விலக்கக் கருதி, அவனை நோக்கி, "இராஜகுமார! நான் இப்பொழுது உன்னால் ஒரு காரியத்தைச் செய்வித்துக்கொள்ள விரும்புகிறேன்; அதனை நீ தடையின்றி என்பொருட்டுச் செய்யவேண்டும்" என்று கூற, ஜீவகன், "ஆசிரியரே! நீர் கருதியதெதுவோ அதனை என்பால் தெரிவிப்பின் நான் தட்டின்றிச் செய்து முடிப்பேன்" என்றான். உடனே ஆசிரியர், "ஜீவக! நின் தந்தையைக் கொன்ற கட்டியங்காரனை உனது குலாசாரப்படி கொல்லுதல் முறைமையே; எனினும், சில காரியங்களை உத்தேசித்து ஒரு வருடம் வரை நீ பொறுத்திருக்க வேண்டும்; இதுதான் நீ எனக்குச் செய்யத்தக்க காரியம்" என்றார். தந்தையைக் கொன்ற பகைவனை உடனே கொல்லாதிருக்க ஜீவகனுக்கு மனமிசைந்திலதாயினும், ஆசிரியர் வார்த்தையை மறுக்கலாகாதென அவன் அதற்கிசைந்து கோபத்தை அடக்கினான்.

அவ்வாறு ஜீவகன் கோபந்தணிந்ததைக் கண்டு அச்சணந்தி யாசிரியர், அவன் மேலும் சாந்தத்தை யடைதற் பொருட்டு, அந்த ஜீவகனுடைய சரித்திரம் போன்ற தம்முடைய சரித்திரத்தையும் அவனுக்குச் சொல்லக் கருதி, அவனை நோக்கி, "அரசபுத்திரா! உன்னைப் போலவே துன்பமடைந்தா னொருவன் உளன்; அவன் சரிதத்தைக் கேட்பாயானல், நீ இவ்வாறு வருந்தமாட்டாய்; அதனைக் கூறுகிறேன் கேள்: ஐம்பது பட்டணங்களைக் கொண்ட தக்ஷிணசிரேணியும், அறுபது பட்டணங்களைக் கொண்ட உத்தரசிரேணியுமாகிய இரண்டிடங்களை யுடையதும், வித்தியாதரருக்கு வாசஸ்தானமா யுள்ளது மாகிய வெள்ளிமலையைச் சார்ந்த வாரணவாசியென்னும் ஊரிலிருந்த உலோகபாலனென்னு மரசன், தன் புத்திரனிடத்தே அரசுரிமையை ஒப்புவித்துத் தவசியாகித் தவஞ் செய்யத் தொடங்கி விரதங்களை அனுஷ்டித்து வந்தான். அக்காலத்தில் அவன் முந்தின ஜன்மத்திற் செய்த பாவத்தினலே அவனுக்கு எவ்வளவு உணவருந்தினும் பசியடங்காமற் செய்வதாகிய யானைத்தி என்னும் நோய் உண்டாயிற்று. அதனல் அவன் விரதங்கெட்டு வருந்தி இந் நகரத்தில் வந்து சேர்ந்தான்" என்று மேலும் சொல்லத் தொடங்கினர். அப்போது ஜீவகன் அக் கதாநாயகனை இன்னவனென் றுணர்ந்து கொள்ள விரும்பி, அவ்வாசிரியரை நோக்கி, "சுவாமி! நீர் இப்பொழுது கூறியவன் யாவன்?" என்று வினவினன். அதற்கு ஆசிரியர், "நான்தான்" என்றார்.

அதைக் கேட்டு ஜீவகன், "ஆசிரியரே! உமக்கோ இக் கஷ்டம் நேர்ந்தது! மேல் நடந்தவற்றைக் கூறுவீராக" என்று சொல்ல, ஆசிரியர், "அப்பா! அதன்மேல், நான் உன்னை வளர்க்கின்றவனுகிய கந்துக்கடன் வீட்டிற்கு வந்

தேன். அத்தருணத்தில் கந்துக்கடன் தன் தோழருடனே ஆகாரமுண்ணுதற்கு உட்கார்ந்தான். அப்பொழுது நான் நடையிற்போய் நின்றேன்; கந்துக்கடன் என்னைக் கண்டு, “சுவாமி! நீரும் போசன முண்ணுதற் கமர்வீராக” என்றழைத்தான். நானும் போய் அவன் பக்கத்தில் அமர்ந்தேன்; எனக்கும் அங்குள்ளவர்கள் உணவு படைத்தார்கள். நான் வயிறார அதனை உண்டேன். அங்ஙனம் உண்ட மாத்திரத்திலே என்னைப் பற்றிய யானைத்தீ என்னும் வியாதி சிறிதுதணிந்தது. அங்ஙனம்தணியவே, நான்‘ இங்கு ஏதோ மகிமை உளது; இவ்விடத்தில் தங்கினால் நம் நோய் முற்றும் நீங்கக்கூடும்’ என்று தீர்மானித்து அங்குத்தங்கியிருந்தேன்.

அப்படித் தங்கியிருக்குங் காலத்தில், உன்னை வளர்த்து வரும் கந்துக்கடனுடைய இல்லமானது, துறந்தவர்க்கெல்லாம் தட்டின்றி உட்சென்று வசிக்கத்தக்க உரிமைவாய்ந்ததாதலினாலே ஒருதினம் நான் அவ் வீட்டினுள்ளே சென்று, சிறுபருவமாய் விளையாடிக்கொண் டிருந்த உன்னைக் கண்டேன். அப்பொழுதே நின்மகிமையினாலே என்னைப் பற்றியிருந்தயானைத்தீ என்னும் நோயானது சிறிது மின்றி நீங்கிற்று. உடனே நான் நின்னை, ‘தெய்வமோ’ என்று சந்தேகித்துப் பின்னர், உன்னுடைய நடையுடைபாவனைகளால் இராஜகுமாரனென் றறிந்து, உன்னால் என் தீப்பிணி நீங்கப்பெற்றமையினாலே நின்மீது அதிக விருப்பமெய்தி, நினக்குக் கல்வி பயிற்ற வேண்டுமென்னும் எண்ணமுடையவனாய் இதுகாறும் இங்குத் தங்கி என தெண்ணத்தை நிறைவேற்றினேன். உன்னுடைய பிறப்பை யுணர்த்த வேண்டியதும் எனது கடமையா யிருந்தமையால் அதையும் உணர்த்தினேன்” என்று கூறி முடித்தார்.

ஜீவகன், இக் கதையைக் கேட்டபின், ஆசிரியர் முதலில் நோயினால் துன்பமடைந்து பின்னர்ச் சுகம்பெற்றது போலத் தனக்குப் பகைமுடித்துச் சுகம்பெறுங் காலம் பின்னர் வந்தெய்துமென் றுட்கொண்டு அவர்மீது மிக்க விசுவாசம் வைத்து அவரைநோக்கி, "ஆசிரியரே ! எனக்கு நீர் ஞானோபதேசஞ் செய்து பிறப்பையும் உணர்த்தி என்னை இப்பொழுது நூதனப்பிறப்பை யுடையவனாகும் படி செய்தீர்; இந் நன்றியை நான் எப்பொழுதும் மறவேன்; நீர் வாழக்கடவீராக" என்று அவரை வாழ்த்த, அவர், ஜீவகனை நோக்கி, 'அரசிளஞ்சிங்கமே ! நான், நினக்குச் செய்ய வேண்டியவற்றை யெல்லாம் செய்து முடித்தேன்; இனித் தவத்திற்குச் செல்ல நாடுகின்றேன்; ஆதலின் நீ எனக்கு விடைதருவாயாக,' என்றார். இதைக் கேட்டதும் ஜீவகன், தன் ஆசிரியரைப் பிரிய மனமில்லாதவனாயினும் தவத்திற்குச் செல்வதைத் தடுத்தல் முறையன்றெனக் கருதி அன்பினோடு அவ்வாசிரியரைப் பார்த்து, "சுவாமி ! உம்மைவிட்டு நீங்க எனக்கிஷ்டமில்லை; ஆயினும், தவத்திற்குச் செல்வதைத் தடுத்தல் தகுதியன்றாதலின் நான் உம்முடைய எண்ணத்திற் கிணங்குகின்றேன்; நீர் செல்வீராக" என்று அவரை வணங்கினான். அதன்மேல் அவர், ஜீவகனுக்குப் பகைவரை வெல்லும் மார்க்கங்களை யெல்லாங் கூறி, கந்துக்கடனுக்கும் சுநந்தைக்கும் நன்மார்க்கங்களை உபதேசித்து, அவர்களிடத்தும் ஜீவகனிடத்தும் விடைபெற்றுக் கொண்டு தவஞ்செய்யும் பொருட்டு ஸ்ரீ வர்த்தமான சுவாமிகளுடைய சமவசரணத்தை நோக்கிச் சென்றார். ஜீவகன் தம்பியரோடும் தோழருடனும் கூடி, கந்துக்கடன் மனையில் சந்தோஷமுற்று வாழ்ந் திருந்தான். தவத்திற்குச் சென்ற அச்சணந்தி யாசிரியரும் மிக்க தவத்தைச் செய்து முத்தி பெற்றார்.

## அத்தியாயம்-6

## கோவிந்தையின் மணம்

அச்சணந்தி யாசிரியர் சென்றபிறகு கந்துக்கடன் மனையில் தன் துணைவரோடு வசித்து வந்த ஜீவகன் யௌவன பருவத்தை யடைந்து, அழகினால் உயர்ந்து யானை யேற்றம், குதிரை யேற்றம், தேரோற்றம் முதலிய வற்றிற் சிறந்தவனைக் கண்டோர் அதிசயிக்கும்படி அவற்றை நடத்தி, வில் வித்தையிலும், ஞானநூற் கல்வியிலும், இசைநாடக நூல்களிலும் தேர்ச்சி யுடையவனாய், அவற்றில் ஜீவகன் ஒருவனே உலகத்திற் சிறந்தவன் என்று யாவருங் கூற, அவ்விராஜமாபுரத்தில் ஒரு வித்தியாதரனைப் போன்று விளங்கி வந்தான். அந் நகரத்தி லுள்ள எல்லோரும் இவன்மீது மிகவும் விருப்புடையவர்களா யிருந்தார்கள்.

இப்படி யிருக்குங் காலத்தில் ஒரு சமயம் பின்பனிக் காலம் வந்தபோது கட்டியங்காரனுடைய பசு நிரையானது, முல்லை நிலத்தில் தங்கியிருந்தது. அப்போது ஒரு தினம், அதற்கு அருகிலுள்ள குறிஞ்சி நில மாக்களாகிய வேடர்கள் ஒன்று கூடி, "இது பின்பனிக்கால மாதலால், கட்டியங்கார மன்னனுடைய பசுநிரையானது, மேய்வதற்கு இக் குறிஞ்சிநிலச்சார்பில் வந்து சேரும்; அதை நாம் கவரவேண்டும்" என்று பேசினார்கள். அப்பொழுது ஆந்தை குழறிற்று; அதைக் கேட்ட வுடனே அவர்களுள் சகுனக் குறிப்புணர்வோன் அவ் வாந்தையின் சப்தங்களை யெண்ணி அவற்றினா லேற்படும் பலனை ஆராய்ந்து தன் இனத்தவரை நோக்கி, "வேடர்களே! இந்தச் சகு

னத்தால் ஏற்படும் பலனைக் கூறுகிறேன் கேளுங்கள்; நாம் பசு நிரையை ஓட்டுவோம்; அப்போது கட்டியங்காரனுடைய படை வந்து நம்மோடெதிர்த்துப் போர்புரியமுடியாமல் பின்னிட்டோடும்; அதன்மேல் ஒருமனிதன், தனியே வந்தெதிர்ப்பான்; அவனுக் காற்றாமல் நாமெல்லோரும் பசுநிரையைவிட் டோடுவோம்; இது தான் இச் சகுனத்தின் பயன்" என்று கூறினான்.

இதைக் கேட்டவுடனே மற்ற வேடர்கள் அந் நிமித்திகனை நோக்கி, "வீரம்பொருந்திய வேடர்கூட்டத்திற்பிறந்தும் தைரியத்தை யிழந்த நிமித்திக வேடனே! உன் வார்த்தை மிகவும் அழகா யிருக்கின்றது; நீ கூறியபடி வரும் அம் மனிதன் எமனேயானாலும் தனித்து வந்து என்ன போரைச் செய்வான்! மன்னனுடைய படையே வந்து நம்மாற் கெட்டோடும்போது அந்த ஒரு மனிதன் நமக்கு எம் மாத்திரம்! எப்படி நிகழ்ந்தாலும் சரி; இந்தச் சகுனத்தை உத்தேசித்து நாம் பேசிய காரியத்தை நிறைவேற்றாதிருக்கலாகாது; எல்லோரும் ஒரேமனதாகப்புறப்படுதலே தகுதி" என்றார்கள். அதன்மேல் யாவரும் பசு நிரை தினந்தோறும் வந்து மேயுமிடத்தை நோக்கிப் புறப்பட்டார்கள். இவர்கள் அங்குப் போவதற்குள் பசுநிரையும் வந்து சேர்ந்தது. அத் தருணத்தில் இடையூறு வருவதற் கறிகுறியாக அப் பசுக் கூட்டத்தினிடையே கரிக்குருவி பறந்து சென்று அப் பசுக்கள் மருண் டோடும்படி கதறி நிரையைக் கலைத்தது. அப்போது நந்த கோனுடைய தலைமையின்கீழ் அடங்கியிருக்கும் அந் நிரையைக் காக்கின்ற இடையர்களுள் நிமித்தங் கூறுமிடையன் அச் சகுனத்தை ஆராய்ந்துநந்தகோனிடத்தில், "ஆயர்தலைவ! இப்பொழுது கரிக்குருவி பசுக் கூட்டத்தினுள்ளே புகுந்து கதறிக் கூட்டத்தைக் கலைத்தது;

இச் சகுனத்தால் இன்று பசுநிரையைக் கவரப் பகைவர் நிச்சயமாக வருவரென்பது விளங்குகின்றது; ஆதலின், நாம் இன்று நிரையை வெகு ஜாக்கிரதையாகக் காக்கவேண்டும்" என்று கூறினன். அதைக்கேட்டு நந்தகோன் அன்றுநிரையைக் கடினமாகக் காக்கும்படி தன் இனத்தவர்க்குக் கட்டளையிட்டான். சண்டைக்குச் செல்லத் தகாத புதுமணவாளப் பிள்ளைகள் முதல் எல்லா இடையர்களும் பசுக் கூட்டத்தைக் காக்கச் சென்றார்கள். அன்று காவல் மிகவும் கடினமா யிருந்தது. பசுக்கள் அவர்களுடைய காவலுக்குள் அடங்கி, ஆகாயத்தில் நக்ஷத்திரக் கூட்டங்கள் விளங்குவது போலக் காட்டில் தனித்தனியே பிரிந்து பாவி மேய்ந்தன.

அவ்வாறு மேய்ந்துகொண் டிருக்கும்போது, மேற்கூறியபடி பசுநிரை கவரப் புறப்பட்ட வேடர்கள், வயிறு நிறையக் கள்ளைக் குடித்து, பசுநிரை கவருங் காலத்தில் முழக்கும் வாத்தியமாகிய ஆகோட் பறையை முழக்கி, குறிஞ்சிநிலத் திறைவனும் தங்கள் குல தெய்வமு மாகிய முருகக்கடவுளை வணங்கி, 'நமக்கு வெற்றி யுண்டாக' என்று ஆர்ப்பரித்து வந்து, வில்லை வளைத்து, இடையரோடெதிர்த்து அவர்கள் மீது அம்புகளைச் செலுத்தினார்கள். இடையர்களும் அவர்களோ டெதிர்த்துப் போர் புரிந்தார்கள். முடிவில் இடையர்கள் இடைந்து போனார்கள். வேடர்கள் பசு நிரையை ஓட்டிச் சென்றார்கள்.

பின்னிடைந்த இடையர்கள், தங்கள் கருவிகளாகிய வேய்ங்குழல்களையும், கோடரிகளையும் போட்டு விட்டு மத்தாற் கடையப்பட்ட தயிரைப்போலக் கட்டுவிட்டுச் சிதைந்தோடி இடைச்சேரியை அடைந்து அங்குள்ள இடைச்சிய

ரிடத்தே, "நம் பசு நிரையை வேடர் கொண்டுபோயினர்" என்று விசனமுற் றுரைத்தார்கள். அதைக் கேட்டவுடனே தயிர்ப்புள்ளிகள் நிறைந்த தோள்களையுடைய இடைச்சிய ரெல்லோரும் ஒன்றுசேர்ந்து தலைமயிர் சோர வயிற்றிலடி த்துக்கொண்டு, "ஐயோ! நம் பசுக்கூட்டங்கள் வேடர் கைப்பட்டு என்ன பாடு படுகின்றனவோ" என்று வருந்தி, தாய்களைப் பிரிந்து தங்கள் மனையில் நின்ற கன்றுகளை நோக்கி, "எம்முடைய அன்னைமாரே! வேடுவர் உங்களு டைய தாய்மார்களை அடித்துக்கொண்டு போயினர்கள்; இனி நீங்கள் எவ்வாறு பிழைப்பீர்கள்!" என்று கூறிப் புல ம்பியழுதார்கள். இவர்கள் இவ்வாறு பற்பல இடங்களிலும் வீழ்ந்து புரண்டழுதபடியால், பாற்குடம், நெய்க்குடம், தயிர்க்குடம் முதலியவைக ளெல்லாம் உடைந்து, பால் நெய் தயிர் ஆகியவைகள் ஆறுபோ லோடின.

அதன்மேல் இடையர்க ளெல்லோரும் தங்களால் பசுக்களை மீட்க முடியாமையால், 'இச்செய்தியை அரசனுக் கறிவிப்பதே நலம்' எனக் கருதி இராஜமாபுரத்தை யடை ந்து கட்டியங்காரனுடைய அரண்மனை வாயிலைச் சார்ந்து, கட்டியங்காரனிடம் இதனைத் தெரிவிக்கும்படி வாயில்காப் பாளனிடங் கூறிவிட்டு, அந் நகரத்திலும், பசுநிரை வேடர் கைவசப் பட்டதைப் பற்பல இடங்களில் தெரிவித்தார்கள். பசுநிரை கைதவறிப் போனதை இடையரால் சொல்லக் கேட்ட வாயில் காவலன் விரைந்து சென்று, கையிற் செங் கழுநீர் மலரையேந்திக் கொலுவில் அமர்ந்திருந்த கட்டியங் காரனிடத்தில், "இறைவ! நம் பசு நிரையை வேடர் கவர்ந்து சென்றனராம்; இடையர் வந்து இச் செய்தியைச் சொல்லி வருந்துகின்றனர்; ஆதலின், நீர் நம்படையை ஏவி நிரையை மீட்டுக் காப்பீராக" என்று கூறினன். இதைக் கேட்ட

யுடனே கட்டியங்காரன் நூதனமாக அரசுபெற்றவனாத லின், இராஜரீக முறைமை சிறிதும் முணராதவனாய், தன் கோபத்தைச் செலுத்தத் தகாதவிடத்திற் செலுத்தத் தொடங்கி, உடனே கண் சிவந்து தன் கையிலிருந்த செங் கழுநீர்ப் புஷ்பத்தைப் பிசைந்தெறிந்து, அச் சேவகனை உறுத்து நோக்கி, "சற்றும் வீரமில்லாத வாயில் காவல! இதை நீ கேட்டும் உடனே சென்று பசுநிரையை மீட்காமல் இந்த இழிவான காரியத்தை என்னிடம் வந்து தெரிவிக் கின்றாய்! இவ்வாறு தைரியமில்லாத உன்னை நான் சேவக னாக வைத்திருப்பதால் யாது பயன்?" என்று கோபித்துப் பேசத் தகாத வார்த்தைகளை யெல்லாம் பேசிவிட்டுப் பின் னர், இடையர்களை நேரில் வரவழைத்து அவர்களிடம், நடந் ததை விசாரித்துணர்ந்து, உடனே தன்னுடைய சேனைகளை யழைத்து, அச் சேனாவீரர்களிடம், "நீங்கள் விரைந்து சென்று பசுநிரையைமீட்பீராக" என்று கட்டளையிட்டான். அப்பொழுதே நால்வகைப் படைகளும் ஆயுதங்களுடன் சென்று வேடர்களை மதித்து அவர்களோ டெதிர்த்தன. சிறிது நேரம் வேடர்களுக்கும் கட்டியங்காரன் படைக்கும் யுத்தம் நடந்தது. முடிவில் கட்டியங்காரனுடைய படை தைரியங் கெட்டுப் புறங்கொடுத் தோடிற்று. அப்பால் வேடர்கள் பசு நிரையை ஓட்டிக்கொண்டு போயினர். இந்த அபஜயத்தை, இடையர்கள் மீண்டும் வந்து கட்டியங்கார னிடம் தெரிவித்தார்கள். அவன் அதற்குமேல் தன்னால் ஒன்றுஞ் செய்ய இயலாமையால் மிகுந்த அவமானத்தை யடைந்து வாயைத் திறந்து மறுவார்த்தை பேசாமல் மௌனமுற் றிருந்தான்.

அவனுடைய திராணியற்ற தன்மையைக் கண்ட இடையர் தலைவனாகிய நந்தகோன், "இனி இம்மன்னனிட

த்தில் முறையிடுவதால் பயனில்லை; இவருக்கு ஆண்மை யிருந்தால், தம் படை உடைந்ததென்று கேள்விப்பட்ட மாத்திரத்திலேயே இவர் போய் நிரை மீட்டு வந்திருப்பார்; ஆண்மை யில்லாததினாற்றான் மௌனமா யிருக்கின்றார்; இனி நிரை மீட்பவர்க்கு நம் புத்திரியை மணஞ்செய்து கொடுப்பதாக ஊரில் பறை சாற்றி, எவரேனும் வீரரைக் கொண்டு நிரை மீட்கும்படி செய்வதே தகுதி" என்று, நிரை மீட்பவர்க்குத் தன் புத்திரியாகிய கோவிந்தையை மணஞ்செய்து கொடுப்பதாக இராஜமாபுரத்து வீதிகளெங்கும் பறைசாற்றுவித்தான். அதைக் கேட்டு அவ்வூரிலுள்ள வீரர்களெல்லோரும், "கட்டியங்காரனுடைய படையே பின்னிடைந்து விட்டபோது, நம்மால் இஃது இயலுங் காரிய மன்று" என்று பேசாம லிருந்துவிட்டார்கள்.

இவ்வாறு அவ்வூரிலுள்ள வீரர்களெல்லோரும் அதிற் பிரவேசியா தொழிய, ஜீவகன் அதனைக் கேள்விப்பட்டு "வீரராயுள்ளவர்கள், நல்லொழுக்கத்தையும், பசுக்களையும், துறந்தோரையும், பெண்டிரையும், பாலரையும், வேதியரையும் பாதுகாத்தல் வேண்டும்; அங்ஙனம் பாதுகாவாராயின், அவர் பேடிகளாவர்; கட்டியங்காரன்சிறிதும் மானமற்ற பேடியாதலின், பசு நிரையை மீட்காது விட்டனன்; நானும் அவ் விஷயத்தைக் கேள்விப்பட்ட பின் பேசாதிருப்பேனாயின், அவனைப்போலவே பேடியாவேன்; ஆதலின், இப்பொழுதே சென்று நிரையை மீட்கவேண்டும்" என்று உடனே போர்க்கோலங் கொண்டு, தன் துணைவருடனும் படைகளுடனும் சென்றுவேடரை எதிர்த்தான். அப்போது அவ்வேடர் கூட்டத்தில் முன்னே ஆந்தையின் சகுனத்தை ஆராய்ந்து கூறியவனாகிய நிமித்திக வேடுவன், மற்ற வேடுவரை நோக்கி, "இங்கு வந்திருப்பவனே மகாவீரன்; நான்

முன்னே கூறிய சகுன பலனின்படி இவனை வெல்லுதல் நமக் கரிதாகும்; ஆதலால் நாம் இப்பொழுது பசுநிரையை விட்டு ஓடிப்போவது நலம்" என்று கூறினான். இதைக் கேட்டவுடனே வேடர்களெல்லோரும், "சமுத்திரத்தில் முதலை அஞ்சத்தக்க பிராணியும் உண்டோ! அதுபோல் நமக்கும் இக்காட்டில் அஞ்சத்தக்கவருண்டோ? எத்தகைய வீரன் வரினும் நம்மை இக்காட்டில் வெல்லுதல் அவ னால் முடியாது; சிறிய பாம்பும் தன் வளையில் நுழைந்து விட்டால் அதன் வாலைப் பிடித்திழுத்து அதனை வெளி யேற்றுதல் எவராலும் இயலாது; அதுபோல் நாம் ஈன ஜாதி வேடுவரா யிருந்தாலும் நமக்கிருப்பிடமாகிய இக் காட்டினுள் நுழைந்து விட்டால் நம்மை எவரும் வெல்ல மாட்டார்; 'உள்ளூர் எலி அயலூர்ப் பூனையை வெல்லும்' என்னும் பழமொழியை நீ கேட்ட தில்லையோ; இவன் எப் பேர்ப்பட்டவனா யிருந்தாலும் சரி; நாம் ஒருகை பார்த்துத் தான் விடவேண்டும்; அதற்குள் நிரையை விடலாகாது" என்று வீரம் பேசி, பசித்த நாகம் கவ்விய இரையை என்ன வந்தாலும் விடாதிருப்பது போல நிரையை விடாமல் பற் றிக்கொண்டு யுத்தஞ் செய்யத் தொடங்கினார்கள். அங் ஙனம்தொடங்கி, ஜீவகனையும், அவனுடையபடைவீரர்களை யும் நோக்கி, "கட்டியங் காரனுடைய படையைப் பின்னி டும்படி செய்த எமன்களாகிய எங்களிடத்தில் உங்கள் வீரம் செல்லாது; வீணே நீங்கள் மடியவேண்டாம்; உயிர் தப்பிப்போய் விடுங்கள்" என்று பல வீரமான வார்த்தை களைப்பேசித் துத்தரிக்கொம்பை வாயில் வைத்தூதி, கொக் கரிப்பும், சீழ்க்கையு மிட்டு ஆர்ப்பரித்தார்கள். சீவகனு டைய படையிலும், போர்ப் பறையும், சங்கும், கொம்பும் முழங்கின.

அதன்மேல் ஜீவகன், பின்னே கட்டியங்காரனோடு செய்ய வுத்தேசித்திருக்கும் போருக்கு நல்ல நாள் பார்த்து முதல் நாள் போர் தொடங்கியதுபோல் முதலில் இச் சண்டையை நல்ல நேரத்தில் ஆரம்பித்து அவ்வேடர் தனக்கு நிகரல்லாதவ ரானபடியாலும், பகைவரல்லாதவ ராதலாலும், அவர்கள் மீது ஆயுதப் பிரயோகஞ் செய்யாமலும், அவர்களைக் கொல்லாமலும் நிரை மீட்கக்கருதி வில்லைவளைத்து நாணேற்றிட்டுக் குணத்தொனிசெய்து தனது தேரைப் பற் பல இடங்களினும் வேகமாகச் செலுத்தி அநேக தேர்கள் தோற்றும்படி செய்து வீரமான சண்டையை நடத்துவது போல நடித்தான்.

அவ்வாறு செய்யவே, வேடர்கள் மதிமயங்கி, அநேக தேர்கள் வந்து தங்களை வளைந்து கொண்டதாக நினைத்து வீரத்தை யிழந்து, "இவ்வளவு தேர்ப்படைகளுடனே யுத்தஞ்செய்தல் நமக்கருமை; நம்முடைய நிமித்திகன்சொன்னபடி நாம் ஒற்றைத்தேரே வருமென்று நினைத்தோம்; இப்பொழுது வந்திருக்கும் தேர்களுக்கோ அளவில்லை; சகுனம் பார்த்துச் சொன்ன இந்தப் புறத்தலை வேடன், தன் தலை சிறிதாகையால் அறிவில்லாமல் ஒற்றைத்தேரே வருமென்று நமக்குக் கூறிக் குறிதவறி விட்டான்; இவ்வாறு பல தேர்கள் வருமென்று தெரிந்திருந்தால் நாம் முந்தியே பசுநிரையை விட்டு ஓடி யிருப்போம்; இனி நாம் ஓடுவதே சரி; இப்பொழுது எல்லோரும் ஒன்றுசேர்ந்து, முன்னேறி எதிரி படையைப் பின் தள்ளிவிட்டுத் திரும்பி ஓடிவிடுவோம்" என்று முன்னேறி ஜீவகன் மீது அம்புகளை எய்தார்கள். அப்போது ஜீவகன் தன்னுடைய பாணங்களால் அவ் வம்புகளை யெல்லாம் விலக்கினான். அங்ஙனம் விலக்கவே கானவர்கள் தளர்ச்சி யடைந்தார்கள். அத்

தளர்ச்சி கண்டு ஜீவகனுடைய படைவீரர் பசுநிரையைத் தங்கள் பக்கமாகத் திருப்பினார்கள்; இடையர்கள் சந்தோஷ மிகுதியால் ஆர்ப்பரித்தார்கள். பின்னர், தளர்ந்து பசுக்களைக் கைவிட்ட வேடர்கள் ஒருபக்கமாகத் திரண்டார்கள். ஜீவகன், இதுதான் இவர்களைத் துரத்துவதற்குத் தக்க சமயமென்று அநேக பாணங்களை அவர்கள் தலைக்குமேற் செல்லும்படி எய்து அவர்களைப் பயமுறுத்தினான். உடனே வேடர்களெல்லோரும் தங்கள் ஆயுதங்களைக் கீழே போட்டுவிட்டு ஓடிக் காட்டினுள் மறைந்தனர். ஜீவகன் நிரையை மீட்டு இடையர்களின் வசப்படுத்தி விட்டு இராஜமாபுரத்திற்குத் திரும்பினான்.

இதற்குள் சிலர் விரைந்தோடி, ஜீவகன் நிரைமீட்ட செய்தியைக் கட்டியங்காரனிடம் தெரிவித்தனர். அவன் இதைப்பற்றிச் சந்தோஷ மடையவேண்டியிருக்க, அதை விட்டு, 'நம் படை சென்று மீட்க முடியாது விட்ட பசு நிரையை ஒரு செட்டிமகன் சென்று மீட்டானன்றோ' என்று மிகுந்த பொறாமைகொண்டு அதை வெளிக்குக் காட்டாமல், வாள்பட்ட புண்ணில் வேலாயுதம் பாய்ந்தது போல முன் ஏற்பட்டதினும் அதிகமாக விசனத்தையடைந்து மனம் புழுங்கினான். ஜீவகன் வெற்றியைக் கேட்ட நகரமாந்தர்களெல்லோரும் சந்தோஷங் கொண்டு ஆர்ப்பரித்தார்கள்.

அத் தருணத்தில் நிரைமீட்டுத் திரும்பிய ஜீவகன், தன் துணைவருடனே இராஜமாபுரத்து வீதியிற் சென்றான். ஒவ்வொரு வீதியிலுமுள்ள பற்பல ஜனங்களும் தங்கள் தங்கள் வீதிகளையும், முற்றங்களையும் அலங்கரித்து ஜீவகனை வரவேற்றுக் கொண்டாடி அவன் தேர் முன் சென்ற

வுடனே, சூரியன் செல்வதையே நோக்கிக் கொண்டிருக்கும் நெருஞ்சிற் புஷ்பங்களைப் போலத் தங்களுடைய கண்களெல்லாந் திரண்டு அவன் தேர் செல்லும் வழியிற் செல்லும்படி நோக்கி அவனைப் பற்பல விதமாக வாழ்த்தினார்கள். இவ்வாறு பலருங் கொண்டாடச் சென்ற ஜீவககுமாரன், பின்னர், கந்துக்கடன் மாளிகையிற் போய்ச் சேர்ந்தான். அவனுடைய தேரிற் கட்டிய குதிரைகள், அத்தேர் நுகத்தினின்றும் அவிழ்த்து விடப்பட்டுக் குதிரைச் சாலையிற் சேர்ந்தன; தேரும் தான் நிற்றற்குரிய இடத்திற் சேர்ந்தது. அங்குள்ளார் இரத்தின வட்டிலில்வார்த்தமதுப் பலியையும், புஷ்பத்தையும், சந்தனத்தையும், விளக்கையும் மங்கலமாக முன்னே ஏந்தி அவற்றிற்கு வழிபாடுசெய்தார்கள். பின்னர், ஆயிரத்தெட்டுப் பெண்கள் நெருங்கி, சாமரை, தீபம், நிறைகுடம், இணைக்கயல், கண்ணாடி, தோட்டி, துகிற்கொடி, வெண்முரசு என்னும் அஷ்டமங்கலங்களையும் ஏந்தி எதிர்கொண்டு சூழ்ந்து, ஜீவகனைக்கந்துக்கடன்மனைக்குள் அழைத்துச் சென்றார்கள். கந்துக்கடனும் சுநந்தையும் அவ்வாறு உட்புகுந்த மகனைக் கண்டு மகிழ்ச்சிகொண்டு அவனுக்கு ஆலத்தி முதலியவற்றால் திருஷ்டி பரிகாரஞ்செய்து, அவன் வெற்றிபெற்று வந்ததைக் குறித்து இந்திரப்பட்டம் பெற்றாற்போன்று தேகம் பூரித்தார்கள்.

இவர்கள் இங்ஙனமிருப்ப, ஆயர் தலைவனாகிய நந்தகோன், ஜீவகன் பசுநிரையை மீட்டதற்காக, தான் முரசறைந்தபடி தன் மகளை அவனுக்கு மணஞ்செய்துகொடுக்க வேண்டு மென்னும் கருத்துடையவனாய் அந்த ஜீவகனிடம் வந்து, "ஆண்தன்மையிற் சிறந்த வீரரே! நான்சில விஷயங்களைத் தங்களிடம் தெரிவிக்கப் போகின்றேன்; நீர் அவற்றைக் கவனமாகக் கேட்கவேண்டும்; இந்த ஏமாங்கத

நாட்டிற் கிறைவராகிய சச்சந்தர் இப்போதிருக்கும் பாதக னுகிய கட்டியங்காரனை நம்பி இவனிடம் தமது அரசுரிமை யைக்கொடுத்து அந்தப்புரத்தில் சிலகாலம் தம்மனைவியாரா கிய விஜயமாதேவியுடன் தங்கியிருந்தார். விஜயமாதேவி பூர்ணகர்ப்பமா யிருக்குங் காலத்தில் இவ்வஞ்சகனும் கட்டி யங்காரன் நன்றிமறந்து அரசாட்சியைத் தான் கைப்பற்ற நினைத்து நம் சச்சந்தர் மீது படையெடுத்தான். அவர், விஜயமாதேவியை வெளியில் உபாயமாக அனுப்பிவிட்டு இந்தக் கட்டியங்காரனுடன் யுத்தம் புரிந்து மடிந்தனர். அப்பொழுதே அவருடைய செங்கோல் இப்பாதகன் வசப் பட்டது. அப்படியான அன்றைக்கே, நான் அவருக்குப் பின் இருக்கலாகாதென்று உயிரை விட்டுவிடத் துணிந் தேன்; அவ்வாறு துணிந்தும், நான் மன்னர் பொருட்டா கவே உயிர் விட்டதைக் கட்டியங்காரன் உணர்ந்தால் பின் னர் என் குலத்தவரையெல்லாம் நாசஞ்செய்வானென்று அஞ்சி அவ்வாறு தற்கொலை செய்து கொள்ளாமல் மலைச் சிகரத்தில் ஏறி விழுந்து 'நந்தகோன் மலையிலிருந்து கால்இட றிக் கீழேவீழ்ந் திறந்தான்' என்று ஜனங்கள் மதிக்கும் படி இறக்கலா மென்றும் நினைத்தேன்; அதன்மேலும், 'விஜயமாதேவி கர்ப்பத்துடன் தவறிப்போயிருப்பதால் ஒருவாறு அரசருக்குப் புத்திரன் தோன்றிப் பகைவனை வென்று அரசாட்சியைக் கைப்பற்றினாலும் பற்றக்கூடும்; அவ்வாறாயின், நாம் இறக்காமலிருந்தால் அவர் குடைநிழ லில் சுகமாக வாழலாமே; ஆதலின், நாம் அவசரப்பட்டிற ந்து விடலாகாது' என்னும் எண்ணம் உதித்தது. அதனால் நான் என் உயிரை மாய்த்துக்கொள்ளாமலிருந்தேன். இனி, எனது எண்ணப்படியே இராஜபுத்திரன் தோன்றிப் பகை முடிக்கவராவிடில் நிச்சயமாக உயிரை விட்டுவிடலாமென்று துணிந் திருக்கின்றேன்; இஃது இரகசியமான விஷயம்;

இதனை நீர் வெளிப்படுத்தா திருக்கவேண்டும். இனி மற்றொரு விஷயத்தைக் கூறுகிறேன்; நீர் அதைக்கேட்டு அதற்குத் தக்க விடை பகரவேண்டும்; நான் சச்சந்த மன்னருக்குக் குடியடிமைப்பட்ட இடையர் பரம்பரையில் தோன்றியவன்; அவருக்கு எப்பொழுதும், நெய், பால், தயிர் முதலியவற்றை உதவியவன்; எனக்கும் என் மனைவியாகிய கோதாவரி யென்பவளுக்கும் கோவிந்தை யென்னும் ஒரு பெண் பிறந் திருக்கின்றாள்; அவள் மிக்க அழகுடையவள்; அவளை என் இனத்தவரில் அநேகர்கேட்டும்நான் அவர்களுக்கெல்லாம் கொடாமல் நல்ல மாப்பிள்ளை தேடி அவனுக்குக் கொடுக்கவேண்டு மென்று வைத்திருந்தேன்; அப்படியிருந்தும் இன்றைக்குப் பசுநிரையை மீட்பவர்க்கு அவளை மணம் புரிந்து கொடுப்பதாக நகரத்தில் பறை யறைவித்தேன்; அதைக்கேட்டு நீர் சென்று நிரைமீட்டு வந்தீர்; ஆதலின், நான் அப்பெண்ணை, ஏழு பொற்பாவைகளுடனே உமக்கு மணம்புரிந்து தருகின்றேன்; நீர், இடைக்குல மென்று எங்களை அவமதிக்காதீர்; குலத்தைப் பாராட்டலாகாது; குணத்தையே பெரிதாகக் கொள்ள வேண்டும்; குணங்குறித்துக் குறக்குலத்தில் வளர்ந்த வள்ளியை முருகக்கடவுள் மணஞ்செய்து கொள்ள வில்லையா? திருமால், ஆயர்குலத்திற் பிறந்தவளாகிய நப்பின்னைப் பிராட்டியாரை மணந்துகொள்ள வில்லையா? நாங்கள் குலத்தினும் தாழ்ந்தவர்களல்லோம்; ஸ்ரீ கிருஷ்ணனே எங்கள் குலத்தில் வந்து வளர்ந்தானென்றால் எங்கள் மரபின் உயர்வைப்பற்றிக் கூறவும் வேண்டுமோ? நாங்கள் இல்லாவிடில் உலகத்தவர்க்குப் பால் நெய் முதலியன கிடைக்கமாட்டா; அவையில்லாவிடில் எவர்க்கும் ஆகாரம் செல்லமாட்டாது. நன்றாக யோசிக்குமிடத்தில் மானிடர்களுடைய சுகவாழ்வெல்லாம் எங்களுடைய கையி லிருக்கின்ற தென்றே சொல்லலாம்;

இவற்றை யெல்லாம் யோசித்து, என் மகளை மணம்புரிந்து கொள்ளும் விஷயத்தில் உமக்கேற்பட்டுள்ள அபிப்பிராயத்தை நீர்தெரிவிப்பீராக; சிறப்பாகக் கலியாணத்தை நடத்தும் விஷயத்திலும், நான் பின்வாங்கக்கூடியவ னல்லன்; பாலையும், தயிரையும், நெய்யையும் இவ்வுலக மெல்லாம் நிறைத்து விடுவேன்" என்று கூறினன்.

ஜீவகன், இவற்றை யெல்லாங் கேட்டபின், நந்தகோன் தன் தந்தையின்மீது வைத்திருக்கும் விசுவாசத்திற்காக மிகவும் மகிழ்ச்சியடைந்து, "இவனே நம்மீது அதிகமாக அன்புவைத்துத் தன் மகளைக் கலியாணஞ் செய்து கொள்ளும்படி நம்மிடம் வேண்டுகிறான்; எனினும், நாம் ஒரு குலமங்கையை மணம்புரிந்து கொள்ளுதலை விடுத்து இடைப்பெண்ணை வதுவை செய்தல் நம் மரபுக் கடாது; இடையரினும் வாணிகஞ்செய்வோ ரிருக்கின்றமையின் இவர்கள் சிறிது வணிகர் வருப்பிற் சார்வார்கள்; நம்தோழருள் பதுமுகன் வணிகனாயிருக்கின்றான்; ஆதலின், அந்தப் பெண்ணை நாம் மணமுடித்துக் கொள்ளாவிடினும் பதுமுகனுக்கு மணஞ் செய்வித்தால், அவன் நம் உயிர்த்துணைவனாயிருத்தலின், அது நாம் செய்துகொண்டது போலவேயாகும்; ஆயினும், இவன் அதற்கு முதலில் இசையமாட்டான்; அதற்காக நாம் இவன் வார்த்தைக் கிணங்கியதாகவே, இதமான கவர்பொருள் படும் வார்த்தைகூறிக் கன்னிகாதானம் பெறுங்காலத்தில் அதைப் பதுமுகனுக்குத் தந்திரமாக மாற்றிவிட வேண்டும்" என்று யோசித்து, அவனைநோக்கி, "ஆயர்தலைவ! உன தெண்ணப்படியே உன் மகளுக்குச் சிறந்த மணத்தை நிறைவேற்று கின்றேன்; விரைவில் மணவினைக் குரிய காரியங்களைச் செய்வாயாக" என்றான்.

உடனே நந்தகோன் இடைச்சேரிக்குச் சென்று, தன் இனத்தாரிடம், "கோவிந்தைக்குக் கலியாணம் நிச்சயமாகி விட்டது; நீங்கள் விரைவில் அதற்குரிய காரியங்களைச் செய்யுங்கள்" என்று தெரிவித்தான். அப்பொழுதே இடையர்களெல்லோரும் திரண்டு நல்ல நேரத்தில், மான்குட்டிகள் கடித்த நுனிப்பாகங்கள் குறையப்பெற்ற மல்லிகையினமாகிய மௌவல் என்னும் செடிகளாலும், இருவாட்சிச் செடிகளாலும் தங்கள் ஜாதி இயற்கைப்படியே பந்தர் அமைத்து, நந்தகோனுடைய வீட்டை அலங்கரித்தார்கள். இடைச்சியர்கள் திரண்டு கோவிந்தையை அழைத்து, தெய்வ வணக்கத்துடனே உட்காரவைத்து, "நம்முடைய பசுவுந் தொழுவும் என்றும் நிலைபெற் றிருப்பதுபோல நீயும் நின் கணவனும் நெடுங்காலம் நிலைபெற்றிருப்பீராக" எனத் தங்கள் குலாசாரப்படி வாழ்த்தி நாழியிலிருந்த நெய்யை, பசுவின்கன்று தின்று நுனிகுறைந்த அறுகம்புல்லாலே தோய்த்தெடுத்து அவளுடைய தலையிலே வார்த்துத் தேய்த்து, அகப்பையாலே நீரை மொண்டு சொரிந்து நீராட்டி, அவள் காதுகளில் முன்னே அணியப்பட்டிருந்த பொற்றோட்டையும், குண்டலத்தையும் கழற்றி நீக்கிவிட்டு, கலியாணக் கோலத்திற் கேற்ற கடிப்பிணை என்னும் ஆபரணத்தை அணிவித்து, மலர்மாலையை மார்பிலிட்டு, ஓர் இலையிலே வைத் தெடுத்து வந்த சந்தனத்தைப் பூசி அவளுக்கு அலங்காரஞ் செய்தார்கள்.

இவ்வாறு அலங்காரம் செய்து முடிந்தவுடன், இடையர்களெல்லோரும் கூடி முல்லை நிலத்திற்குரிய ஏறுகோள் என்னும் பறையை முழக்கி அக்கோவிந்தையை ஒரு பல்லக்கிலேற்றித் தூக்கிக்கொண்டு நந்தகோனுடனே இராஜமாபுரம் புகுந்து கந்துக்கடன் மனையிற் சேர்த்தார்கள்.

அதன்மேல் நந்தகோன் கலியாணத்திற்குரிய சிறப்புக்களை யெல்லாம் நடத்தி நன்னீர்க் கலசத்தைக் கரத்திலேந்திக் கோவிந்தையைக் கன்னிகாதானம் செய்வதாகச் சொல்லி ஜீவகன் கரத்திலே தாரை நீரை வார்த்தான். அப்போது ஜீவகன், "பதுமுகனுக்காக நான் இந்தக் கன்னிகாதானத்தைப் பெற்றுக்கொள்கிறேன்" என்று பலரறியச் சொல்லி அத் தாரை நீரை ஏற்றுக்கொண்டான். நந்தகோன் இந்த வார்த்தையைக் கேட்டவுடனே திடுக்கிட்டு, "நம் மகள் பதுமுகனுக்கன்றோ உரியவளானாள்; ஜீவக குமாரர் ஏமாற்றிவிட்டார்; ஆயினும் பாதகமில்லை; பதுமுகன் இவருக்கு உயிர்த்தோழனாதலின், அவன் மணம் பெறுவது இவர் பெற்றது போலவே யாகும்; ஜீவகரே விரும்பி இக் காரியத்தைச் செய்வதால் இது நமக்கும் சம்மதந்தான்; இவர், தாம் மணம்புரிந்துகொள்வது தகாதென்று நினைத்தே இவ்வாறு செய்திருக்கின்றார்; எது எப்படியானாலும் நாம் இவர் நோக்கத்திற்கு இசைந்து நடத்தலே உத்தமம்" என்று ஜீவகனுடைய மதிவன்மைக்கு மகிழ்ந்து, பதுமுகனுக்கே கோவிந்தையை மணம்புரிவித்து, அவனுக்கு இரண்டாயிரம் பசுக்களையும், ஏழு பொற்பாவைகளையும் சீதனமாகக் கொடுத்து, மணமகனையும், மணமகளையும், ஜீவகனையும், வாழ்த்திச் சென்றான். பதுமுகன் மணம் பெற்றதால் மகிழ்ச்சியுற்றிருந்தான். ஜீவகனும், தனக்கு வெற்றியாலும், அழகாலும், ஒழுக்கத்தாலும் அளவற்ற கீர்த்தி உலகத்திற் பரவியபடியால் எல்லோரும் கொண்டாட வீரலட்சுமியை யடைந்து தோழருடனே அங்கு மகிழ்ச்சியுற்று வசித்து வந்தான்.

# அத்தியாயம்-7

## தத்தை திருமணம்.

ஜீவகனும் அவன் துணைவரும் இராஜமாபுரத்திலே வாழ்ந்துகொண்டிருக்க, ஜீவகன் மேற்கூறியபடி நிரை மீட்டதற்குச் சுமார் ஆறுமாதங்களுக்கு முன்னர், அவ்விராஜமா புரத்தனாகிய பவதத்த னென்னும் வணிகனுடைய குமாரனும், பதுமை யென்பவளுக்குக் கணவனுமாகிய ஸ்ரீதத்த னென்பவன், வியாபாரத்தால் மிகுந்த பொருளை யிழந்து நஷ்டப்பட்டு, மீண்டும் கப்பலேறி அன்னிய தேசஞ் சென்று பொருள் தேடவேண்டு மென்னும் எண்ணமுடையவனாய், 'பிறரிடம் அடிமைத்தொழில் செய்யும் வறிஞரும், தங்களுக்குக் கிடைக்கும் அற்பப் பொருள்களையும் சிறிது சிறிதாகச் சேர்த்துப் பெரிய பொருள்களாக்கி மிகுந்த ஐசுவரியமுடையவர்களாகி யானைமீதேறிப் பவனிவருவர்; இதற்குக் காரணம் அவர்களுடைய முயற்சியே; "வருந்தினால் வாராத தொன்றில்லை" என்றபடி பிரயாசைப்பட்டால் அவசியம் மேன்மை கிடைக்கும்; சிலர், இவ்வாறு தாழ்ந்த நிலைமையிலிருந்து முயற்சியால் மேன்மை யடைந்தவரையும், உயர்ந்த நிலைமையிலிருந்து சோம்பேறித் தனத்தால் கெட்டுத் தாழ்ந்த நிலைமையடைந்தவரையும் பார்த்து, "சுரையாழ அம்மி மிதப்பது போல தாழ்ந்தோர் உயர்ந்தனர், உயர்ந்தோர் தாழ்ந்தனர்; இவற்றிற்குக் காரணம் அவரவர்கள் முற்பிறபிற் செய்த நல்வினை தீவினைகளே; நாம் முயற்சி செய்வதாலும் பயனில்லை; நாம் என்ன செய்தாலும் நல்வினை யிருந்தாற்றான் செல்வங் கிடைக்கும்; இல்லாவிடில் ஒன்றுங் கூடாது; வருவது தானே வரும்" என்று சோம்பேறிகளாய் வீணே காலத்தைக் கழிப்பர்; இத்தகையர் அறிவற்றவ ராவர்.

இவர்களுக்கு எப்பொழுதும் சுகம் கைகூடாது ; ஆதலால் இவ்வாறு சோம்பியிராமல் உலகத்தில் எல்லாச் சுகத்திற்கும் காரணமாகிய பொருளைத் தேடவேண்டும்; "பணமில்லாதவன் பிணம்" என்றபடி பொருளில்லாவிடில் ஒரு சிறப்பும் இராது; தருமத்தோடு பொருளைச் சம்பாதித்து அப்பொருளால் தன்குலத்தவரையெல்லாம் காப்பாற்றுதலே ஒருவன் மானுடஜன்ம மெடுத்ததன் பயனும்; இவ்வாறு செய்யாமல் வறுமை வந்தவுடன் தன் சுற்றத்தைவிட்டு நீங்கி யோடுபவன் பேதையினும் பேதையாவன்' என்று யோசித்துத் தன் பண்டசாலையிற் புகுந்து தன் பிரயாணத்திற்கு வேண்டிய பொருள்களை யெல்லாம் எடுத்துக்கொண்டு நல்ல முகூர்த்தத்தில் கப்பலேறிப் புறப்பட்டான். அக் கப்பல் யாதொரு தீங்கு மின்றிச் சில தினங்களில் வளம் பொருந்திய ஒரு தீவிற் போய்ச் சேர்ந்தது.

அங்ஙனம் போய்ச் சேர்ந்தவுடனே ஸ்ரீதத்தன் இறங்கி அத் தீவிற் கிறைவனைக் கண்டு வணங்கி அவனுக்கு ஒரு முத்தாரத்தைக் காணிக்கையாகக் கொடுத்து அவனோடு சிநேகங்கொண்டு அவனுடைய அனுமதியின் பேரில் அங்கே ஆறு மாதங்கள் வரை யிருந்து, தான் கொண்டு சென்ற வியாபாரப் பொருள்களை யெல்லாம் வைத்து வியாபாரஞ் செய்து அளவற்ற பொருள்களைச் சம்பாதித்துக் கொண்டு, அவற்றை யெல்லாம் தன் கப்பலி லேற்றி, அத் தீவிற் கிறைவனிடம் விடை பெற்றுக்கொண்டு, இரேவதி நக்ஷத்திரங் கூடிய வியாழ ஓரையில், தனுராசி உதயமாகத் தன் னூருக்குப் பிரயாணமானான். அவ்வாறு பிரயாணமானபின் அவனுடைய கப்பலானது, விரைந்து சென்று ஐஞ்ஞூறு காதங் கடந்து தான் நோக்கிச் சென்ற கரைக்கு ஒரு யோசனை தூரத்திற் போய்ச் சேர்ந்தது. அக் கப்பலி

யிருந்தவர்களெல்லோரும், 'கரை சேர்ந்து விட்டோம்' என்று மகிழ்ந்தார்கள். அந் தருணத்தில் அவர்களுடைய சந்தோஷமானது, அடியோடு தொலையும்படி, எங்கும் இருள் சூழ மேகக் கூட்டங்கள் பெருங் காற்றுடனே கூடி இடித்து மிகுந்த மழையைச் சொரிந்தன. காற்றானது அதிகரிக்கவே கடல் அலைகளோடு கொந்தளிப்புற்றுக் கப்பலைப் பல விதமாகச் சுழற்றியது. அப்போது ஸ்ரீதத்தன், கப்பல் முழுகி விடுமென்றே நினைத்து அதில் இருந்தவர்களை நோக்கி, "எம்மவர்களே! ஏதோ தெய்வச் செயலால் நம் கப்பல் ஆபத்திற் சிக்கிக்கொண்டது; ஆயினும் நீங்கள் மனங் கலங்கவேண்டாம்; அறிவுடையோர்கள் ஆபத்துறுங் காலத்தில் கலக்கத்தையும், சுகம் பெறுங் காலத்தில் சந்தோஷத்தையும் அடையார்கள்; நீங்கள் இப்போது இந்த அபாயத்திற்கு அஞ்சாது ஒரே மனமாகக் கடவுளைத் தியானியுங்கள்; அவர் உங்களைக் காப்பாற்றுவார்" என்று தேறுதல் கூறினான். இவ்வாறு சொல்லிக்கொண் டிருக்கும்போதே, கரன் என்னும் ஒரு வித்தியாதரனுடைய ஜாலத்தினாலே அக் கப்பலானது பாய் மரம் ஒடிந்து கடலுக்குள் தலைகீழாகப் பாய்ந்து அமிழ்வது போலவும், பாய் மரம் தனக்கெதிரே மிதப்பது போலவும் ஸ்ரீதத்தனுக்குத் தோற்ற முண்டாயிற்று. அவ்வாறாகவே அவன் தன் கப்பல் முழுகி விட்டதென்றே நினைத்து எதிரில் மிதந்த பாய் மரத்தைக் கட்டிப் பிடித்துக் கொண்டு சமுத்திர ஜலத்தின் மேல் கிடந்தான். அவ்வாறு மிதந்துகொண் டிருக்கும்போது அலையானது அவனை ஒதுக்கித் தள்ளிக்கொண்டுபோய்க் கரை சேர்த்தது. அப்போது அவன், தன்னை அங்ஙனம் கொண்டுபோய்ச் சேர்த்த பழ வினையை வியந்து அச் சமுத்திரக் கரையிலிருந்த மணற்றிடலிற் சேர்ந்தான்.

கப்பல் மூழ்கியதான தோற்றம், மேற்கூறிய தா னென்னும் வித்தியாதரனுடைய மாயையால், ஸ்ரீதத்த னுக்குத் தோற்றியதேயன்றி, மெய்பாக அக் கப்பல் மூழ்க வில்லை. இந்தத் தான் யாவனெனில், வெள்ளிமலையி லிருந்த காந்தருவதத்தையின் தந்தையாகிய கலுழ வேக னால் அனுப்பப்பட்டவன். "காந்தருவதத்தைக்கு இராஜமா புரத்திலுள்ள ஜீவகனே நாயகனாவான்" என்று சோதிடர் கள் கூறியபடியால், அவ்வாறே தத்தையை இராஜமா புரத்திற் சேர்ப்பித்து அவளுக்கு மணமுடிப்பிக்கும் சம யத்தை எதிர்பார்த் திருந்த அக் கலுழவேகனென்பான், மேற்கூறியபடி ஸ்ரீதத்தன் வெளிநாடு சென்று பொருள் தேடி மீண்டு நடுக் கடலில் கப்பலுடனே வருவதை யுணர் ந்து, இவனை வரவழைத்து இவனுடனே தத்தையை யனு ப்பி இவன் மூலம் அவளுக்கு இராஜமாபுரத்தில் மண முடிப்பிக்கலா மென்று கருதி, விஞ்சையால் மயக்கி இவ னைப் பரிவாரங்களி னின்றும் பிரித்தழைத்து வருமாறு கட்டளையிட்டுத் தானை யனுப்பினன். அதன்படியே தான் வந்து இவ்வாறு செய்தான்.

இது நிற்க, முன்னே கூறியபடி மணற்றிடரிற் சேர்ந் திருந்த ஸ்ரீதத்தன், பக்கத்தி லிருந்த ஒரு வளம் பொருந் திய சோலையிற் போய்ச் சேர்ந்து, 'இனிமேல் என் செய் வது?' என்று மனம் வருந்தி யிருந்தான். அப்படி யிருக் கும் போது கடலலையானது ஒரு நண்டைக் கொண்டுவந்து கரையில் தள்ளிற்று ; அந் நண்டு மீண்டும் அக் கடலுக்கே சென்றது ; அப்பாலும் அலை அதனை வெளியிற் கொண்டு வந்து தள்ளிற்று. இந்த விநோதத்தைப் பக்கத்திலிருந்த அன்னம் பார்த்து, தான் அதைப் பிடித்துத் தின்னக் கூடி யதாயிருந்தும், 'ஐயோ! தன்னையே ஆதாரமாகக் கொண்ட

இந்த நண்டைக் கடலானது வெளியில் தள்ளியும் அது வேறே போக்கிடமின்றி அக்கடலுக்குள்ளேயே நுழைகின்றதே; ஆதலின், நாம் இதைக் கொல்லலாகாது' என்று அருள் செய்து அதனைக் கொல்லாமல் விட்டது. இதை ஸ்ரீதத்தன் பார்த்தவுடனே, "இந் நண்டைக் கொல்லக் கூடிய அன்னம் இதனைக் கொல்லாமல் விடுவதால் இது நமக்கு நல் நிமித்தமாகும்; இதனால், நாம் பிழைத்துப் போகும்படி இங்கு ஏதேனும் ஒரு கப்பல் வந்தாலும் வரக் கூடும்" என்று சமுத்திரத்தை நோக்கி, அப்படி ஒன்றும் வாராமையால் முகம் வாடி யிருந்தான்.

இப்படி யிருக்கும்போது மேற்கூறியபடி மாயை செய்து அவனைக் கரைக்குக் கொண்டுவந்த தரனென்பான், மேல் நடக்கவேண்டிய காரியங்களை நிறைவேற்றும் பொருட்டு, அவனுக்கு முன்னேவந் துலாவினன். அப்போது ஸ்ரீதத்தன் அவனைக் கண்டு, 'திக்கற்ற இச் சமயத்தில் ஒரு மனிதன் துணை அகப்பட்டதே' என்று மகிழ்ச்சி கொண்டு, அவன் சமீபத்திற் சென்று, "நேயரே! துணையின்றித் தளர்ந்த எனக்கு இத் தருணத்தில் நீர் துணையாக வந்து தோன்றினீர்; எனக்கு நீர் உதவி செய்யவேண்டும்; நானே மிகவுந் துன்பத்தை யடைந்திருக்கின்றேன்" என்று அவனிடத்தில் தனக்கு நேர்ந்த துன்பங்களை யெல்லாங் கூறினன். அவற்றைக்கேட்டுத் தரன் ஸ்ரீதத்தனை நோக்கி, "நண்ப! நான் விஞ்சையில் தேர்ந்தவன்; அதன் பலத்தால் மனிதர் செய்யமுடியாத காரியங்களையெல்லாம் செய்வேன்; ஆதலால், நீ யிழந்த கப்பலையும், துணைவரையும், மீண்டும் என்னால் உனக்குத்தரமுடியும்; நீ நான் சொல்கிறபடி நடப்பாயானல் மிகுந்த நலத்தை யடைவாய்" என்றான். ஸ்ரீதத்தன் அவன் சொல்லியவாறே நடக்க இசைந்தான்.

அதன்மேல், தான், ஸ்ரீதத்தனை நோக்கி, கலுழவேகன் தங்கியிருக்கும் வெள்ளிமலையை அவனுக்குச் சுட்டிக் காட்டி, "நண்பா! இம்மலைமேற் சென்றால் நீ அநேக அற்புதங்களைக் காண்பாய்; ஆதலின், என்னுடன் வருவாயாக" என்றுகூறி ஆகாயத்திற் செல்லும்படி தன்னால் உண்டாக்கப்பட்ட ஒரு மேஷவாகனத்தில் அவனையேற்றித் தானும் ஏறிக்கொண்டு அவ் வாகனத்தைச் செலுத்தி வெள்ளிமலையிற் போய்ச் சேர்ந்தான். அப்போது, ஸ்ரீதத்தன் அங்குள்ள சோலைகளிற் பழுத்திருந்த கனிகளைப் பறித்துத் தின்று தேகங் குளிர்ந்து, அங்கேயிருந்துள்ள அதிசயங்களையெல்லாங் கண்டு மகிழ்ந்தான். அதன்மேல் இருவரும் கலுழவேக னிருக்கும் நகரத்திற் போய்ச் சேர்ந்தார்கள். அந் நகரமோ அளவிடற்கரிய வளங்களையுடையதாயிருந்தது. அதைக் கண்டவுடனே ஸ்ரீதத்தன், 'இது தெய்வலோகமோ!' என் றதிசயித்தான். பின்னர், தான், ஸ்ரீதத்தனைத் தன்னுடையமாளிகைக்கு அழைத்துச் சென்று அவனுக்கு விருந்து செய்து அவனை நோக்கி, "நண்ப! இந் நகர்க்கிறைவர் கலுழவேக ரென்பார்; அவர் மனைவியார் தாரணி யென்பார்; இவர்களுக்குத் தத்தை யென்னும் ஒரு பெண்மணி பிறந்திருக்கின்றாள். அவள் பிறந்த காலத்தில் சோதிடன், 'இவளுக்கு இராஜமாபுரத்திலே மணமுடியும்' என்று கூறினான். அதன்மேல் அவளை மணஞ்செய்து கொள்வதற்கு அநேகர் வந்து கேட்டனர். ஆனால் எங்கள் கலுழவேகர் சோதிடன் சொன்னதை மனத்தில் வைத்துக் கொண்டு, அவர்களுக்கெல்லாம், 'பின்னால் யோசித்துக் கூறுவேன்' என்று சொல்லிவிட்டார்; ஆயினும், இப்பொழுது அவ ரெண்ண மெப்படியிருக்கின்றதோ; அவரே வெளியிட்டால் மாத்திரந்தான் அது தெரியும்; இப்போது இராஜமாபுர வாசியாகிய நீ வந்திருப்பதால்

ஒருவாறு அவருக்கு அங்கே கொடுக்கும் எண்ண மிருப்பின் அதனை அவர் தெரிவித்தல் கூடும்; ஆதலின், நாம் அவரிடத்தே சென்று அவருடைய எண்ணத்தை யுணர்வோம்; என்னுடன் நீ வருவாயாக' என்று கூறி அவனை அழைத்துக்கொண்டு கலுழவேகன் அரண்மனைக் கேகினான்.

கலுழவேகன் தத்தையை இராஜமாபுரத்திலேயே கொடுக்கவேண்டுமென்று நினைத்திருப்பது தரனுக்கு உறுதியாகத் தெரியும். அதற்காகவே அவன் ஸ்ரீதத்தனை அழைத்து வந்தான். ஆயினும், அவன், 'அரசர் அபிப்பிராயம் அடிக்கடி மாறுவது இயற்கை யாதலால் இப்பொழுதெப்படி யிருக்குமோ; காரியம் முடிவதற்குள் நாம் உண்மையை வெளியிடலாகாது' என்று கருதியே இவ்வாறு கூறினான்.

இது நிற்க, மேற்கூறியபடி ஸ்ரீதத்தனை அழைத்துச் சென்ற தரன், அவனைக் கலுழவேகனிடம் கொண்டுபோய்ச் சேர்த்தான். அம் மன்னனைக் கண்டதும் ஸ்ரீதத்தன் மிக்க மரியாதையுடன் அவனுடைய பாதங்களில் வணங்கினான். கலுழவேகன் அவனுக்கு மிக்க உபசார வார்த்தைகள் கூறி, ஓர் ஆசனமளித்து அதில் அவனை உட்காருவித்து, அதன் மேல் அவனிடம் க்ஷேம சமாசாரங்களை யெல்லாம் விசாரித்துவிட்டு, அவன் முகத்தை விருப்புடன் நோக்கி, "நண்ப! நீ எனக்கு மிகவும் உறவினன்; இந்த உறவு இப்பொழுது புதிதாக எற்பட்டதன்று; உன் மரபினர்க்கும், என்மரபினர்க்குமிடையில் எழுதலைமுறையாக ஏற்பட்டுள்ளது; இஃதன்றியும் உனக்கும் எனக்கும் மதமும் ஒன்றே; ஆதலின், நான் அரசன், நீவணிகன் என்னும் வேறுபாடில்லை; என்னுடைய

அரண்மனை உனது இல்லமேயாம்" என்றுகூறினான். அதற்கு ஸ்ரீதத்தன், "நீர் அதைப்பற்றி எனக்கதிகமாகக் கூறவேண்டாம்; நம்முடைய உறவைப்பற்றி என் பாட்டன் என்னுடைய தந்தைக்கு ஒரு காலத்தில் விசேஷ சமாசாரங்கள் எடுத்துரைக்கக் கேட்டிருக்கின்றேன்; ஆதலால், நானும் என் குலத்தவரும் உமக்கு அடிமையென்பதில் சிறிதும் தடையில்லை" என்று பதிலுரைத்தான்.

அதன்மேல் கலுழவேகன் ஸ்ரீதத்தனை அந்தப்புரத்திற்கு அழைத்துச் சென்று தன் மனைவிக்கு அவனைக் காட்டினான். அவன், அவளுக்கு எவ்வித மரியாதையைச் செய்யவேண்டுமோ அவ்வித மரியாதையைச் செய்தான். அவளும் ஸ்ரீதத்தனை உபசரித்தாள். அப்போது ஸ்ரீதத்தன் அங்கே நின்ற காந்தருவதத்தையைக் கண்டு, அவள் கலுழவேகன் மகளென்பதை யுணராமல், அவளுடைய வடிவத்தைப் பார்த்து மதிமயங்கி, "இவள் எவர் தவத்தால் உதித்த பெண்மணியோ!" என்றதிசயமுற்றான். அக் குறிப்பை யுணர்ந்த கலுழவேகன், அவனை நோக்கி, "நண்ப! இவள் என்னுடைய தவப் புதல்வி; காந்தருவதத்தை யென்னும் பெயரினை யுடையாள்; வீணை வித்தையிற் சிறந்தவள்; நற்குணத்தில் ஒப்புவமையில்லாதவள்; இவளுக்கு இராஜமாபுரத்திலேயே மணமுடியுமென்று சோதிடன் கூறியிருக்கின்றான்; இவளோ கலியாணப் பருவத்தையடைந்து விட்டாள்; இனி இவளைக்கலியாணமின்றி வீட்டில் வைத்திருப்பது அழகன்று; ஆதலின், இப் பெண்ணை நீ உன்னுடைய நகரத்திற்கு அழைத்துச்சென்று உன்னுடைய புத்திரியென்றே பாவித்து உனது வீட்டில் வைத்திருந்து, பிரம, க்ஷத்திரிய, வைசியரென்னும் முக் குலத்தவர்களில் இவளை வீணை வித்தையில் வெல்கின்றவ

னெவனே அவன் எவனாயிருந்தாலும் அவனுக்கே மண முடித்துக்கொடுத்து விடுவாயாக; என்னுடைய சிநேகத்தை உத்தேசித்து நீ இந்தக் காரியத்தை நிறைவேற்ற வேண்டும்'' என்று கூறினான். ஸ்ரீதத்தன் அதற்கிசைந்தான். அதைக் கேட்டுப் பக்கத்திலிருந்த தாரணி, "என் மகளுக்கும் பிரிவு நேர்ந்ததே" என்று மனம் வருந்தினாள். அதுகண்டு கலுழவேகன், "எப்பொழுதும் பெண்ணானவள் ஒரு மணவாளன் வீட்டிற்குப் போக வேண்டியவளே; இதைப்பற்றி நீ கவலைகொள்வது மதியீன மாகும்'' என்று அவளைத் தேற்றினான். அதன்மேல் தத்தையும், தாய் தந்தையரை விட்டுப் பிரிய மனம் வருந்தினாள். தாரணி, பல இதமான வார்த்தைகளால் அவளைத் தேற்றிப் பயணப்படுத்தி அவளுக்குக்கொடுத்தற் குரியவைகளை யெல்லாங் கொடுத்தாள்.

அதன்மேல் கலுழவேகன், காந்தருவதத்தைக்கு வயிரம் பதிக்கப்பெற்ற ஐந்நூறு ஆபரணப் பெட்டிகளையும், இரத்தினங்களும் பொன்னும் நிறைந்த இரண்டாயிரம் யவன தேசத்துப் பெட்டிகளையும், நல்லவேலைப்பாடுகளமைந்த கட்டிலையும், தவிசையும், நிலைக் கண்ணாடிகளையும், தூப மூட்டிகளையும், கஸ்தூரிச் செப்பையும், ஆயிரம் வீணைகளையும், இன்னும் வேண்டிய பொருள்களையும் கொடுத்து, வீணாபதி யென்பவளையும், தானுடைய சுற்றத்தார்களையும் அவளுக்குத் துணையாக்கி, எல்லோரும் ஸ்ரீதத்தனுடைய கட்டளைக் கடங்கி நடக்கவேண்டு மென்று அவர்களுக்கு ஆஞ்ஞாபித்து, காந்தருவதத்தையைப் பயணப்படுத்தி ஸ்ரீதத்தனுடனே அனுப்பினான். அவள், தன் சுற்றத்தாரை விட்டு நீங்குவதற்கு மனம் வருந்தி அழுதுகொண்டே புறப்பட்டாள். அதைக் கண்டு கலுழவேகன், அவளை நோக்கி, "என் தவப் புதல்வியே! உயர்ந்த வலம்புரிச் சங்கம் ஈன்ற

மூழ்ந்தானது இவ்வுலகத்திலுள்ள மனிதர்க்குப் பயன்படுமே யன்றி அச் சங்கத்திற்குப் பயன்படாது; அதுபோலவே பெண்களும், மணவாளர்க் குரிய ராவரே யன்றிப் பெற்றோர்க்குரியராகார், இஃது உலகியற்கை; ஆதலின், நீ வருத்தமறு செல்க" என்று அவளைத் தேற்றி யனுப்பினான்.

பின்னர்க் காந்தருவ தத்தையானவள் தனக் குரிய வீணையும், தன்னால் வளர்க்கப்பட்ட அன்னமும், கிளியும், மயிலும், கருங் குரங்கும், பல வர்ணப் புறக்களும், மான் கூட்டங்களும், ஆயிரக் கணக்கான யானைகளும், அவற்றில் இரண்டு பங்கு தேர்களும், அவற்றில் நான்கு பங்கதிகமாகிய குதிரைகளும், ஆயுதங்களைத் தரித்த பதினாயிரம் பெண்களும் தன்னைச் சூழ்ந்து வரச் சென்று விமானத்தின்மீ தேறினாள். ஸ்ரீதத்தன், தரனுடனே அவளை யழைத்துக்கொண்டு சென்றான். அப்போது வழியில் மிகுந்த மாரி பொழிந்தது. எனினும், காந்தருவதத்தை ஏறியிருந்த விமான மானது அம் மழையால் தடையுறாமல் சென்றது. எல்லோரும், தரனுடைய மாயையால் ஸ்ரீதத்தன் கப்பல் கவிழ்ந்ததாகத் தோற்றிய இடம்போய்ச்சேர்ந்தார்கள். அப்போது தரன், ஸ்ரீதத்தனுக்கு, தான் செய்த மாயைகளை யெல்லாம் விளங்கக் கூறி, "உன்னுடைய கப்பல் கவிழ்ந்து போகவில்லை; என்னுடைய மாயையால் அது அமிழ்ந்தது போலத் தோற்றிற்று; இப்பொழுது உன்னுடைய கப்பலை உனக்குக் காட்டுகிறேன் பார்" என்று அக் கப்பலில் பலவகை இரத்தினங்களை யெல்லாம் நிறைத்து அதனை ஸ்ரீ தத்தனுக் கெதிரே தோற்றும்படி செய்து, அதிலிருந்த அவனுடைய தோழர்களையும் அவனுக்குக் காட்டினான். ஸ்ரீதத்தன் கப்பலைக் கண்டவுடனே அதிசயித்து மகிழ்ந்து, அவனைப் பலவாறு கொண்டாடிப்

பின்னர், கப்பலி லிருந்த தோழர்களைத் தழுவி, அவர்களை நோக்கி, "நண்பர்களே! கப்பல் மூழ்கி நீங்களெல்லோரும் இறந்திருப்பீர்களென்று நினைத்து நான் மிகவும் வருந்தி யிருந்தேன்; நீங்கள் அப்போது எவ்வித நிலைமையை அடைந்திருந்தீர்கள்?" என்று வினவினான். அவர்கள், "நீர் பார்க்கும்படி நடந்த தோற்ற மெல்லாம் நாடகம்; நாங்கள் எவ்விதத் துன்பமு மின்றிச் சௌக்கியமாகவே யிருந்தோம்; நீர் பார்க்க நடந்த தோற்றங்க ளெல்லாம் ஒரு மாயா விநோதத்தால் நடந்தவைகள்" என்று கைகொட்டி நகைத்தார்கள். அதன்மேல் ஸ்ரீதத்தன் மனக் கவலை யெல்லாம் நீங்கி, தன்னுடைய பரி சனங்க ளெல்லாம் தன்னைச் சூழக் காந்தருவதத்தை யுடனே புறப்பட்டுச் சில தினங்களில் இராஜமாபுரம் போய்ச் சேர்ந்து, தத்தையைக் கன்னிகா மாடத்திற் சேர்த்துத் தன் மனைவி பதுமையிடம் அவளை அழைத்து வந்த விதத்தையும், அவள் பொருட்டுச் செய்ய வேண்டிய காரியங்களையும் தெரிவித்தான். அவள் அவற்றைக் கேட்டு மகிழ்ச்சி யுற்றுத் தன் கணவனிடத்தில், "காந்தருவதத்தைக்குச் செய்யத் தக்க காரியங்களை விரைந்து செய்க" என்று கூறினாள்.

அதன்மேல், ஸ்ரீ தத்தன், காந்தருவதத்தையின் விஷயங்களை விரைந்து நிறைவேற்றக் கருதி மறு நாளே கட்டியங்காரனிடம் சென்று, "இறைவ! என்னிடத்தே ஒரு பெண்மணி யிருக்கின்றாள்; அவள் வெள்ளி மலையி லிருக்கின்ற கலுழவேகர் புத்திரி; யாழ் வித்தையிற் சிறந்தவள்; அழகிலு மிக்காள்; அவளை, பிரம, க்ஷத்திரிய, வைசிய ரென்னும் மூன்று வருணத்தாருக்குள்ளே யாழ் வித்தையி லெதிர்த்து வெல்வார் எவராயினும் அவருக்கே கலியாணஞ் செய்துகொடுக்குமாறு அக் கலுழவேகர் என்னுடனே

அனுப்பி யிருக்கிறார்; அவள் இப்பொழுது என்னிடம் வந்திருப்பதால் என் குமாரத்தியே யாவள்; அவளுக்கு நான் தந்தைபோ லிருந்து செய்யத் தக்க காரியங்களை யெல்லாம் செய்யக் கடமைப்பட் டிருக்கின்றேன்; ஆயினும், எதையும் இவ்வூர்க் கிறைவராகிய உமது அனுமதியைப் பெற்றே செய்யவேண்டும்; நான் அவள் பொருட்டுச் செய்யும் அக் காரியத்தையும் உமது முன்னிலையிலேயே செய்ய வேண்டும்: ஆதலின் இதற்கு நீர் அனுமதி கொடுப்பீராக" என்று வேண்டினான். பெண்கள் சுயம்வரத்திற்கு அனுமதி கொடுக்க வேண்டியது அரசர்க்கு முறைமையாதலால், கட்டியங்காரன், அவ்வாறே அக் காரியத்தை நிறைவேற்றும்படி ஸ்ரீதத்தனுக்கு அனுமதி கொடுத்தான்.

உடனே ஸ்ரீதத்தன் சென்று தத்தையின் வீணைப் போருக்குத் தகுதியாகிய ஒரு மண்டபத்தைச் சமைத்து, "என் வீட்டிலிருக்கும் காந்தருவதத்தையை, முறையே பிராமணர் முதல் வைசியர் ஈறாக வுள்ள மூன்று வருணத்தார்களுள் எவராயினும் யாழ் வித்தையில் வென்று மணஞ் செய்துகொள்ளலாம்" என்று தன் பணியாளரைக் கொண்டு நகரில் முரசறைவித்தான். இவ் விஷயம் இராஜமாபுரத்திற் பரவியதோடு வெளி நாடுகளிலும் சென்று பரவிற்று. அங்ஙனம் பரவவே அவ் விராஜமா புரத்திலுள்ள அரசர்களும், மற்றத் தேசங்களின் அரசர்களும், மூன்று வருணங்களிலுமுள்ள மற்றையரும் அந்நகரம் வந்து சேர்ந்தார்கள். அதன் மேல் ஸ்ரீதத்தன் நல்ல நாள் பார்த்து, உரோகிணி நக்ஷத்திரம் சேர்ந்த வியாழக் கிழமையிலே வீணைப் போரை நடத்தும்படி தத்தைக்குக் கட்டளை யிட்டான். அத் தருணத்தில் தத்தை, பெண்களுக்குரிய இயற்கையின்படியே, 'ஆடவர் கூட்டத்தில் நாம் சென்று இத்

தொழிலை எவ்வாறு செய்வோம்' என்று நாணத்தை யடைந்தாள். அக் குறிப்பை அவளுடைய தோழியாகிய விஞ்ஞபதியுணர்ந்து, பல விதமான வார்த்தைகளைக் கூறி அவளைத் தேற்றினாள். அதன்மேல் அவள், தெய்வ லோகத்து ஸ்திரீயைப் போலத் தன்னை அலங்கரித்துக் கொண்டு, மத்தள முழங்கவும், சங்கு சப்திக்கவும், முரசம் ஆர்ப்பரிக்கவும், பரிவார மகளிர் அஷ்ட மங்கலங்களையும் ஏந்திச் செல்லவும், ஆயிரம் பெண்கள் ஆயுத பாணிகளாய்ச் சபதங் கூறிக் கொண்டு வீரத்துடனே முன் செல்லவும் புறப்பட்டு, பலரும் பார்த்து அதிசயிக்க வீதி வழியே சென்று, யாழ் மண்டபத்தை யடைந்தாள்.

அவ்வாறு போய்ச் சேர்ந்தவுடனே எல்லோரும் அங்கே வந்து கூடினார்கள். அதன்மேல் காந்தருவதத்தை வீணையைக் கையிலெடுத்துச் சபை வணக்கமாக வாசித்துக் கண்டப் பாட்டையும் பாடினாள். அவ்வாறு பாடியதைக் கேட்டு, யாழ் வித்தையில் மிகவும் சிறப்புற்ற கின்னரர்களும் மெய்ம் மறந்தார்கள். அக்காலம் இளவேனிற் பருவமாயிருந்தபடியால் காந்தருவ தத்தையின் வாசிப்பானது, எல்லோருக்கும் இனிமையைத் தரக்கூடியதா யிருந்தது. அவ்வாறு தத்தை சபைவணக்கப் பாடலைப் பாடியபின்பு, ஆடவரோ டெதிர்த்து வீணை வாசித்தற்கு ஆயத்தமானாள். அப்போது விஞ்ஞபதி யென்னும் பேடி எழுந்து, சபையிலுள்ளவர்களை நோக்கி, "வீரர்களே! எங்கள் தலைவியாகிய இப் பெண்ணினுடைய கண்டப் பாடலுக்குத் தகுதியாக நீங்கள் வீணையை வாசிப்பீராக; அல்லது இவளுடைய யாழ் வாசிப்பிற்குத் தகுதியாகக் கண்டத்தாற்பாடுவீராக; அல்லது இவள் யாழ் வாசிப்பிற்கும் கண்டப் பாடலுக்கும் தகுதியாக யாழ் வாசித்துக் கண்டத்தாற் பாடுவீராக" என்றாள். "அவ்

வாறே எதைச்செய்ய வேண்டுமானாலும் செய்வோம்" என்று அங்கிருந்த ஆடவர்கள் கூறினார்கள். அதன்மேல் உள்ளே யிருந்து யாழ் வாசிப்பது எல்லோருக்கும் தெரியும்படி அமைக்கப்பட்டிருந்த பளிங்கு மண்டபத்திற்குள்ளே பத்மாசனமாக இருந்து காந்தருவதத்தை யானவள், இசை நூலிற் கூறிய கிரமப்படியே வீணையைமீட்டி அதற்கேற்பக் கண்டத்தாலும் பாடினாள். அவளுடைய இசையைக்கேட்டு; இசைச் சுவை யறிவதில் மிகவுஞ் சிறந்த கின்னரமிதுனங்களான பறவைகள் மெய்ம் மறந்து நிலத்தில் வீழ்ந்து சோர்ந்தன. பின்னர், அங்குக் கூடியிருந்த இராஜகுமாரர்கள் ஒவ்வொருவராக யாழை வாசித்துப் பாடினார்கள். அவர்களுடைய இசையைக் கேட்டவுடன்; அந்தக் கின்னர மிதுனங்கள் வெறுப்புற்று மேலே பறந்து சென்றன. உடனே தத்தை கண்டத்தால் மட்டும் பாடினாள். அதைக் கேட்டு அப் பறவைகள் மீண்டு வந்தன. பிறகு இராஜகுமாரர்கள் கண்டப் பாட்டைமட்டும் பாடினார்கள். அப்பொழுதே அப் பறவைகள் வெறுப்புற்றுப் பறந்துபோயின. அதனால், இராஜ குமாரர்கள் அவளுக்கு இசையில் தோற்றுப் போயினர். பின்னர் இவ்வாறே அந்தணர் வகுப்பினரும், வைசியர் வகுப்பினரும் தோல்வியுற்றனர்.

இவ்வாறு மூன்று வருணத்தார்களும் தோற்றுப் போனபின், கட்டியங்காரன் அங்குக் கூடியிருந்த ஆடவர்களை நோக்கி, "வேல்வீரர்களே! இப் பெண்ணை வீணையில் வெல்பவன் இவ் வுலகத்தி லில்லை; ஆதலின் நீங்கள் இனி யாழ் வாசிப்பைவிட்டொழிவீராக" என்று வெறுத்துக் கூறினான். அதன்மேல் காந்தருவதத்தையுடன் எதிர்ப்பாரொருவரு மில்லாமையால், அவள் ஆறு தினங்கள் வரை, 'இன்னும், எவரேனும் வந்தெதிர்ப்பார்கள்' என்று அம் மண்ட

பத்தில் வந்திருந்து பார்த்தாள். ஒருவரும் எதிர்த்திலர். அதனால் அங்கு வந்திருந்த ஆடவர்களெல்லோரும் மிக்க அவமானத்தை படைந்திருந்தார்கள்.

இப்படி யிருக்கும் போது அந்த ஆறு தினங்களும் கழிந்தபிறகு ஒரு சமயம் ஜீவகனும், அவன் தம்பியாகிய நந்தட்டனும், புத்திசேனன் முதலிய தோழர்களும் ஒரிடத்திற் கூடித் தத்தையின் வீணைப்போர் விரதத்தைக் கேள்விப்பட்டு, "எல்லோரும் அப் பெண்ணிற்குத் தோற்றுப் போயினர்; ஆயினும் அந்தக் கூட்டங் கலைவதற்குள் நாமும் அங்குச் சென்று அவளுடன் இசைத்தொழிலில் எதிர்த்துப் பார்க்கவேண்டும்" என்று ஆலோசித்தார்கள். அங்ஙனம் ஆலோசித்த பின்பு, ஜீவகனும் அங்குச் செல்லத் துணிந்து, புத்திசேனனை நோக்கி, "நண்ப! நான் வீணைப் போருக்குச் செல்ல விரும்புவதாக என் தந்தைபால் நீ சென்று தெரிவிப்பாயாக," என்று கூறினன். அவ்வாறே அப் புத்திசேனன் கந்துக்கடனிடம் அதனைத் தெரிவித்தான்.

இதற்கு முன், ஜீவகன் கட்டியங்காரனுடைய சேனையால் மீட்க முடியாமற்போன பசு நிரையை மீட்டும், ஒருசமயம் கட்டியங்காரனுடைய பரிவாரங்கள் பசியால் தளர்ந்தபோது ஆயிரம் மிடாப்பருப்புச்சோறும், நெய்யும், சர்க்கரையுங் கொண்டுபோய் அவர்களூக் கூட்டியும், ஆயிரம் பேர்களாலுந் தூக்க முடியாத ஒரு நீண்ட கல்லைத் தூக்கித் தோளில் வைத்தாடியும், இரண்டு யானைகளால் தூக்க முடியாத ஒரு கல்லைப் புஷ்பச் செண்டைப்போலக் கையிலெடுத்தேந்தியும், இன்னும் பல அரும் பெருஞ் செயல்களைச் செய்தும் கீர்த்திபெற் றிருந்ததால் கட்டியங்காரன் இவன் மீது பொறாமைகொண் டிருந்தா னதலின், கந்துக்கடன், மேற்கூறியபடி புத்திசேனன் உரைத்ததைக் கேட்ட

வுடனே, 'கட்டியங்காரன் உட்பகையால் ஜீவகனுக்கு ஏதே னும் தீங்கு செய்தாலும் செய்யக்கூடும்; ஆதலின், அவன் அங்குச் சென்றாலும் ஜாக்கிரதையுடன் செல்லும்படி செய்யவேண்டும்' என்று நினைத்து அப் புத்திசேனனை நோக்கி, "அன்ப! ஜீவகனே அறுபத்து நான்கு கலைகளி லுந் தேர்ச்சி யுற்றவன்: அதனால் அப் பெண்ணை நிச்சயமாக இசையில் வெல்வான்; ஆயினும், கட்டியங்காரன் அவன் மீது பொறாமையால் உட் பகை கொண்டிருக்கிறானாதலின், அவனுக்கேதேனுந் தீங்கு செய்வானோ என்ற சந்தேகம் என்மனத்தில் உதிக்கின்றது" என்று மேலும் சில விஷயங் களைக் கூறத் தொடங்கினான். அத் தருணத்தில் சச்சந்தமகா ராஜனுடைய அகப் பரிவாரமகளிருள் ஒருத்தியாகிய நாக மாலையென்பாள் ஜீவகன்மீது விசுவாசமுடையவளாதலின், "ஜீவகன் ஒருவாறு வீணைப் போருக்கு வந்தாலும் வரு வான்; அப்படி வரின் கட்டியங்காரனால் அவனுக்குத் தீங்கு நேரும்; ஆதலால், அவன் அத் தீங்கில் அகப்பட்டுக் கொள்ளா திருக்கும்படியான மார்க்கத்தைத் தேடிக்கொள் ளும்படி கந்துக்கடனுக்கு இரகசியமாகத் தெரிவிக்கவேண் டும்" என்று கருதி அதற்குரிய சில விஷயங்களைக் குவளைத் தாளினால் ஓர் ஓலையில் சித்திரம்போல வரைந்து அவ்வோலை யைச் சுற்றி அக் குவளைப்புஷ்பத்திற்குள் வைத்து அப்புஷ் பத்தைத் தனக்கு வேண்டியவளாகிய ஒரு தாதியின் கூந்த லுக்குள் வைத்து மறைத்து, அவளிடத்தில் "உயிர்ப் பாங் கியே! நீ கந்துகனிடத்திற் சென்று இவ் வோலையைக் கொடு த்து,மேலும் ஜீவகனைப் பாதுகாக்கவேண்டிய விஷயத்தைப் பற்றிச் சொல்லத் தக்கவைகளையும் சொல்லி வருவாயாக" என்று கூறி அவளை யனுப்ப, அவள் வந்து தன் கூந்தலில் குவளை மலரில் மறைத்து வைக்கப்பட்டிருந்த ஓலையை யெடுத்துக் கந்துகன் கையிற் கொடுத்தாள். அவன் அதை

வாங்கி, வாசிக்கவேண்டிய கிரமப்படி வாசித்துப் பார்த்தான். அதில், "ஜீவகன் வெற்றியும் புகழும் பெற்று இந்நகரில் வாழ்வதைப் பற்றிக் கட்டியங்காரன் பொறாமையுங் கோபமுங் கொண்டு, 'ஜீவகனை எப்படியாவது தொலைத்துவிட வேண்டும்' என்று கருதி, இதனை இன்று என்னிடம் வெளியிட்டிருக்கிறான். ஆதலால், ஜீவகனை வேற்றூருக் கனுப்பி விடுவீராக" என்று நாகமாலை எழுதியிருந்தாள். அதை வாசித்துப் பார்த்தவுடன் கந்துகன், 'நாம் நினைத்தபடியே கட்டியங்காரன் கருதியிருக்கின்றான்' என்று விசனமுற்று ஓலை கொண்டு வந்தவருடைய முகத்தைப் பார்த்தான். அவளும் கந்துக்கடனையும், புத்திசேனனையும் நோக்கி, "ஓலையில் எழுதியிருக்கிறபடி கட்டியங்காரன் பகைகொண் டிருப்பது உண்மைதான்; அவன் பகை கொண்டதற்குக் காரணங்கள் பல உண்டு; அவற்றுட் சிலவற்றைக் கூறுகிறேன் கேட்பீராக: ஒரு தினம் கட்டியங்காரனுக்கு முன்னே நாடகமேடையில் அநங்கமாலை யென்னும் நிருத்த மாதால் ஆடப்பெற்ற நாடகம் நடந்தது. அதற்கு எல்லோரும் வந்திருந்தார்கள்; ஜீவகசாமியும் தம் தோழரோடு வந்திருந்தார். அப்போது நாடகமாதை, நாடகநூலிற் சொல்லும் முறைமைப்படி அதில் தேர்ச்சி பெற்ற ஒரு புருஷன் அலங்கரிக்க வேண்டியது கிரமமாதலின் அங்குக் கூடியிருந்த புலவர்கள் அதற்கு ஜீவகசாமியே தகுதியுடையவர் என்று கூற, அவ்வாறே நம் புதல்வர், பரதசேனாபதியம் என்னும் நூலிற் கூறிய கிரமப்படி அவளை அலங்கரித்தார். அதன்மேல் அம் மாது ஜீவகசாமியின் மீது மிக்க பக்ஷமுடையவளாய்க் கிரமப்படி நிருத்தம் புரிந்தாள். அந் நிருத்தத்தைக் கண்டு எல்லோரும் வியந்தார்கள். ஆனால், ஜீவகசாமி மாத்திரம் சிரக் கம்பஞ் செய்யவில்லை. அங்ஙனம் செய்யாவிடினும் அவள் அவரே தன்

னுடைய நாடகத்தை மதிக்க வேண்டு மென்று கருதி அவனையே அடிக்கடி நோக்கிய வண்ணமாகவே ஆடினளே யன்றிக் கட்டியங்காரனைச் சிறிதும் மதிக்கவில்லை. அத னால், கட்டியங்காரன் நாடகம் தீர்ந்த பிறகு அவ் வநங்க மாலையை அரண்மனைக்கு வலிதிற் பிடித் திழுத்து வரச் செய்து பலவாறு துன்பப் படுத்தினன். அவன் அங்ஙனம் துன்புறுத்தியும் அம் மாது ஜீவகசாமியின் மீது வைத்த விசு வாசத்தை விடவில்லை. அது கண்டு அவன் மேலும் கடுஞ் சின மடைந்து தன் பக்கத்தி லிருந்தவர்களை நோக்கி, 'நான் அரசனா யிருக்க, இந்நகர மாந்தர்க ளெல்லோரும் என்னைக் கொண்டாடாமல் கேவலம் அந்தச் செட்டி மகனாகிய ஜீவ கனையே கொண்டாடுகின்றார்கள்; இந்தத் தாசியும் அவ னையே மதித்திருக்கிறாள்; ஆகலின், அவனைக் கொன்றுவிட வேண்டும். அப்பொழுது தான் எனக்குச் சிறப்புண்டாகும்' என்று கூறினன். அதற்கு அவர்கள், 'முன்னொரு தினத் திலே ஜீவகன் ஆயிரம் வீரர்கள் தூக்க முடியாத திரண்ட கல்லொன்றைத் தூக்கி ஒரு தோளில் ஏந்தி யாடினன்; மற்றொரு தினத்தில் ஒரு யானைபால் தூக்க முடியாத இரண்டு கற்களை இரண்டு கைகளிலும் செண்டுகள் போலத் தூக்கி யெறிந்தான்; ஆதியில் வேடர் கொண்டு சென்ற பசுநிரையை மீட்டான். ஒரு சமயம் நாங்கள் பசி கொண்டு ஆகார மகப்படாமல் வருந்திய காலத்தில் ஆயிரம் மிடாப் பருப்புச் சோறும், ஆயிரம் நெய்க் குடங்களும், ஆயிரம் சர்க்கரைக் குடங்களும் கொடுத்து எங்களைக் காப்பாற்றி னன். இன்னும் அவன் எத்தனையோ நன்மைகளை யெல் லாம் செய்திருக்கின்றான்; அவன் நம்முடைய நகரத்தி லிருப்பதால் நமக்கு மிகவும் சிறப்புண்டு; ஆகலின், அவ னைக் கொல்ல லாகாது' என்று கூறினர்கள். அங்ஙனம் கூறியும் அவன் அவ் வெண்ணத்தை விடவில்லை. நம் ஜீவக

சாமிக்குத் தீங்கு செய்யும் சமயத்தை எதிர் பார்த்திருக்கிறான்; இது அரண்மனையில் நடந்த இரகசியமான விஷயம்'' என்று கூறினாள்.

கந்துக்கடன் இவற்றை யெல்லாம் கேட்டு அந்தப் பெண்ணிற்கு நல்ல ஆடையாபரணங்களைப் பரிசிலாகக் கொடுத்து, 'இன்னும் அரண்மனையில் நடக்கும் இரகசியங்களை ஒன்றிக் கேட்டு வருவாயாக' என்று சொல்லி அவளை யனுப்பிவிட்டு, புத்தி சேனனை நோக்கி, "அன்ப! நான் முன்னே நினைத்துக் கூறியபடியே கட்டியங்காரன் கருதியிருப்பதை நாகமாலையால் நாம் ஐயமற உணர்ந்துகொண்டோம்; ஆகலால், இப்பொழுது நீங்கள் அங்கே சென்றால் கட்டியங்காரன் சூழ்ச்சியால் நிச்சயமாகப் போர் நிகழும்; ஆதலின் படையைச் சேகரித்துக்கொண்டு செல்வீராக'' என்று கூறினான். புத்தி சேனன் ஜீவகனிடத்தே சென்று இங்கு நடந்த செய்திகளை யெல்லாங் கூறினான்.

ஜீவகன் புன்னகை செய்து, "நாம் அங்குச் செல்வதால் தீங்கு ஒன்றும் வராது; ஒருவாறு அந்தக்கட்டியங்காரனும் மற்றவர்களும் நம்மோடெதிர்ப்பினும் அவர்கள் வன்மை நமக்கு முன் செல்லாது; நாம் சந்தேகமின்றிப் புறப்படலாம்'' என்று அலங்காரஞ் செய்து கொண்டு, தன் தோழரும், நால் வகைப் படைகளும் தனக்குப் பின்தொடர்ந்து வர யானை மீதேறிப் போய் யாழ்மண்டபத்தை யடைந்தான். ஜீவகன் யாழ்ப் போருக்குச் செல்வதை யுணர்ந்து, 'இவன் எப்படியும் தத்தையை வெல்வான்' என்று எல்லோரும் வந்து கூடினார்கள். கட்டியங்காரன் ஜீவகனைக் கண்டவுடன், 'செட்டி மகன் எவ்வளவு செருக்கோடு வருகின்றான்' என்று மனம் புழுங்கிப் போனான். அதன்மேல்

ஜீவகன் யானையை விட்டிறங்கியாழ் மண்டபத்தினுட் புகுந்து தனக்கென்று புதிதாக இடப்பட்ட தவிசின்மேல் அமர்ந்தான். காந்தருவதத்தை அவனுடைய தோற்றத்தைக் கண்டு வியந்தாள். அங்ஙனம் வியந்து பின்னர்த் தன் தோழியிடம் ஒரு நல்ல வீணையை எடுத்துக் கொடுத்து, "தோழி! இவ் வீணையே இக்குமாரர் வாசிக்கத் தகுந்த சிறப்பினையுடையதாகும்; ஆயினும், இவரிடம் வேறு பல யாழ்களைக் கொடுத்து அவற்றின் மூலம் இவருடைய வித்தையின் திறத்தைப் பரீக்ஷித்தறிந்துகொண்டு அதன் மேல் இதனைக் கொடு" என்று கூறினாள். அக் கட்டளையைப் பெற்றபின் விணாபதி யென்னுந் தோழி அந்த நல்ல வீணை யொன்றினையும் வேறாகவைத்து விட்டு மற்ற வீணைகளையெல்லாம் ஒவ்வொன்றாக ஜீவகனிடம் கொடுத்தாள். அப்போது ஜீவகன் தன் இசை ஞானத்தை எல்லோருக்கும் அறிவிக்கக் கருதி அவற்றையெல்லாம் ஒவ்வொன்றாக வாங்கி விரலால் மீட்டி அவற்றின் நாதத்தால் அவற்றில் ஏற்பட்டிருந்த செம்பகை, ஆர்ப்பு, கூடம், அதிர்வு முதலிய குற்றங்களை யுணர்ந்து வெளிப்படுத்தி, மரத்தின் பேதத்தாலேற்பட்ட குற்றங்களையும் ஆராய்ந்து, "இது, நீரிலே நின்றிளகி மெலிந்த மரத்தாற் செய்யப்பட்டது," "இது நீரிலே நின்று அழுகிய மரத்தாற் செய்யப் பட்டது," "இது வாளால் வெட்டுப்பட்ட காயமுடைய மரத்தாற் செய்யப்பட்டது," "இது இடியேறுண்ட மரத்தாற் செய்யப்பட்டது," "இது பலநிலங்கலந்த இடத்தி லுண்டாகிய மரத்தாற் செய்யப் பட்டது" "இது சூடுபட்ட மரத்தாற்செப்பப்பட்டது" "இது யானைபற்றி யிழுத்ததால் முறிந்த மரத்தாற் செய்யப் பட்டது" என்று ஒவ்வொன்றுக்குங் குற்றங் கூறி எல்லாவற்றையும் நீக்கி விட்டான். அதன் மேல் விணாபதி மேற்கூறிய நல்ல யாழைக் கொடுத்தாள். அதை ஜீவகன் வாங்கிப்

பார்த்துவிட்டு, "இது யாழுக் கென் றேற்பட்ட கொன்றை, கருங்காலி, முருக்கு, தமிழ், தணக்கு முதலிய மரங்களில் ஒன்றினால் லக்ஷணப்படி கோடு, பத்தர், ஆணி, நரம்பு, மாடகம் என்ற ஐவகை உறுப்புக்களுடன் அமைக்கப் பெற்றது தான். ஆயினும், இதன் நரம்பில் கொடும்புரி, மயிர், தும்பு, முறுக்கு ஆகிய நால்வகைக் குற்றங்களில் மயிர் சேர்ந்திருத் தலாகிய குற்றம் பொருந்தி யிருக்கின்றது" என்று அந் நரம்பின் முறுக்கை யுடைத்து அதிற் சேர்ந்திருந்த உரோமத்தைத் தனியாக எடுத்துக் காட்டினான். அது கண்டு அங்குள்ள யாவரும் அவனுடைய புத்தி நுட்பத்தை வியந்தார்கள்.

அதன்மேல் ஜீவகன், தத்தையின் யாழ்களில் ஒன்றும் சரியான தன்று என்று சொல்லிப் பக்கத்தில் நின்ற தன் துணைவனாகிய நபுலன் கையி லிருந்த தனது வீணையை வாங்கி, கண்டத்திற் பிறந்து கண்டத்தினின் றிசைக்கும் இசையாகிய செம்பாலை யென்னும் இசையே யுண்டாக வாசித்தான். அவ்விசையைக் கேட்ட தேவர்களும், மனிதர்களும் அதனைக் கண்டப் பாடலென்றே நினைத்து மதிமயங்கினார்கள். கின்னர மிதுனங்களென்னும் பறவைகளும், அசுணங்களென்னும் இசையறி விலங்குகளும் புத்தி மயங்கிச் சோர்ந்தன; மரங்களும் கற்களும் உருகின. இவ்வாறு எல்லோரும் மதி மயங்க அவன் வீணையை வாசித்த பின்னர் அதற்கேற்பத் தன் கண்டப் பாடலையு மெழுப்பி ஆலாபனஞ் செய்து பாடினான். இவ்வாறு அவன் யாழ் வாசித்ததையும், அதற்கேற்ப மிடற்றுத் பாடியதையுங் கேட்டு இரண்டுக்கும் வேற்றுமை தெரியாமல் கின்னரர் வெட்கித் தம் வீணையைக் கை விட்டார்கள்; விஞ்சையர் நெஞ்சுருகி மெய் சோர்ந்தார்கள். மண்ணுலகத்திலுள்ள மனிதர்கள்,

பிரமை யடைந்தார்கள். முனிவர்கள், 'நாம் அடையவேண்டிய பேரின்பம் இதுவே' என்று அவ்விசையை மனத்துட் கொண்டார்கள். அதன்மேல் ஜீவகன் வீணை வாசிப்பை நிறுத்திக்கொண்டு கண்டத்தால் தனியே பாடினன். அதைக் கேட்டு அரசர்களெல்லாரும் சித்திரப் பாவை போல அசைவற் றிருந்தார்கள்.

காந்தருவதத்தை இவற்றை யெல்லாங் கேட்டு, "பருந்தைப் போலவும், அதைத் தொடர்ந்து செல்லும் அதன் நிழலைப் போலவும், கண்டப் பாடலும் அதற்கிசைந்த யாழ் வாசிப்பும் இந்த ஜீவக வள்ளலுக்கே அமைந்தன; ஆதலின், நாம் இனித் தோல்வி யடைவது நிச்சயம்" என்று கருதித் தன்னுடைய வீணையை அலங்கரித்து வாசித்தாள்; அவ் வாசிப்பானது ஜீவகனுடைய யாழிசைக்கு நிகராக வில்லை; அதனால் அவள் மிக நாணத்தை யடைந்து கண்டப் பாடலைப் பாடினள். அதுவும் அவன் பாடலுக்கு நிகராக வில்லை. பின் அவள் யாழ் வாசிப்போடு கண்டப் பாடலைச் சேர்த்துப் பாடினள்: அவைகளும் ஜீவகனுடைய யாழ் வாசிப்புக்கும் கண்டப் பாடலுக்கும் இணையாக வில்லை; அதனால் அவளுடைய விரல்கள் வீணை நரம்புகளின் மேல் கூச்ச மற்றுச் செல்லாவாயின; அவள் யாழை நிறுத்தி விட்டுக் கண்டப் பாடலை மாத்திரம் தனியாகப் பாடும்போதும், அவயவங்கள் நலித லின்றிப் பாடவேண்டிய உள்ளாளப் பாட்டில் கண்டம் நடுக்கமுற்றது. இவ்வாறு ஒவ்வொரு வகையிலும் குறைவு படவே காந்தருவதத்தை ஜீவகனுக்கு இசையில் தோற்றனள்.

அதன்மேல் அவள், தான் செய்து கொண்ட பிரதிஞ்ஞையின்படி, ஜீவகனை தனக்குரிய மணமகனென்று கருதி,

மிக்க நாணத்தோடு பொன் மாலையைக் கையி லெடுத்துக் கொண்டுபோய் அவன் கழுத்திற் சூட்டி அவனுடைய பாதங்களை வணங்கி நின்றாள். அப்போது அவள் ஆடவர் சபை நடுவே நிற்றற்கு நாணி வருந்துவா ளென்று அவளுடைய தோழிமார்கள் திரையிட்டு அவளை மறைத்தார்கள். ஜனங்களெல்லோரும், 'ஜீவகன், இப்பெண்ணை யடைதற்கு நல்ல தவத்தைச் செய்தான்' என்று ஆர்ப்பரித்தார்கள். கட்டியங்காரனோ முந்தியே ஜீவகன் மீது மிக்க பொறாமை யுடையவனாதலின், மேலும் அதிகரித்த பொறாமை யுடையவனாய் அரசர்களுக்கும் ஜீவகனுக்கும் போரை மூட்டிவிட்டு அவனை யொழித்து விடவேண்டு மென்று கருதி உடனே அங்கிருந்த அரசர்களை நோக்கி, "மன்னர்காள்! மிக்க வீரர்களாகிய நீங்கள் இருக்க, கேவலம்! ஒருசெட்டிமகனாகிய ஜீவகனோ வித்தியாதர மன்னன் மகளாகிய தத்தையைக் கைக் கொள்வது! வணிகன்மகளை அரசர் கொள்ளுதல் முறையே யன்றி அரசர் மகளை வணிகன் கொள்வது நியாய மன்று; அரசர்களாகிய நீங்கள் இப்போது இப்பெண்ணை வணிகன் கொள்ளும்படி விட்டுவிட்டதால் மேருவைப்போல் உயர்ச்சி யுற்ற உங்கள் குலத்தினுக்கு இழிவைத் தேடிக்கொண்டீர்கள்; இந்த இழிவானது உலகம் உள்ளளவும் நீங்காது; ஆதலின், இவனோடு போர் செய்தாவது இப் பெண்ணைக் கைக் கொண்டு கீர்த்தியை நிலை நிறுத்தி இவ் விழிவை நீக்கிக் கொள்வீராக; அங்ஙனம்போர் செய்தற்கு அஞ்சுவீர்களானால் உங்கள் கிரீடங்களைக் கீழே யெறிந்து விட்டுத் தவஞ் செய்தற்கு வனஞ் செல்லுவீராக; அதன் மேல் நீங்கள் அரசர் என்று பேர் வைத்துக்கொண்டிருப்பதில் யாது பயன்? இன்னும், நீங்கள் கையால் பிசைந் தெறியத் தக்க ஒரு மெல்லிய மலர்ப்பந்தை, சுற்றிலும் யானைகள் காக்கின்ற ஒரு கொல்லையில் வைத்து வலிமை யுடையதாகச் செய்து

விடுவது போல, எளிதில் வெல்லத் தக்க இவனுக்கு இப் பெண்ணைக் கொடுத்து இச் சிறப்பால் வன்மை யுண்டாகச் செய்து, பின்னை இவனை நான் எளிதில் வெல்ல முடியா திருக்கும்படி செய்து விட்டார்கள்; இனி இம் மண்ணாட்சி யும் இவனிடத்தே சாரும். இன்னு மொன்று கேளுங்கள்; இந்தக் காந்தருவதத்தை எல்லாப் பாக்கியங்களையுந் தரத் தக்க லக்ஷணமமைந்தவள்; ஆதலின், இவளைப்பெறுவோன் இப் பூமிக்கும், சக்கரவாளத்திற்கும் இறைவ னுவான்; ஆகையினாலே இவளை நீங்கள் விடாதீர்கள்; இன்னும், 'நாமெல்லோரும் ஜீவகனோடு சண்டை செய்து இவளைப் பெற்றாலும், பலராயிருப்பதால் பின்னை இவளை அடையும் விஷயத்தில் நமக்குள் போர் நிகழும்; முடிவில் எல்லோ ரும் மடிந்து எஞ்சிய ஒருவனே அடைவான்; அதனாற் பய னென்ன' என்று நீங்கள் நினைக்க வேண்டாம். இவளை எல்லோரும் பெற்றுக் கொண்டபின் எவரும் சண்டை யிட்டு மடியாமல் ஒருவர் எடுத்துக் கொள்ளத் தக்க உபாய மிருக்கின்றது; அஃது யாதெனில், எல்லோரும் தடாகத்தி லிறங்கித் துருத்தி கொண்டு ஒருவர்மீ தொருவர் நீரை இறைத்தலாகிய விளையாட்டைச் செய்து அதில் இளைத்த வர் நீங்க முடிவில் ஜெயங் கொண்டார் எவரோ அவர் இவ ளைப் பெற்றுக் கொள்ளலாம்; நீங்கள் விரைந்து யுத்தந் தொடங்குவீர்களாக" என்று இடித்து இடித்துக் கூறி அவர்களுக்கு வீரமும், போரில் ஊக்கமும் உண்டாகும்படி செய்தான்.

அவனுடைய மித்திர பேதமான வார்த்தைகளைக் கேட்டவுடன் அப் பேதையராகிய அரசர்கள் ஜீவகனோடு போருக் கெழுந்தார்கள். அப்போது பதுமுகன், கட்டியங் காரனுடைய எண்ணத்தையும், அரசர்களுடைய மதியின்

மையையும் உணர்ந்து, அரசர் சாமபேத தான தண்டமென்னும் சதுர்வித உபாயங்களைக் கொண்டு பகைவரை வெல்லல் முறைமை யாகலின், அந்த நான்கு வகையான வார்த்தைகளையுங் கூறி அவர்களைப் போரினின்றும் விலக்கக் கருதி அவர்களை நோக்கி, "'மன்னர்களே ! உங்களால் ஜீவகரை வெல்லுதல் இயலாது; அவரோ வீணைப் போரில் வெற்றிகொண்டு நீதிப்படி தத்தையைக் கைக்கொண் டிருக்கின்றனர்; அப்படி யிருக்க நீங்கள் அவருடன் போருக்கெழுதல் அநீதியாகும்" என்று சாமோபாயமான வார்த்தைகளையும்,

"அரசிளங் குமரர்காள் ! மதங்கொண்ட யானையானது அதிமதுரத்தின் இலையைக் கைக்கொண் டிருந்தால், அவ்வுணவை அதன் கையினின்றும் விடுவித்தல் எவராலும் இயலுமா ? ஒருபோதும் முடியாது; அதுபோல மிக்க வீரமுடைய எங்கள் ஜீவகசாமி கைக்கொண்ட தத்தையை அவர்கையினின்றும் நீக்குதல் உங்களால் இயலாது" என்று பேதோபாயமான வார்த்தைகளையும்,

"மதியற்ற மன்னர்காள் ! கட்டியங்காரன் இவ்வாறு பகை மூட்டி யுத்தத்தில் உங்களை மடியச்செய்து முடிவில் உங்களுடைய பூமியையுங் கைப்பற்றக் கருதியிருக்கின்றான்; ஆதலின் நீங்கள் வீணே கெட்டுப் போகாதீர்கள்; இப்போது நாங்கள் உங்களோடு சண்டைசெய்யாமல் நீங்கள் இழக்கவிருக்கும் பூமியை உங்களுக்குத் தானமாகத் தருகின்றோம்; அதனைப் பெற்று நீங்கள் சண்டையை விட்டுச் செல்வீராக" என்று தானோபாயமான வார்த்தைகளையும்,

"கட்டியங்காரனுடைய மித்திர பேதமான வார்த்தைகளைக் கேட்டுக் கெடுகின்ற புரவலர்காள்! நான் இப்பொழுது

கூறிய வார்த்தைகளைக் கேட்டுப் போரைவிட்டொழிந்தால் மாத்திரம் நீங்கள் பிழைப்பீர்கள்; இல்லையேல் எங்கள் ஆயுதங்களால் மடிவது நிச்சயமாகும்'' என்று தண்டோபாயமான வார்த்தைகளையுங் கூறினன்.

இவ்வாறு பதுமுகன் கூறியும் அவர்கள் கேளாமல் கெடுமதியால் வீராவேசத்தோடு போர்ப் பறைகளை முழக்கிச் சண்டை செய்யத் தொடங்கினார்கள். எங்கும் எதிரிகளின் படைகள் திரண்டு முழங்கின. அப்போது ஜீவகன், சண்டை நிகழ்வதால் தத்தை அஞ்சுவாளென்றெண்ணி அவளுக்குத் தைரிய வார்த்தைகள் கூறத்தொடங்கி அவளை நோக்கி, "பெண்ணே! இம் மன்னர்கள் தங்கட்கு அழிவு காலம் நேர்ந்தமையினாலேயே இப்பொழுதுபோருக்கெழுந்தனர். நிமிஷநேரத்தில் என் ஆயுதத்திற் கிரையாவார்கள்; எனக்கு ஏதேனும் தீங்கு நேருமோவென்று நீ சிறிதும் அஞ்சாதே'' என்று கூறினன். இதைக் கேட்டவுடனே காந்தருவதத்தை அஞ்சி, "அந்தோ! போர் நடந்தால் என்ன தீங்கு விளையுமோ! இப் போர் உண்டாவதற்குக் காரணம் யானே; என் நாதர்க்கு இத்தகைய கஷ்டத்தை விளைவித்த பாவியேன் எதற்காக உயிர்வைத் திருக்கவேண்டும்'' என்று வருந்தி முகத்தி லறைந்துகொண் டழுதாள். அது கண்டு அவளுடைய தோழி, "மாதே! நம் தலைவர் படை மிக்க வன்மை யுடையது; ஜயம் நமக்கே யுண்டாகும்; நீ கவலைப்படாதே'' என்று முன்றானையால் அவள் கண்ணீரைத் துடைத்து அவளைத் தேற்றினள். அப்போது காந்தருவ தத்தையுடன் சென்றிருந்த பெண் படைகள், "இந்தப் போரில், எங்களுடைய பெண்தன்மையினும்,மன்னர்களுடைய ஆண்தன்மையினும், இன்னது தான் சிறந்ததென்பதை எங்களுடைய வீரத்தால் விளக்கிக் காட்டுகின்

ரோம்" என்று வாளாயுதங்களைத் தாங்கி அவளைச் சூழ்ந்து நின்றன. அவளுடன் வந்திருந்த கூன்களும், குறள்களும் படையெழுச்சியைக் கண்டு பயந்து பொற் பெட்டிகளிற் சில புகுந்து மறைந்து கொண்டன; பரணைகளிற் சில நுழைந்து ஒளித்துக் கொண்டன; சில திரண்டு மருண்டு நின்றன; சில பளிங்குத் தூண்களிலே மறைந்தன.

அதன்மேல் ஜீவகன், அவற்றின் செய்கையைக் கண்டு சிரித்து, காந்தருவ தத்தையை நோக்கி, "மாதே! உன்னையும் உன் பரிவாரங்களையும் பதுமுகன் காத்துக் கொள்வான்; நீங்கள் பயப்படா திருப்பீராக" என்று கூறிவிட்டு உடனே கோபத்துடன் பதுமுகன் நிற்கின்ற இடத்தை நோக்கிச் சென்று அவனைக் காந்தருவ தத்தையைக் காக்கும் படிக்கும், புத்திசேனன், தேவதத்தன், ஸ்ரீதத்தன் ஆகிய தோழர் மூவரையும், நபுலவிபுலவராகிய சகோதரரையும் நோக்கிப்படைகளை நான்குகையாக அணிவகுத்து நிறுத்தும் படிக்கும் கட்டளையிட்டான். அவர்கள் அவ்வாறே செய்தனர் பின், ஜீவகன் நந்தட்டனுடனே தேரிலேறிப் பகையரசர்க்கு முன்சென்று, "மதிகெட்ட மன்னர்களே! நீங்கள் காந்தருவதத்தையைப் பெறலாமென்றுவந்து இப்பொழுது என் கையம்பினால் இறந்தொழியப் போகின்றீர்கள்; நீங்கள் வருங்காலத்தில் மற்றொரு பெண்ணைக் கலியாணஞ்செய்யப் போகின்றீர்களென்று பிணங்கிய உங்கள் மனைவிமாரின் ஊடலைத்தீர்த்து இனி அவர்களைச் சமாதானப் படுத்துவாரெவர்?" என்று வீரமான வார்த்தைகளைப் பேசினான். அவர்களும் ஜீவகனைநோக்கி, "வணிகபுத்திர! உன்குலத்தவர் உணவையுஞ் சுருக்கிச் சேகரித்த முதலுக்கும் இலாபத்திற்கும் கேடுவருவதாயிருந்தால் அச் சமயத்தில் இலாபத்தைக்கருதாமல் முதலையேனும் காப்பாற்றிக் கொள்ளுதலே சிறந்த

ஊதியமாமென்று நினைத்து அதனைக் காப்பாற்றிக் கொள்வர்; நீ அக்குலத்திற் பிறந்தும் முதற் பொருளாகிய உன்னைக் காப்பாற்றிக் கொள்ளாமல் இலாபப் பொருளாகிய தத்தையின் பொருட்டுப் போர்செய்து எல்லா நலங்களையும் இழக்கப்போகின்றாய்; இதனால் நீ உன் குலத்தொழிலாகிய வாணிபத்தைச் சரியாகக் கற்றுக் கொள்ளாதவனா யிருக்கின்றாய்; இனியாவது இலாபப் பொருளாகிய தத்தையைக் கைவிட்டு முதற் பொருளாகிய உன் தேகத்தைக் காப்பாற்றிக் கொள்வாயாக'' என்று கூறினார்கள். அதற்கு ஜீவகன், ''பேதைகளே! தங்களுடைய பண்டத்தைப் பிறர்க்குக் கொடுத்து அவர்களுடைய பொருள்களைப் பெற்றுக் கொள்ளுதல் எங்கள் குலத்தவரின் இயற்கையாதலின், அவ்வாறே நானும் என் கையம்பை உங்களுக்குக் கொடுத்து, உங்களுடைய வீரத்தையும் புகழையும் பெற்றுக் கொள்ளப் போகின்றேன்; நீங்கள் வல்லவர்களாயின் அவற்றைப் பாதுகாத்துக் கொள்வீராக'' என்று சொல்ல, அவர்கள், ''இதோ சற்று நேரத்திற்குள் மார்பிலே எங்களுடையசரங்கள் பாயநீ வலிகுன்றிக் கீழே விழப்போகின்றாய்; அதற்குள் உனக்கு இவ்வளவு வீரமா'' என்று கூறினார்கள். இதைக் கேட்டவுடன் ஜீவகன் அடங்காச் சீற்றத்தனாய், ''சூரியனைக் கண்டு இருள் நீங்குவதுபோல நீங்கள் என்னுடைய தோற்றத்தைக் கண்டு மறைந்து செல்ல உங்களை நான் புறங்கண்டு இவ்வுலகிற் புகழை நிலைநிறுத்தேனாயின் மனிதரிற் பதராவேன்'' என்று வஞ்சினங் கூறினான்.

இவ்வாறு இருதிறத்தாரும் வீரமொழிகளைப் பேசிய பின்னர் இருவகைப் படைகளும் மிகுந்த ஆரவாரத்துடன் போர் புரிந்தன. ஜீவகன் தோழரும் வெற்றிகுறித்துப் பொற்றகட்டை வாயு ளிட்டு வில் வளைத்துப் போர்செய்யத்

தொடங்கினர். அரசர் படைகளும் சரங்களை மாரிபோற் பொழிந்தன. அத் தருணத்தில் இரண்டு படைகளிலும் வாட் கூட்டங்கள் மின்னொளிபோற் பிரகாசித்தன. குதிரைப் படைகளும், தேர்ப் படைகளும் ஒன்றுட னொன்று எதிர்த்துத் தாக்கின; போர்ப்பறைகள் ஒலித்தன; சங்கங்கள் முழங்கின. அப் போரின் தொடக்கத்திலேயே அம்புகளால் அநேக வீரரின் தலைகள் அற்று வீழ்ந்தன; குதிரைகளும் யானைகளும் குப்புற்று விழ்ந்தன; தேர்கள் சிதைந்தன. ஜீவகன் தோழர்களுள் ஐஞ் ஞூற்றுவர்கள் எதிரிகளை நோக்கி, "உங்களுக்கு வல்லமை புளதாயின் எம்முடன் போர்புரிய வருவீராக" என்று கூறுவாரும், எதிர்த்தவர் மார்பி லல்லாது எதிராதார் மார்பில் படை யேவாது நிற்பாரும், யானைக்கொம்பு கீறி வடுப்பட்டுத் திகழ்வதே வீரத்துக்கு அறிகுறியா மென்று தங்கள் மார்பை யானைகுத்தக் கொடுத்து நிற்பாரும், பகைவர்களை, 'இவன் எனக்கு,' 'இவன் எனக்கு,' என்று வேலாலே சுட்டிக் காட்டி எதிர்கொண்டு நிற்பாரும்,மேற்சென்ற யானையை வேலினல் விலக்கி நிற்பாரும், இன்னும் பல வீரமான செய்கைகளைச் செய்வாருமாய்ச் சிங்கங்களும் புலிகளும் போன்று விளங்கினார்கள்.

தேவதத்தன் ஏறிப் போர் செய்த குதிரையானது வேற் கூட்டங்களைப் பிளந்து, யானைகளின் நெற்றியிலே குளம்புகளை யழுத்தி, மன்னர்கள் அணிந்திருந்த மலர்மாலைகளையும், கிரீட மணிகளையும் எற்றிச் சிதறிக் குயவன் திகிரி போல அப் போர்க் களத்தில் சுழன்று திரிந்தது.

நபுல விபுலர்கள், தங்களுடைய குதிரைகளின் குளம்புகள் எதிரிகளுடைய யானைகளின் நெற்றியிற் படுமாறு

அவற்றைச் செலுத்தி, அந்த யானைகளின் மேலிருந்த அரசர்கள் அஞ்சும்படி அவர்களுடைய கிரீடங்களிற் பதிக்கப் பெற்றிருந்த இரத்தினங்களைப் பறித்துக் கொண்டார்கள்.

பெருங்காயத்தின் குழம்பு பூசப் பெற்ற இரும்பினாலே வெட்ட இலவ மரத்தின் காய்கள் முற்றும் உதிர்வது போல, ஸ்ரீதத்தனுடைய பாணங்களாலே பகைஞர்களுடைய தலைகள் அறுபட்டு வீழ்ந்தன.

புத்திசேனன், கருக் கொண்ட நீலமேகமானது விசும்பில் நின்று கால மழையைப் பொழிவது போல அம்புகளைச் சிந்தி எதிரிகள் சேனைகளை எமனுக்கு விருந்திட்டான்.

இவர்கள் இவ்வாறு நடத்திய சண்டையில் வேல்கள் பாய்ந்து செருகிய உடம்பொடு நின்ற சத்துருக்களெல்லோரும் மேலே கூட்டு (மேலலங்காரம்) இல்லாமல் ஆர்க்கால்கள் மட்டும் தைக்கப்பட்ட தேர்க் குறட்டை நிகர்த்து விளங்கினார்கள். தோழர்களின் தன்மை இப்படியிருக்க, ஜீவகன் நந்தட்டனுக்கு வீரமந்திரம் இரண்டையும் உபதேசித்து அவற்றைத் தன் குதிரைகளின் செவியிலே மொழியும்படி கட்டளையிட்டான். அவன் அவ்வாறே ஜீவகனுடைய நான்கு குதிரைகளின் செவிகளிலுங் கூறினான். அக் குதிரைகள் அந்தரத்தே பாய்ந்து சென்றன. பின்னர் ஜீவகன் கண்டோர் அதிசயிக்கும்படி தன் தேரை மண்டல கதியிற் செலுத்தி, வில்லை வளைத்துப் பகைவர் மேல் அம்புகளை ஏவினான். அப்பொழுது பகைவர் படையில், வெண்குடைகள் காம்பற்றன ; பிச்சங்கள் கவிழ்ந்தன; கவசங்கள்

அறுபட்டன; சாமரைகள் வீழ்ந்தன; விற்கள் நாணற்றன. மேலும் அவன், அரசர்களை நோக்கி, "இவை அம்புகளல்ல; உங்களை யாழில் வென்ற தத்தையின் கண்களாகும்; நீங்கள் விருந்தாக இவற்றை எதிர் கொள்ளுங்கள்" என்று ஒவ்வொருவருக்கும் ஒன்றிரண்டு விழுக்காடுபாணங்களை யேவினன். அச் சுடு சரங்கள், 'நீங்கள்பிறர்மனை விரும்புதலாகிய தீங்கினை இனிமேற் கொள்ளும் உடம்பிலும் கொள்ளாதீர்கள்' என்பன போல அவர்களுடைய கவசத்தை யறுத்து மார்பைத் துளைத்துச் சிலர் உயிரையும் கவர்ந்து பறந்தன; இன்னும் அப்பாணங்களால் அவர்களேறிய தேர்கள், குதிரை வாய்க்கயிறு அறுபட்டு மறிந்து நின்றன; யானைகள் கச்சை துணிபட்டுக் குன்ற மொத்து நின்றன; அவர்கள் கையி லுள்ள விற்கள் நாணற்றுத் தூண்டில் போன்றன; இவ்வாருகவே இறவாது நின்ற அரசர்கள் சக்கரத்தை யேந்தி மேலும் எதிர்த்து ஆர்ப்பரித்தார்கள். மழை பெய்யுங் காலத்தில் மலையில் எதிரொலி யுண்டாவது போல ஜீவகன் படையிலுள்ளாரும் முழங்கினுர்கள். அத் தருணத்தில் ஜீவகன் முன்னினும் அதிகமாகச் சரமாரியைப் பொழிந்தான். அதனுல் உதிர வெள்ளம் பெருகி முன்னே உடலற்று வீழ்ந்த பல பிணங்களை இரண களத்திற்குப் புறம்பில் இழுத்துச் சென்றது. முடிவில் அங்ஙனம் எதிர்த்தவர்களெல்லோரும் அறுபட்டு இறைச்சிக் குன்றைப்போலக் குவிந்து விட்டார்கள். அப்போது, இரண களத்தில் பேய்கள் யானைக் கொம்புகளாலே பற்றுலக்கி, வாளாலே நா வழித்து, உதிரத்தாலே வாய் கொப்பளித்து, எலும்புகளை ஆபரணங்களாக அணிந்து விளையாடின. அவ் விநோதத்தைக் கண்டு ஜீவகன் சிரித்தான். இன்னும், நரிகள் யானைகளைத் தின்று மகிழ்ந்து சந்தோஷமாகக் கூப்

பிட்டன; கழுகுகளும், பருந்துகளும் தசைகளைத் தின்று செருக்கிக் கிடந்தன. இத்தகைய விநோதங்க ளெல்லாம் போர்க் களத்தில் நடக்கும்படி செய்த ஜீவகனைக் கண்ட மாத்திரத்திலே, அவன் தோழர்கள், உப்புச் சேர்ந்த மாத்திரத்திலே மற்றச் சுவைகள் சிறப்படைவது போல, வேலாயுதத்தைத் தாங்கி முன்னிலும் அதிகமாகப் போர்த் திறத்தில் மிகுந்து விளங்கினார்கள். அப்போது பதுமுகனும் தன்னுடைய யானையைச் செலுத்திக் கொண்டு வந்து ஜீவகன் நிற்குமிடத்தே கலந்தான். அவனுடைய யானையும் எஞ்சி நின்ற பகைவரிற் பலரைக் கொன்று பல உற்பாதங்களை விளைவித்தது. முடிவாக எதிரி படைகளில் சிலர் நின்று போர் புரிந்தனர். அத் தருணத்தில் ஜீவகன் ஒரு பக்கமும், பதுமுகன் ஒரு பக்கமும், மற்றத் தோழர்கள் ஒரு பக்கமுமாக நின்று அவர்கள் மீது பாணங்களை யெய்தினர்; பகைவர் ஆயுதப் பிரயோகஞ் செய்ய முடியாமல் தளர்ந்தார்கள். ஜீவகன் அவர்களுடைய தளர்ச்சியைக் கண்டு வில்லை மடக்கிக் கொண்டு, "இனி இவர்களை எய்யவேண்டுவதில்லை" என்று தோழரிடம் கூற, அவர்களும் பாணந் தொடுத்தலை நிறுத்தினார்கள். அதன் மேல், கிருஷ்ணன் பாரதப் போரிலே முழக்கிய வலம்புரிச் சங்கைப் போன்ற சங்கத்தை ஜீவகன் வாயில் வைத்து முழக்கினான். அந் நாதத்தைக் கேட்டு அப் பகைவ ரெல்லாம் யாளி முழக்கத்தைக் கேட்ட வேழக்கிரள் வருந்துவது போல மதிமயங்கிக் கண்ணொளி குன்றிக் கட்டுக் குலைந்தனர். அது கண்டு ஜீவகனும், தோழரும் ஆர்ப்பரித்தனர். அது கேட்டு அம் மாற்றார் ஆயுதங்களைப் போட்டு விட்டு, உப்பு மலை ஓடு நீர்க்கு உடைந்தாற் போல, முதுகு காட்டி யோடினார்கள்.

இங்ஙனம் ஜீவகனும் அவன் துணைவரும் வெற்றி கொண்டதைப்பற்றி, 'சிறு படையையுடைய ஜீவகன் முதலியோர் பெரும் படையை யுடைய அரசர்களை எவ்வாறு வெல்லல் முடியும்' என்று உலகத்தோர் சந்தேகிக்க வேண்டாம். வீர முடையார் எவ்வளவு படைகளையும் எளிதில் வெல்லல் முடியும்; ஒரு சிங்கம் பல யானைக் கூட்டங்களைக் கலங்கச்செய்கின்றதன்றோ; புலி யொன்றே பல கலைமான் கூட்டங்களை அழிக்கின்றதன்றோ; மேலும், நன்கு செய்வார்க்கு நன்மை செய்வாருடைய கை வாளானது எப்பொழுதும் போரில் தப்பி விழாது; அவர்கள் வெற்றிலையை விடினும் அதுவும் வேலாகிப் பகைவரை வெல்லும்; தீமை கொண்ட மனத்தினர்க்குச் சிறந்த படைகளிருப்பினும் பயன் கொடா; ஆதலால், தரும சிந்தனையையுடைய ஜீவகன் முதலியோர் வெற்றியையும், தீய குணங்களையுடைய மன்னர்கள் தோல்வியையுங் கொண்டார்கள்.

இது நிற்க. மேற்கூறியபடி தோல்வி யடைந்த மன்னர் மின்னைப் போலப் புக்க இடமறியாமற் கடுகச்சென்று மறைந்தனர். வித்தியாதரர்கள் ஜீவகனுடைய போர்த்திறத்தைக் கொண்டாடி ஆர்ப்பரித்தார்கள். இராஜமாபுரத்திலுள்ளவர்களெல்லோரும் ஜீவகன்வெற்றியை யுணர்ந்து, அவன் வீதியில் வரும்போது கண்டு களித்தற்கு விரும்பி யிருந்தார்கள்.

அதன் மேல் ஜீவகன் தன் தோழரோடு போர்க் களத்தைச் சுற்றிப் பார்த்து, யுத்த முடிவில் செய்தற்கான வேள்வியை முடித்து, தத்தையை அழைத்துக் கொண்டு வழியில் கண்ட நகர மாந்தர் துதிக்கத் தன் மனைக்குச் சென்றான். யுத்தத்தில் காயம் பட்டவர்களிற் சிலர்,

காயத்தில் நெய்க் கிழி வைக்கப் பட்டார்; சிலர் நெய்ப் பத்தரிற் கிடத்தப் பட்டார்; வேல் தைத்து முறிந்த இடங்களை நாடி இரும்பால் அறுத்து அவற்றை யெடுத்துப் பரிகாரஞ் செய்யப் பட்டார் சிலர். இவர்களுக் கெல்லாம் ஜீவகன் பல ஆபரணங்களைக் கொடுத்து, இறந்தவர் பொருட்டு அழும் சுற்றத்தாருக் கெல்லாம் பண முடிப்பைக் கையிற் கொடுத்தான். இன்னும் மரப் பொந்து போலப் புண்ணுற்றார்க்கு இரண வைத்தியர்கள் நெய்ச் சோற்றுக் கவளத்தை அப் புண்ணில் வைத்துப் பரிகாரஞ் செய்தார்கள். பதுமுகன் மார்பில் யானைக்கொம்பு பாய்ந்து காயம்பட்டிருந்தபடியால், ஜீவகன் தானே அக்காயத்தில் நெய்ச் சீலையைச் சேர்த்தி உள்ளே காற்றுப் புகாதபடி எலிமயிர் வஸ்திரத்தாற் செய்யப்பட்ட சட்டையை யிட்டுப் பரிகாரஞ் செய்தான்.

இவ்வாறு இரண களத்தில் காயமுற்ற எல்லோருக்கும் பரிகாரங்கள் செய்த பிறகு மாலைவிளங்கும் மார்பனாகிய ஜீவகன், பகைவரைக் கொல்லுதல் அறமே யாயினும், இவ்வரசர்கள் தொன்று தொட்டு வந்த பகைஞரல்லர் ஆகலால் இவர்களைக் கொன்றது பாவ மென்றெண்ணி அப் பாவம் நீங்குதற்கு, பொன்னால் கடவுளுருவஞ் செய்து தெய்வத்திற்குச் சிறப்பியற்றிப் பொருள்களைத் தானஞ் செய்து அப் பாவத்தை நீக்கிக் கடவுளைத் தொழுதான். அதன்மேல் காந்தருவ தத்தைக்கும், ஜீவகனுக்கும் மணம் புரிவித்தற்கான காரியங்கள் நடைபெற்றன. தொழுக் காவலனாகிய இடையன், ஜீவகனது கலியாணத்திற்கு, பாலையும், தயிரையும், நெய்யையும் பல குடங்களிலே நிறைத்துக் கொண்டு வந்தான். கந்துகன் மனையின் ஒரு பக்கத்தில், அரிசிப் பண்டியும், சருக்கரைப் பண்டியும், பருப்புப் பண்டியும், உப்புப்

பண்டியும் வந்து நிறைந்தன: மற்றொரு பக்கத்தில், பலா, வாழை, மா முதலிய வற்றின் கனிகளும், வேறுபலவகைப் பட்ட கிழங்குகளும், காய்களும், பாக்குக் குலைகளும், வெற் றிலைப் படலிகைகளும், சண்பக மலரும், தமநகக்கொழுந் தும், பச்சிலையும், மல்லிகை மலரும், குவளைப் புஷ்பமும், தாமரை மலரும் ஜனங்களாற் கொண்டு வரப்பட்டு நிறைந் தன. அங்கே பல ஜனங்களும் கடலென வந்து கலந்தார் கள். அறுசுவையோடு கூடிய உணவுகள் சமைக்கப்பெற்று எல்லோருக்கும் முறையே விருந்திடப்பட்டு, சந்தனதாம்பூ லங்களும் வழங்கப் பட்டன; அதன்மேல் பல வாத்தியங் கள் முழங்க, ஜீவகனும், தத்தையும் அலங்கரிக்கப்பட்டு மணவறையிலிடப்பட்ட ஆசனத்து அமர்ந்தனர். வேதியர் கள் பலாசந் துடுப்பினாலே நெய்யைச் சொரிந்து தீயை வளர்த்து ஓமம் பண்ணினார்கள். வெள்ளி முளைத்த அள விலே ஸ்ரீதத்தன் தத்தையைத் தானஞ் செய்வதாகச் சொல்லி ஜீவகன் கையில் நீரைச் சொரிந்தான். அவனும் அதனை யேற்று முறைப்படி தத்தையை மணம்புரிந்து, அவளுடைய முன் கையைப் பற்றி அழலை வலம்வந்து பெரி யோர்கள் வாழ்த்த இன்புற்றிருந்தான்.

இப்படி யிருக்குங் காலத்தில், தத்தையின் தந்தை யாகிய கலுழவேகன், இராஜமா புரத்திலே நடந்த விசேஷ ங்களைக் கேள்விப்பட்டு ஜீவகனுக்கு மிகிழ்ச்சி யுண்டாகு மாறு ஓர் ஓலையெழுதி வித்தியாதர னொருவனிடம் கொடுத் தனுப்ப, அவன் ஜீவகன் ஒரு தினம் சோலையிற் சஞ்சரித்த காலத்தில் அதனை ஜீவகனிடம் கொடுத்தனன். அவன் அதனை வாங்கி வாசிக்க, அதில், "கலுழனென்னுஞ் செல்வனாகிய ஜீவகசாமி காண்க; அறமும், பொருளும், இன்பமும் தன க்கு இன்னும் விசேஷமாக உண்டாக; அரசர்க ளெல்லோ

ரும் வீணையில் தத்தைக்குத் தோற்று நிற்க, நீ அவனை வென்றபொழுது கட்டியங்காரன் பொறாமை கொண்டு, உனக்கும் அவர்க்கும் போரை விளைவித்தா னென்றும், அக்காலத்தில் நீ எல்லோரையும் புறங்கண்டு தத்தையை மணம் புரிந்தாயென்றும் நரன் கூறக் கேட்டேன்; நான் இப்பொழுதே வந்து கட்டியங்காரனை யொழித்து விடுவேன்; ஆயினும், நீ இவ்வகைக் காரியங்களை யெல்லாம் நடத்தி முடிவில் ஜெயம்பெறுவா யென்று நிமித்திகனும், அச்சணந்தி யாசிரியரும் கூறியிருப்பதால், முந்தியே தத்தையுடன் நான் வரின் கட்டியங்காரன் இப்பொழுதே யொழிந்து போக, மற்றக் காரியங்கள் அவர் வாக்கின்படி நடைபெறுவென்று கருதித் தத்தையை மாத்திரம் ஸ்ரீதத்தனுடன் வரவிட்டேனாதலின், இப்பொழுதும் அங்கு வருதல் தகுதியன்றென்று நின்று விட்டேன்; இப்பொழுது நீ வெற்றி கொண்டதற்காக இவ் வெள்ளி மலைமுழுதும் சந்தோஷித்துக் கொடியெடுத்தது; உன்னுடைய வெற்றியுந் தோல்வியும் என்னுடையனவே யாதலின், இனி நீ நடத்தும் காரியங்களை எனக்கு அறிவிக்காமல் நடத்த வேண்டாம்'' என்ற விஷயங்கள் எழுதப்பட்டிருந்தன. இவற்றை வாசித்துணர்ந்தவுடன், ஜீவகன், மாமனிருக்குந் திசையை நோக்கி வணங்கி மகிழ்ந்து, ஓலைகொண்டு வந்தவனை யனுப்பிவிட்டு, உடனே தத்தையிடம் வந்து கலுழவேகன் திருபமனுப்பிய செய்தியைக் கூறி, அளவிலா இன்பத்துடனே இராஜமாபுரத்திலே வசித்திருந்தான்.

## அத்தியாயம்-8

## குணமாலை திருமணம்

அங்ஙனம் ஜீவகன் வாழ்கின்ற காலத்தில், அது மனிதர் இன்புறும் இளவேனிற் பருவமாதலின், அந் நகர மாந்தர்கள் ஒருதினம் சோலையிற் சென்றுலாவி நீரில் விளையாடக் கருதி உடம்பை அலங்கரித்து, பிறர்க்குக் கொடுக்கும் புடைவைகள் நிறைந்த பெட்டிகளையும், அணிகலங்கள் நிறைந்த பெட்டிகளையும், மது நிறைந்த மூங்கிற் குழாய்களையும், மாலைகளையும், கனிவர்க்கங்களையும் கொண்டு, தந்தத்தாற் செய்த உருவு திரையையுடைய கொல்லா வண்டிகளிலும், பொற்சிவிகைகளிலும், யானைக்கன்றுகளிலும், பெரிய பெட்டையானைகளிலும், ஆண்யானைகளிலும், குதிரை களிலும் ஏறியும், முத்துப்பந்தலி னடுவில்நடந்தும், பலவகைவாத்திய முழக்கத்துடனே சென்று, மேகம் படிந்து தளிர்களும், மலர்களும், காய்களும், கனிகளும் நிறைந்து, புதுமணத்துடனே குளிர்ந்த இளந்தென்றல் வீசுகின்ற ஒரு சோலையிற் போய் ஆங்காங்கே கூடாரங்க ளிட்டுத் தங்கி விநோதமாகப் பொழுதுபோக்கினார்கள். அவர்களுள் குணமாலை யென்பவளும் சுரமஞ்சரி யென்பவளும் ஓரிடத்திலே திரையை வளைத்து அதற்குள்ளே சேடியரோடு தங்கியிருந்தார்கள்.

அங்ஙன மிருப்ப, குணமாலையின் சேடியாகிய மாலை யென்பவள், குணமாலையினுடைய வாசனைப் பொடியை எடுத்துக் கொண்டுவந்து அவ் விருவருக்கும் இடையில் வைத்தாள். சுரமஞ்சரி அப் பொடியைப் பார்த்து விட்டு, அதற்கு உரியவளாகிய குணமாலையை நோக்கி,

"மாலாய்! இதுவும் வாசனைப் பொடியா? இஃது என் வாசனைப் பொடிக்கு இணையாகுமா?" என்று ஏளனம்செய்தாள். அது கேட்டுக் குணமாலை, "என் வாசனைப்பொடிக்கு இணை இவ் வுலகில் எதுவு மில்லை" என்று கூறினாள்.

அதற்குச் சுரமஞ்சரி கோபங்கொண்டு, "நாம் இருவர் பொடிகளையும், அறிஞர்பால் அனுப்புவோம்; அவர் ஆராய்ந்து, 'இன்னது உயர்ந்தது' என்று கூறிய பின் உயர்வு தாழ்வைத் தெரிந்து கொள்வோம்; அங்ஙனம் ஆராய்வதில் யார் பொடி தாழ்ந்ததாக ஏற்படுகிறதோ அவர் புனல் விளையாட்டை நீக்கி விடுவதோடு அருகக் கடவுளுக்குக் கோடி பொன் கொடுக்க வேண்டும்" என்று சொல்ல, அவள் அந்த ஏற்பாட்டிற்கு இசைந்தாள். உடனே இருவரும் தங்கள் பொடிகளைத் தோழியரிடங் கொடுத்து அறிஞர்பால் ஆராய்ந்து வருமாறு அவர்களை அனுப்பினார்கள். அவ்வாறே கனகபதாகை யென்பவளும், மாலை யென்பவளும் அவற்றைக்கொண்டு சென்று சில குமரர்களிடத்திற் காட்ட, அவர்கள், "இவற்றை ஆராயுந்திறம் எமக்கு இன்று; ஜீவகனிடம் நீங்கள் செல்வீராக" என்றனர். அதன்மேல் அவர்கள், தோழரும் தம்பியரும் சூழ அச் சோலையில் தங்கி யிருந்த ஜீவகனிடத்தே சென்று அப் பொடிகளைக் காட்ட, அவன் இரண்டையும் ஆராய்ந்து, குணமாலையின் பொடி கோடைக் காலத்தில் இடிக்கப் பட்ட தாதலின் நல்ல தென்றும், சுரமஞ்சரியின் பொடி மாரிக்காலத்தில் இடிக்கப்பட்ட தாதலின் நல்லதன் றென்றும் கூறினான். அப்போது சுரமஞ்சரியின் தோழியாகிய கனகபதாகை, அதனை நம்பாமல், "இன்னும் நன்றாக ஆராய்ந்து தக்க சாக்ஷியினைக் காட்டின லல்லது என் மனம் திருப்தி யடையாது" என்றாள். உடனே ஜீவகன் அவற்றை வண்டுகள் சஞ்

சரிக்கு மிடத்தை நோக்கி ஆகாயத்தே தூவினன். அவ்வண்டுகள் சுரமஞ்சரியின் சுண்ணத்தை யிகழ்ந்து தள்ளிக் குணமாலையின் சுண்ணத்தை உண்டன. ஜீவகன், "இனியாவது தெளிந்து உங்கள் தலைவியர்க்கு இதனையுணர்த்துங்கள்" என்று அத்தோழியர்க்குக்கூறி அவர்களை அனுப்பினன் அவர்களும்வந்து சுரமஞ்சரிக்கும்,குணமாலைக்கும் ஜீவகன் சுண்ண மாராய்ந்து கூறிய விதத்தைச் சொன்னார்கள்.

அதைக்கேட்டுச் சுரமஞ்சரி வருந்தி, 'இப்பொழுது என் சுண்ணத்தை மதிக்காத ஜீவகன் பின்னே என்னை மதிக்கும்படி நான் கன்னிகா மாடத்தி லிருந்து ஆடவரை அறவே வெறுத்து நோன்பு இயற்றுவேன்' என்று, தான் முன்னே கூறிய வாக்குத் தத்தத்தின்படி செய்யத் தக்கவற்றைச் செய்துவிட்டுக் குணமாலை எவ்வளவோ சமாதானப் படுத்தியுங் கேளாமல் போய்க் கன்னிகாமாடஞ் சேர்ந்தாள். அவள் தாயாகிய சுமதி யென்பாள் அவளுடைய முகவாட்டங் கண்டு அவளுக் குற்ற துணர்ந்து தன் கணவனாகிய குபேரதத்தனுக்கு அதனை யறிவித்தாள். அவன், தன் மகள் விருப்பத்தை நிறைவேற்றுதற் கிசைந்து கட்டியங்காரன் அனுமதி பெற்று அவளிருக்கும் கன்னிகா மாடத்தின் தெருவிலே ஆடவ ரெங்கும் சஞ்சரிக்கா திருக்கும்படி செய்தான். சுரமஞ்சரி அம் மாடத்தி லிருந்து தன் நோன்பை யனுஷ்டித்து வந்தாள்.

அதன் மேல் குணமாலை, 'விளையாட்டே வினையாய் முடிந்தது' என்று சுரமஞ்சரியின் பிரிவுக்காக வருந்தி அதற்குப் பிராயச்சித்தமாக, ஆயிரம் பொற் றாமரை மலர்களாலும், வேறு மலர்களாலும் அருகக்கடவுளடியை அருச்சித்து வணங்கி நீராடப் போனாள். மற்ற ஜனங்களும்,

நேமிஸ்வாமிகளுடைய ஸ்ரீ கோயிலுக்கு எட்டுக் கோடி பொன்னை நீரொடு தானமாகக் கொடுத்தும், இரவலர்க்கு வேண்டுவன நல்கியும் நீர் விளையாடத் தொடங்கினார்கள். ஜீவகனும் அவ் விளையாட்டைக் காண அங்குச் சென்றான். நீர் விளையாட்டு மிகவுஞ் சிறப்புடன் நடந்தது. அங்கு நடந்த விநோதங்களை யெல்லாங் கண்டு ஜீவகன் மகிழ்ந்தான்.

அங்ஙனம் மகிழ்ந் திருக்கும்போது, அங்கே ஜனங்களால் அந்தணர்க்கு ஆக்கப்பட்ட சோற்றுத்திரளையை ஒரு நாய் வந்து கௌவிற்று. அந்தணர், அது கண்டு கோபமுற்று, "நாயே! என் செய்தாய்? இனி நீ பிழைத்துப் போவையோ" என்று கற்களையும், தடிகளையும் எடுத்துக் கொண்டு ஓடி அதனை அடித்துத் துரத்தினார்கள். அது பயந்தோடி ஒரு தடாகத்திற் குதித்து நீந்திற்று. அப்பொழுதும் அவர்கள் இரக்கங்கொள்ளாதவர்களாய் அதனை வளைத்துக் கொண்டு கால் முறியும்படி அடித்துக் குற்றுயிராக்கி விட்டார்கள். அப்பொழுது அதனை வளர்த்தவனாகிய கட்குடிய னொருவன், கட் குடத்தைத் தாங்கிய தன் மனைவிய ரிருவருடனே அங்கு வந்து, தன் நாய் அடிபட்டுக் குற்றுயிராய்க் கிடப்பதைக் கண்டு மனம் வருந்தி, அதனை யடித்தவர்களைக் கோபத்துடனே பார்த்து, "வன்னெஞ்சரே! நீங்கள் சற்றும் இரக்கமின்றி என் நாயை அடித்துக் கொன்றீர்கள்; விரைவில் அதன் உயிரை மீட்டுத் தரவேண்டும்; இல்லையேல் என் கை வல்லமையை உங்களிடம் காட்டிவிடுவேன்; கட் குடத்தை (கண்ணையுடைய குடம் போன்ற தலையை) உடைப்பேன்" என்று அவ் வந்தணரோடு கலகம் விளைத்தான்.

இவற்றை யெல்லாங் கண்ட ஜீவகன், விரைந்து சென்று அக் கட் குடியனுக்குச் சமாதானங்கூறி நாய் மடிந்ததாலேற்பட்ட வருத்தத்தை முதலிற் போக்கி, பின்னர் அந்தணர்க்கேற்பட்ட துன்பத்தையும் அகற்றி, அவ்விரு திறத்தாரையும் அனுப்பிவிட்டு, இறக்குந் தருணத்திலிருந்த நாயின் சமீபத்தில் தோழருடனே அணுகி அதனுடைய பரிதாப நிலைக்கு மனமிரங்கி, கண்ணீர் விட்டு அதனை நோக்கி, "நாயே! நான் இப் பொழுது உனக்கு ஒரு மந்திரத்தைக் கூறுகின்றேன்; நீ மனம் ஒருப்பட்டு அதனை நினைவாயாக; அங்ஙனம் நினைத்தால் இவ் விடத்தே இந் நாயுடம்பைப் போட்டு விட்டு திவ்ய தேகம் பெற்று மேற் கதிக்குச் செல்வாய்" என்று கூறினன். நாய் அவ் வார்த்தைகளைக் கேட்டு, இரு கண்ணிலும் வடிந்து வீழ்கின்ற நீருடனே மனம் ஒருப்பட்டு அதற்கிசைந்து, தன் சம்மதம் வெளிப்படுமாறு வாலைக் குழைத்து மகிழ்ச்சியைக் காட்டிற்று. அதன் குறிப்பை யறிந்தவுடனே ஜீவகன், இதுதான் தருணமென்றறிந்து நல்வினையை விளைக்கும் வித்தாகிய பஞ்ச நமஸ்கார மந்திரத்தை அதன் செவியிலே உபதேசித்தான். உடனே அந்த நாயானது உடம்பை விட்டு நீங்கித் தேவ வடிவம் பெற்றுச் சென்று சங்க வெண்மலை என்னும் வெள்ளி மலையிலே சுதஞ்சண னென்னுந் தேவனாகிச் சந்திரோதய மென்னும் நகரில் இயக்கர்க் கிறைவனாய்ப் பரிவாரங்கள் சூழப்பெற்றிருந்து, தான் அவ்வா றாயினதற்குக் காரணம் ஜீவகன் உபதேசித்த மந்திரமே யென் றுணர்ந்து உடன் அவனைக் காணவிரும்பித் திரும்பி வந்து ஜீவகன் முன்னே தோன்றிற்று. ஜீவகன் சுதஞ்சணனைக் கண்டதும் "நீ யாவன்?" என்று வினவ, அவன், "நண்ப! நான் இங்கே நாயாயிருந்து, நீ உபதேசித்த மந்திரத்தால் இயக்கர் தலைவ

றாயினேன்; ஆகலின் உன்னைக் கண்டு இன்மொழி புகன்று செல்ல மீண்டு வந்தேன்'' என்றான். ஜீவகன், 'சித்தபரமேஷ்டிகளுடைய இன்பமெல்லாம் எனக்கு இன்றுகைவந்தது' என்று மகிழ்ந்தான். அப்போது சுதஞ்சணன் ஜீவகனை நோக்கி, "ஜீவகாருண்ய முள்ள நேய! நீ செய்த உதவிக்கு நான் கைம்மாறு செய்யாமலிரேன்; இவ்வுலகத்தை யெல்லாம் உனது ஆளுகைக் குட்படுத்த வேண்டுமானாலும் படுத்துவேன்; உன் விருப்பம் யாது? கூறுவாயாக'' என்ன, ஜீவகன், "நண்ப! பகைவர்வளைந்து எனக்கு இடர் செய்யுங் காலத்து நான் உன்னை நினைப்பேன்; அத் தருணம் நீ வந்து உதவுவாயாக'' என்றான். அதைக் கேட்டுச் சுதஞ்சணன், ஜீவகனைத் தழுவிக்கொண்டு, "என் உயிர்த்துணைவ! யான் எப்பொழுதும் உன் நிழல்போல உன்னை விட்டு நீங்கேன்; நீ கூறியவாறே உனக்கு இடர் வருஞ் சமயம் என்னை நினைப்பாயாக'' என்று சொல்லிவிட்டு விசும்பிற் பறந்துபோனான்.

அதன்மேல் ஜீவகனும், தோழரும் அவ்விடத்தை விட்டு நகர்க்குப்போவதற்குத் திரும்பினார்கள். ஜனங்களும் நீர் விளையாட்டைச் செய்து கரையேறித் தங்கள் தங்கள் வீடுகளுக்குச் சென்றார்கள். அவ்வாறு எல்லோரும் திரும்பிச்செல்கின்ற காலத்திலே, கட்டியங்காரனுடைய 'அசனிவேகம்' என்னும் பட்டத்து யானையானது மதங்கொண்டு கட்டுத்தறியை முறித்து வெளியேறி இடியைப்போல முழங்கி ஓடிவந்தது. அதைக் கண்டு ஜனங்கள் சூரியனைக் கண்ட மாத்திரத்தில் நக்ஷத்திரக் கூட்டங்கள் மறைவதுபோல ஆங்காங்கே மறைந்து விட்டார்கள். அப்போது குணமாலை மாத்திரம் மறையாமல் அதற்கு எதிர்ப்பட்டாள். அசனிவேகமானது கோபித்து அவளுடைய சிவிகையை நோக்கிச் சென்றது. சிவிகை தாங்குவோர் பயந்து,

அச் சிவிகையோடு குணமாலையையும், அவளுடைய தோழியையும் விட்டு ஓடிப்போனார்கள். யானை குணமாலையின் மேற் பாய்ந்தது. அதுகண்டு அவள் தோழியாகிய மாலையென்பாள், 'நான் உயிரோ டிருக்குமளவும் என் தலைவியை இக்களிறு கொல்லுமாறு விடேன்; இதற்கு முதலில் நான் இரையாகின்றேன்; இஃது என்னைக் கொன்று அவள்மேல் செல்வதற்குள் எவனேனும் ஒரு வீரன் தோன்றி அவளைக் காப்பான்; அங்ஙனம் காவாவிடின் என்னுயிர் சென்றதற்குப் பின் ஆகுவதாகுக' என்று துணிந்து, இரண்டு கைகளையும் தலைமேல் வைத்துக்கொண்டு, 'இவ்விடத்தில் ஆண்மக்கள் இல்லையோ' என்று கூவி, அக் களிற்றுக் கெதிரே சென்று தலைகவிழ்ந்து நின்றாள். அப்போது தோழரோடு சென்ற ஜீவகன் குணமாலையினுடைய அபாயமான நிலைமையை நோக்கி, "அந்தோ! ஒரு பெண் அநியாயமாகக் களிற்றுக்கு இரையாகப் போகின்றாள்; இப்படி ஒரு பெண்ணுயிர் போவதைப் பார்த்தும் அவளைக் காவாமல் சென்று உயிர்வாழ்தலைக் காட்டிலும் சாதல் நன்று" என்று கழுத்தில் தொங்கிய மாலையைச் சுற்றி, கையிலணிந்திருந்த பொற் கடகங்களை மேலேற்றி, கச்சையினாலே வஸ்திரத்தை இறுக்கிக் கட்டி, அக் களிற்றை நோக்கி, 'கொடுங் களிறே என் செய்யத் துணிந்தாய்' என்று வைதுவீரமாக ஆர்ப்பரித்துக் காற்றைப்போலக் கடுகி அதன் சமீபத்திற் சென்று, அது தலைகுனிந்து கையால் மாலையென்பவளை வளைத்துப் பிடிக்காமலிருக்கும்பொருட்டு, காதிலுள்ள குண்டலத்தைக் கழற்றித் தன்பக்கந் திரும்பும்படி அதட்டி அதன் மஸ்தகத்தி லெறிந்து, முத்து வடமும், நெற்றிமாலையும் குலுங்கும்படி, அஸ்தகிரியின் நெற்றியிலே பாயும் சிங்கத்தை நிகர்த்து, அதன் மஸ்தகத்தின் நடுவே குதித்துத் தந் தங்களி னிடையே கூற்றென முழங்கிக் கையாற் புடைத்

தான். உடனே அக் களிறு அப் பெண்களின்மேற் சென்றதை விடுத்து, ஜீவகன்மேற் திரும்பி அவனைக் கையால் வளைத்தது. அவன் அதற்கு அஞ்சாமல், "குணமாலையை அப்பாற் கொண்டு செல்லுங்கள்" என்று கூவிக்கொண்டே அதன் கையினின்றும் மின்னலைப்போல் நழுவி உடம்பைச் சுருக்கி வளைத்து, தந்தங்களி னிடையிற் புகுந்து அதன் கால்களுக்குக் கீழே அடங்கிக் கரந்து பின்பக்கமாகப் போய் விட்டான். அதன்மேல் அசனி வேகம் தன் இரு பாய்ச்சலும் தவறியதால் மனமிடிந்து மதமொடுங்கி வாட்டத்துடன் தன் நிலையிற் போய்ச் சேர்ந்தது. ஜீவகனும் தன் தோழர் ஐஞ்ஞூற்று நால்வருடனே சோலையிற் போய்ச் சேர்ந்தான். குணமாலையுந் தோழியருடனே தன் மாளிகைக் கேகினாள்.

அப்போது குணமாலையின் தாயாகிய வினயமாலையென்பாள், அவளுடைய முகவாட்டத்தைக் கண்டு, "என் அருமைக் குமாரத்தி முகம் வாடியிருத்தற்குக் காரணம் யாது?" என்று தோழியரை வினவினாள். அவர்கள், குணமாலை, யானையாற் கலக்க முற்றதைக் கூறினால் அவள் வருந்துவாள்' என்றெண்ணி, அதனை மறைத்து, "அதுவிளையாட்டின் மிகுதியால் நேர்ந்த வாட்டம்" என்று கூறினார்கள் அதன்மேல், வினயமாலை, குணமாலையைத் தழுவி அவளுடைய முகவாட்டத்திற்குத் தக்க பரிகாரங்களைத் தோழியரால் செய்வித்தாள். அங்ஙனம் செய்தும் குணமாலை வாட்டம் நீங்காதவளா யிருந்தாள்.

அப்படி யிருக்குங் காலத்திலே ஜீவகன் தன்னை யானை கையில் அகப்படாமல் காப்பாற்றியதை நினைத்து, குணமாலை அவனையே மணம்புரிந்துகொள்ள வேண்டுமென்று உறுதி

கொண்டு கிளியைத் தூதனுப்பி, அவனுடைய மனத்தை யறிந்துவரச் செய்தாள். அவனும் அங்ஙனமே அவளை மணம்புரிய விரும்பியிருந்தான். ஆதலின், ஓர் திருமுக மெழுதி, அதனையும் தன் மோதிரத்தையும் தினைக் கதிரில் வைத்து மறைத்து அக் கிளியினிடம் கொடுத் தனுப்பித் தன் சம்மதத்தைத் தெரிவித்தான். குணமாலை, ஓலையை வாசித்து மகிழ்ந்திருந்தாள். குணமாலையினுடைய தந்தை யாகிய குபேரமித்திரனோ, அவளை அவள் தாய் மாமன் மகனுக்குக் கொடுத்தற்கு விரும்பி யிருந்தான். இதனை யுணர்ந்த தோழி, குபேரமித்திரனது எண்ணத்தைக் குணமாலைக்குத் தெரிவித்தாள். அவள் அதைக் கேட்ட வுடனே மனம் வருந்தித் தோழியை நோக்கி, "நான் ஜீவகவள்ளலை யன்றி வேறொருவரையும் மணப்பதில்லை யென்று உறுதிசெய்துகொண் டிருக்கின்றேன்; ஆதலின், என் தந்தை எனது விருப்பத்திற்கு விரோதமாக வேறொரு வனுக்கு என்னை மணம்புரிந்து கொடுப்பா ராயின், நான் உயிர்விடுவது திண்ணம்" என்று கூறி யழுதாள். தோழி, "நீ மகாபதிவிரதை யாதலின் உன்னுடைய எண்ணம் நிறை வேறும்; ஆதலின் நீவருந்தாதே" என்று அவளுக்குத் தேறு தல் கூறி, அவளுடைய மனப்போக்கை அவள் தாயாகிய வினயமாலைக்குத் தெரிவித்தாள். அவள் தன் கணவனாகிய குபேரமித்திரனுக்குத் தெரிவித்தாள். குபேரமித்திரன், "அங்ஙன மாயின் ஜீவகன் என் குமாரத்திக்கு மிகவும் பொருத்த முடையவனே" என்று மகிழ்ந்து, மிகவும் கல்வி கேள்விகளிற் சிறந்த நால்வரைக் கந்துகனிடம் தூதனுப்பிக் குணமாலையைஜீவகனுக்குக்கொடுக்க விரும்பியிருக்கும்தன் எண்ணத்தைத் தெரிவித்து வரும்படி செய்தான். அவர்கள் சென்று கந்துகனுக்கு அதனைக் கூறினார்கள். அதைக் கேட் டவுடன் கந்துகன், "ஜீவகனுக்குக் குணமாலையைக் குபேர மித்திரன் கொடுப்பானாயின், ஜீவகனும் யானும் அவனுக்

குக் குற்றேவல் புரிவோம்'' என்று மகிழ்ந்து உபசார வார்த்தைகள் கூறினன். அவன் மனைவியாகிய சுநந்தையும் அதற்கு இசைந்து மகிழ்ந்தாள். தூது வந்தவர்கள் திரும்பிச் சென்று குபேரமித்திரனிடம் கந்துகன் சம்மதத்தைத் தெரிவித்தார்கள். கந்துகனும் சுநந்தையும் கூறிய வார்த்தைகளைக் கேட்டவுடன் குபேரமித்திரனும் வினயமாலையும் உவகைக்கடலுள் ஆழ்ந்தார்கள். பின்னர், அவர்கள் விருப்பப்படி சோதிடர்களால் முகூர்த்த நாள் நியமிக்கப்பட்டது. அந்நாளில், குபேரமித்திரனும் வினயமாலையும், கந்துகனும் சுநந்தையும், மற்றப் பெரியோர்களும் கூடிக் கடலொலி போலப் பலவகைப்பட்ட வாத்தியங்கள் முழங்க, ஜீவகனுக்கும் குணமாலைக்கும் மிக்க சிறப்புடனே பெரியோர்களால் திருமணஞ் செய்வித்தார்கள். மணம் முடிந்தபின், குபேரமித்திரன் குணமாலைக்கு எழுநூறு பணிப்பெண்களையும், கோடி செம் பொன்னையும், ஐந்து ஊர்களையும் சீதனமாகக் கொடுத்தான். அதன்மேல் ஜீவகன் தன்தேவிமாருடன் இனிது வாழ்ந்திருந்தான்.

அப்படியிருக்குங் காலத்தில், நீர் விளையாட்டன்று ஜீவகனுக்குத் தோற்றுச் சென்ற கட்டியங்காரனுடைய பட்டத்து யானையானது நாணி, கருப்பங் கடிகையும், கவளமுங் கொள்ளாமல் தந்தங்களினிடையே கையைத் தூங்க விட்டுக் கோபத்தோடே நின்றது. அதனை யறிந்த கட்டியங்காரன் அக் களிற்றினிடஞ் சென்று அதன் வருத்தத்தை நோக்கி, "இவ் வாட்டத்திற்குக் காரணம் யாது?" என்று பாகனிடம் வினவினன். அவன், "இதற்குக் காரணம் ஜீவகனே'' என்று நீர் விளையாட்டன்று ஜீவகன் யானையை அடக்கிய விதத்தைக் கூறினன்.

அது கேட்ட கட்டியங்காரன் மிகவுங் கோபித்துத் தன் மைத்துனனாகிய மதனனென்பானை நோக்கி, "வேட

ருடனே போர் செய்து பசுநிரையை மீட்டதாலும், காந் தருவதத்தையின் யாழ்ப்போரிலே எதிர்த்த அரசர்களை வென்றதாலும் ஜீவகன் அகங்காரங் கொண்டு நம்முட னும் பொரக் கருதி இங்ஙனம் நம் களிற்றுக்கு இடர் செய் தான் போலும்; அச் செட்டி மகனுடைய ஆண்மையை நான் இன்றே போக்குகின்றேன்; கடிதில் அவனைப் பிடித் துக் கட்டி என் முன் கொணர்வீராக'' என்றான்.

இக் கட்டளை பிறக்கவே மதனன் முதலாய வீரர்கள் யமன் தூதுவர் போலச் சென்று, சிங்கவேற்றை நரிக் கூட் டங்கள் சூழ்வது போல ஜீவகன் மனையைச் சூழ்ந்து கொண்டனர். அவர் வளைந்தது கண்ட சேடியர், குண மாலையுடன் இனிதமர்ந்திருந்த ஜீவகன்பாற் சென்று அத னைக் கூறினர். அதைக் கேட்டதும் ஜீவக குமரன், மிகவுங் கோபித்து, எரியைப் போல முழங்கி யெழுந்து வெளியில் வந்து, அவ் வீரர் வளைந்த குறிப்பினை யுணர்ந்து, உடையை இறுக்கி, வீர கண்டையைக் காலிற் சேர்த்தி, வில் லேந்தி அம்புகளைத் தேர்ந் தெடுத்துக்கொண்டு, அவர் களை நோக்கி, "வந்த காரியமென்? புகல்வீராக'' என் றான்.

அவர்கள், "ஜீவக! நீ அரசனுடைய பட்டத்து யானையை அடக்கி, அரசர்க்குரிய தொழில்களை யெல்லாம் நடத்து கின்றமையால் எம் மிறைவர் உன்மீது சினங்கொண்டு, 'அவ னைக் கொண்டு வருவீராக' என்று எமக்குக் கட்டளை யிட் டனர்; அதனை நிறைவேற்றுதற்கே நாங்கள் வந்திருக்கின் றோம்; ஆதலின், நீ இப்பொழுதே எம்முடன் வர வேண் டும்'' என்று கூற, ஜீவகன், இடியேறு போல முழங்கி, முப் புர மெரித்த கடவுளைப் போலச் சினந்து, நந்தட்டனை நோ

க்கி, "வீரனே! கட்டியங்காரன் கெடுங் காலம் சமீபித்தது போலும்; நீ விரைந்து சென்று தேரை அலங்கரிப்பாயாக" என்று கூறினன். நந்தட்டனும் அவ்வாறே செய்யச் சென்றான்.

அப்பொழுது கந்துகன், ஜீவகனுடைய படைக் கோலத்தைக் கண்டு, 'அரசனுடனே பகை கொள்ளின் தீங்குண்டாம்; ஜீவகனைச் சாந்தப் படுத்தி இவர்களுடன் அனுப்பினல், கட்டியங்காரன் இவன் செய்தவற்றை நன்கு ஆராய்ந்து கோபந் தணிந்து இவனை மன்னித்தல் கூடும்' என்று சிந்தித்து ஜீவகனுக்கு இதனைக் கூறப் போனன். அத் தருணத்தில் ஜீவகனும் தனக்கு ஆசிரியர் தெரிவித்ததை நினைத்து, 'இது யுத்தஞ் செய்யுங் காலமன்று; இன்னும் சில நாட்கள் செல்ல வேண்டும்' என்று கோபந் தணிந்து நின்றான். அங்ஙனம் நின்ற அளவிலே கந்துகனும் சுநந்தையும் அவனிடத்துச் சென்று, "புதல்வ! அரசனுக்கு அடங்கி நடத்தலே குணமாகும்; நீ எங்களுடைய வார்த்தைக்காக அடங்குவதால் உலகம் உன்னை அவமதிக்காது" என்று கூறினர்.

அதனல் ஜீவகன் போர்த் தொழில் செய்தலை விடுத்து நின்றான். கட்டியங்காரனுடைய வீரர்கள் அவனை வளைத்துக் கொண்டு சென்றனர். சுநந்தை, தானே ஜீவகனைப் போர் செய்யாமல் தடுத்தனுப்பினளெனினும் அவன் மீது ஏற்பட்ட அன்பினல் 'அவனுக்கு யாது விளையுமோ!' என் றஞ்சி, "காளாய்! நம்பி! ஜீவகசாமி! நீ அங்குச் சென்றால் உனக்கு என்ன தீங்கு நேருமோ!" என்று கண்ணிர் விட் டழுது புலம்பினள்.

புது மணப் பெண்ணாகிய குணமாலையோ, "என தாருயிர்த் துணைவரே! நீர் யானையை அடக்கி என்னுயிரைக் காத்

னீர்; அதன் பொருட்டே உமக்கு இத் தீங்கு நேர்ந்தது; இது தகுதியாகுமோ? அரசநீதி மிகவும் நன்று நன்று" என்று நெருப்பிடையே விழ்ந்த மாலையைப் போல வாட்ட முற்றழுதாள். நகர மாந்தர்கள் பட்ட துயருக்கோ அள வில்லை. அவர்க ளெல்லோரும் பலவாறு ஜீவகனுக்கு இரங் கிப் புலம்பி, கடலானது மலையாற் கலக்குண்டாற்போல மிகு தியும் கலக்க முற்றனர்கள்.

ஜீவகன், "கட்டியங்காரனால் எனக்கு ஒரு தீங்கும் செய்ய இயலாது; இன்னும் சின்னாட்களில் அவன் தலை என் கை வாளால் அறுப்புண்டு நிலத்திற் கிடக்க அதனை நீங்க ளெல்லோரும் காண்பீர்கள்: ஆதலின், நீங்கள் அஞ்சி அழாதீர்கள்" என்று அவர்களுக்குத் தேறுதல் கூறி அவ் வீரர்க்கு நடுவே சிலம்பி நூலால் கட்டப்பட்ட சிங்கத்தை நிகர்த்துச் சென்றான்.

அவன் அங்ஙனம் செல்லாநிற்க, கந்துகன், கட்டியங் காரனது கோபத்தைத் தணிவிக்கக் கருதி, பன்னிருகோடி பசும் பொன்னைக் கொண்டு சென்று அவனுக்கு முன்னே காணிக்கையாக வைத்து வணங்கி, அக்கொடியனை நோக்கி, "அருள் மிக்க இறைவ! அநியாயமாக ஒரு பெண்ணை அசனிவேகம் கொல்லச் சென்று துரைந்தது அக்கொலை நேருமாயின் அஃது உமக்கே குறையாமெனறு கருதி என் மகன் அதனை யடக்கி அவளுயிரைக் காத்தனன்; இதை ஒரு குற்றமாகத் தாம் கருதுவது நீதியாமோ?" என்றான். அதற்கு அவன் முகங் கொடுத்திலன். பின்னர், கந்துகன், "என்மகன் செய்தது குற்றமேயாயினும் நீர் பொறுத் தருள வேண்டும்" என் றிரந்தான. அதற்கும் அவன் முகமலர்ச்சி யுறாமையின், கந்துகன், "இறைவ! என் பொருளெல்லாவற்

றையுந் தருவேன்; நீர் பிழை பொறுத் தருளவேண்டும்'' என்றான். அதன்மேல் கட்டியங்காரன் கோப மிகுந்து கண் சிவந்து விழித்து, கந்துகனை நோக்கி, "என் யானையை வருத்திய ஜீவகனுடைய மார்பில் அவ் வசனிவேகத்தின் கொம்பு அழுந்திப் பாயும்படி செய்தாலொழிய என் சினம் தீராது; நீ இனி அவனைப்பற்றி வேறொன்றுங் கூறாமல் நின் இல்லம் போய்ச் சேர்வாயாக'' என்றான்.

கந்துகன், அப்பால் ஒன்றுஞ் சொல்வதற் கியலாமல் உள்ளம் நடுங்கி, யானை யுண்ட விளங்கனி போன்று அறிவு முதலியன நீங்கி வெற்றுடம்பாகி இறந்தான் போல நின்று, முன்னை ஒரு முனிவர், தனக்குக் கூறிய குறிப்புக்களை நினைந்து ஜீவகனுக்குத் தீங்கு வராதென் றுணர்ந்து தெளிந்து மீண்டு தன் மனைக் கேகினன். அப்போது சுநந்தை கந்துகனுடனே ஜீவகன் மீண்டு வாராமையை நோக்கி மனம் வருந்தினள்.

அவ் வருத்தங் கண்ட கந்துகன் அவளை நோக்கி, "சுநந்தையே! நீ வருந்தாதே; நீ முன்னே சில புத்திரர்களைப் பெற்றிறந்து வருந்தி யிருக்குங் காலத்தே ஒரு தினம் முனிவ ரொருவர் நம் மனைக்கு வந்தார்; அவரைக் கண்ட மாத்திரத்தில் நாம் வணங்கி அவருக்கு உணவளித்து உபசாரம் புரிந்து பிள்ளைகள் இறந்துபோகும் நம் குறையை அவரிடத்தே தெரிவித்தோம். அப்போது, அவர், 'உலகத்தை யெல்லாம் ஆளத் தக்க ஒரு புத்திரனை நீர் அடைவீர்; சிறு பருவத்தில் அவனைக் கட்டியங்காரன் கொல்லக்கருதித் தன் வீரரால் சிறைப்படுத்திக் கொண்டு வரச் செய்வான்: அக்காலத்தே அவனை ஓர் இயக்கன் ஒருவரு மறியாமற் கொண்டு செல்வான். பின்னர், அவன் எட்டு மாதங்கள் கழித்து மீண்டு வந்து பகைமுடி-

த்தா இராச்சியாதிகாரம் பெறுவான்' என்று ஜீவகன் சரித்திர முழுவதையுங் கூறிச்சென்றார். இஃது உனக்கு ஞாபகத்திலிருக்கலாம்; ஆகலின், நங்குமரனுக்குத் தீங்கு ஒன்றும் வராது; நீ மகிழ்ச்சி அடைவாயாக" என்று கூறினன். இதைக்கேட்ட நந்தையும், குணமாலை முதலியவர்களும் மனந்தேறியிருந்தனர்.

இவர் இங்ஙனமிருப்ப, ஜீவகனுக்கு நேர்ந்த துன்பத்தை யுணர்ந்த அவன் தோழராகிய பதுமுகன் முதலியவர்களும், சகோதரராகிய நந்தட்டன், நபுல விபுலர் முதலியவர்களும், குணமாலையின் தந்தையாகிய குபேரமித்திரன் முதலியவர்களும் அவனைச் சிறை நீக்கும் பொருட்டுச் சினந்து போர்க்கெழுந்தனர். காந்தருவதத்தையும் தேவர்களைத் தியானித்து, அவர் துணைக்கொண்டு ஜீவகனைச் சிறை மீட்கத் துணிந்தாள்; இவர்களுடைய நோக்கங்களையெல்லாம் உணர்ந்த ஜீவகன், "இவர்களெல்லோரும் நம்மீதுள்ள அபிமானத்தால் இங்ஙனம் துணிந்தனர்; ஆயினும், நாம் இவர்களால் மீட்கப் பெற்று உயிர்வாழ்தல் மிக இழிவாம்; ஆதலின், நாமே பகைவரைக் கொன்று வெளிப்படுவோம்" என்று கருதினன். அங்ஙனம் துணிந்தும் பகை முடிக்குஞ் சமயம் அஃதன்றாதலின், அவன் மீண்டும் "பகைவரைக் கொல்லும் நாள் இன்னும் வந்திலது; ஆதலின், நாம் வேறோருபாயத்தால் இச் சிறையினின்றும் வெளிப்பட்டுப் போதலே தகுதி" என்று முன்னே தனக்குதவி செய்வதாகக் கூறிச் சென்ற தன் தோழனாகிய சுதஞ்சனனை நினைத்தான்.

உடனே அச் சுதஞ்சனன், ஜீவகனுக்குற்ற துன்பத்தை யுணர்ந்து தன் ஊர்தியாகிய மேகத்தின்மேலேறி

அங்கு வந்து சேர்ந்தான். அங்ஙனம் சேர்ந்தமாத்திரத்திலே, 'இஃது வழிக்காலமோ' என்று எல்லோரும்நடுங்கும்படி பேரிடியும், மின்னலும், காற்றும் மிகுந்த பெருமழையுண்டாயிற்று; அப்போது ஒருவர் முகத்தை ஒருவர் உணராமல் எல்லோரும் மதிமயங்கிக் கண் மூடி நின்றார்கள். அத் தருணத்திலே, வந்த சுதஞ்சனன், ஒருவருமறியாமல் ஜீவக சாமியை யெடுத்து மார்போ டணைத்துத் தழுவிக் கொண்டு மேல் நோக்கிப் போயினன். அங்ஙனம் அவன் கொண்டுபோதலைத் தத்தை மாத்திரம் கண்டு, 'இனி, சுவாமியைக் காணும் நா ளெந்நாளோ' என்று சிறிது மனங் கலங்கிப் பின்னர், 'நன்றே உண்டாவதாக' என்று வாழ்த்திவிட்டு, அதன்மேல் தன்னுடைய வழிபாட்டிற்கு இறங்கி வந்த தேவர்கட்கு அருச்சனைபுரிந்து அவர்களை வாழ்த்திஸ்தோத்திரஞ் செய்து, "எந்தைகாள்! நீர் போவீராக" என்று அனுப்பினள்.

ஜீவகன் திடுமெனக் காணமற் போகவே, அவனை வளைந்து கொண்டு சென்ற மதனன் முதலியவர்கள் ஒன்றுந் தோன்றாதவர்களாய், 'இனி என் செய்வோம்? ஜீவகனின்றி வெறுங் கையராய்ச் சென்றால் நம் இறைவனிடத்தே நம்முடைய உயிர் தப்புவது அரிதாம்' என்றுபயந்து வழியிற் சென்ற ஒரு மனிதனைப் பிடித்து, நகரத்தார் 'அந்தோ ! இவ்வநியாயம் எங்கேனும் நடக்குமா?' என்று இரங்கக் கொலை செய்து அவனுருவந் தெரியாதபடி அழுக்கு ஓரிடத்திற்போட்டு விட்டுக் கட்டியங்காரனிடஞ் சென்று, 'இறைவ! ஜீவகனை நாங்கள் சிறைப் படுத்திக் கொணருங் காலத்தில் அவனுடைய சுற்றத்தார் நெருங்கிச் சூழ்ந்தார்கள். அப்போது மழையுங் காற்றும் இருளும் மிகுந்தன. அத் தருணத்தில் ஜீவகன் தவறி யோடிப்

பிழைக்க யத்தனித்தான். அஃ துணர்ந்த நாங்கள் அவனைக் கொன்று மார்பைப் பிளந்து தள்ளி விட்டோம்" என்று ஒரு பெரும் பொய்யான சமாசாரத்தைத் தெரிவித்தார்கள். இதைக் கேட்டதும், துஷ்டனாகிய கட்டியங்காரன் மதனனை நோக்கி "ஜீவகனைக் கொல்லுதல் மிகவும் அரிது; அப்படி யிருந்தும் நீ அவனைக் கொலை செய்தமையால் மிகவும் வல்லமை யுடையை" என்றும் மதனனைக் கொண்டாடி அவனுக்கு மிக்க சம்மானங்களையும், சிறப்புக்களையுஞ் செய்து மகிழ்ந்திருந்தான்.

Hamid [illegible]



## அத்தியாயம்-9
## பதுமை திருமணம்.

சுதஞ்ஞானன் ஜீவகனைத் தான் இருக்கும்மலையிற் கொண்டுபோய்ச்சேர்த்து பணியினால்அவனுக்கு மங்களஸ்நானம் செய்வித்து அணிகலங்களையும் அணிந்து, எல்லாச் சிறப்புக்களை இயற்றி, அவனுடைய வரலாறுகளையும் தன் தேவிமார்க்குக் கூறினன். எல்லோரும் ஜீவகனைக் கொண்டாடினர்கள். அவன் சில தினங்கள் சுதஞ்சனனால் உபசரிக்கப் பெற்றிருந்து பின்னர்ப் பற்பல மலைகளையும, தேசங்களையும் பார்த்துச் சுற்றுப் பிரயாணம் வரக் கருதித்தன் எண்ணத்தைச் சுதஞ்ஞானனிடத்தே தெரிவித்தான்.

சுதஞ்சனனும் அதற்கு உடன்பட்டு அவன்பிரயாணத்திற்கு உதவியாகும்படி வழியிலுள்ள சில விசேஷங்களைக் கூறத் தொடங்கி, அவனை நோக்கி, "இப் பூமிக்குத் திலகம் போன்றவனே! உன் இஷ்டப்படியே நீசெல்வாயாக; ஆனல் வழியி லிருக்கும் சில விசேஷங்களை நான்கூறுகிறேன்;அவற்றை நீ தெரிந்துகொண்டு செல்வாயானல் உனக்குப் பல நன்மைகள் உண்டாகும்; நான் கூறுகின்றவற்றைக் கேள்: இம் மலையை விட்டு இரண்டு காதஞ்சென்றால்அங்கேஅரணபாதமென்னும் மலை தோன்றும்: அதன் தாழ் வரையிலே பல சாரணர்கள் தவஞ்செய்துகொண் டிருப்பார்கள் ; நீ அவர்களைக் கண்டு வணங்கினல், ஓர் இயங்கி தோன்றி உனக்கு அமுதளித்து உபசாரஞ் செய்வாள். நீ அவ்விடத்தே விருந்துண்டு அப்பாற் செல். அம் மலைச்சாரலைக் கடந்து சென்றால், இருபத்தைந்து காத வழியுள்ள யானைக் காடானது கங்கைக் கரையில் தோன்றும்; அதில் எவரும் தனியே செல்லுதல் இயலாது. அதில் இரு காதம் சென்

ருல் அங்கே இரண்டு குன்றுகள் தோன்றும். அவற்றி லிடையே பேய்கள் பெண்களைப்போல வடிவெடுத்துச் சஞ் சரிக்கின்ற ஒரு காடு எதிர்ப்படும். நீ அங்குச் சென்ற வுடனே அப் பெண்கள் உன்னிடத்தே வந்து உன்மீது விருப்பமுடையவர்களைப் போல நடிப்பார்கள்; அவர்கள் மாயையால் நீ மயங்கி அவர்களுடன் உறவு கொள்ளாதே; அங்ஙனம் கொண்டால் நீயும் பேயாகிவிடுவாய்.

"அதன்மேல், அந்தப் பேய்கள் வாழுங் காட்டை விட்டு நீங்கிக் காததூரஞ் சென்றால் அங்கே பல்லவதேசம் காணப் படும். நீ அந் நாட்டிற்குச் சென்று அதன் தலை நகரியிலே பிரயாணை இளைப்புத் தீரும்படி இரண்டு மாதங்க ளிருந்து அதற்கப்பால் பிரயாணப்படு. அதைவிட்டு நீங்கிச்செல்லுங் காலத்து ஒரு கல்வழி தோன்றும்; அதுவோ மிகவும் கொடியது; நீ அவ் வழியிற் செல்லாமல் வேறே மார்க் கத்திற் செல். அவ்வாறு செல்லும் வழியில் சில முனிவர் கள் சன்மார்க்க நெறியினின்றுந் தப்பினவர்களா யிருப் பார்கள். அவர்களுடைய தாபதப் பள்ளிக் கருகில் சித்திர கூட பர்வதமும், அஞ்சனமா நதியும் தோன்றும். நீ அவ் விடங்களில் தங்கிவிடாமல் அப்பால் நட; அம் மலையை விட் டிறங்கிச் சென்றால் அங்கே பன்னிரு காத தூரமுள்ள கொன்றைக் காடு தோன்றும். அதையுந் தாண்டிச் சென் றால் தக்கநாடு எதிர்ப்படும். அந் நாட் டிடத்தையுங் கடந்து செல்லின், ஒரு நதி தோன்றும்; அதனை நீந்திக் கடந்தால் அதற்கு அப்பால் கவரியின் மயிராலே வேயப்பட்ட சிறு குடிசைகள் காணப்படும். அக் குடிசைகளை யுடைய காட் டில் நான்கு வாவிகள் உண்டு. அவற்றுள் பொற்றாமரை நிறைந்த தொன்று; இரத நீரையுடைய தொன்று; எல்லா நோய்களையுந் தீர்ப்ப தொன்று; அமிர்தம் நிறைந்த

தொன்று. அவற்றைக் காவல் புரிவார் பலர். நீ அங்குச் சென்றவுடனே அவர்கள் உன்னைக் கொல்ல வருவார்கள். நீ அவ் வாவிகளை இச்சிக்காதவனாய் அவற்றிற்கு வலப்பக்கமாகச் சென்றால் அவர்கள் உன்னை நல்லவனென்று நினைத்துத் தொழுவர்.

"பின்னர் ஐங்காத வழி குளிர்ந்த சோலைகளை யுடைத்தாய் இனிமைபெற் றிருக்கும். அவ் வழியைக் கடந்தால் நினக்கு வலத்தில் வனகிரி தோன்றும்; அதனைக் கடந்து சென்றால் அதற் கப்பால் பக்க மலையொன்று தோன்றும். அதனையும் எளிக் கடந்தால் அங்கே பல கவர் வழிகள் தோன்றும். அவ்விடத்தில் ஒரு சுனை யுண்டு; அச் சுனையின் பக்கத்திலே ஒரு சிலாவட்ட முண்டு; அத னருகே ஒரு வேங்கை யுண்டு; அவ் வேங்கையின் பாங்கர் ஒரு செவ்விய வழியுண்டு. அந்த வழியாக நீ கானகங்களைக் கடந்து சென்றால் மத்திம தேசத் தரசனுக் கெதிர்ப்படுவாய்; அவன், தன் மகளை நினக்கு மணஞ் செய்து கொடுத்து உன்னை அவ்விடத்தில் வைத்திருப்பான்; அங்கே நந்தட்டனும் உன் தோழர்களும் வந்து சேர்வார்கள்" என்று கூறி அழகிய சரீரத்தைத் தரும் மந்திர மொன்றையும், விஷங்களையும் நோய்களையுந் தீர்க்கும் மந்திர மொன்றையும் அவனுக்கு உபதேசித்து, "இதற்குப் பன்னிரண்டாவது மாதத்திலே நீ இராஜமாபுரத்தைச் சேர்ந்து கட்டியங்காரனைக் கொன்று அரசுரிமையைக் கைக் கொள்வாய்" என்றும் சொல்லி, அவனைப் பூமியில் ஒருசோலையிலே கொண்டுவந்து விடுத்து, தழுவிக்கொண்டு வழி விட்டுப் போனான்.

அதன் மேல் ஜீவகன் அச் சோலையைக் கடந்து சென்றான். அப்போது ஒரு வேடன் தன் மனைவியுடன் அவனுக்கு எதிர்ப்பட்டான். அவனைக் கண்டதும், ஜீவகன், "நீ எம் மலை

யில் வாசஞ் செய்பவன்?'' என்று வினவ, அவன், (பக்கத்தி லிருந்த ஒரு மலையைச் சுட்டிக் காட்டி) "இம் மலையி னுச்சி யிலே ஒரு தினைப்புன முள்ளது; அதற்குத் தென்மேற்கு மூலையில் குவட்டில் வாழ்கின்ற வேடர்கட்குத் தலைவன் யான்'' என்றான். அதன் மேல் ஜீவகன் அவனை நோக்கி, "நீ உண்பதென்?'' என்று வினவ, அவன், "நான் பன்றித் தசையுடனே சமைத்த சோற்றைத் தேனோடு கலந் துண்டு, பின் நெல்லா லாக்கின கள்ளைப் பருகுவேன்'' என்றான்.

இதைக் கேட்டு ஜீவகன், "உயிர்க் கொலையும், ஊன் தின்றலும், கள்ளுண்டலும் மகா பாதகங்களாம்'' என்று கூறி அவனை அத் தொழில்களி னின்றும் நீக்கி நல்வழியிற் செலுத்தி விட்டு, அங்கே காட்டுத் தீயால் வளைக்கப்பட்டு ஆபத்துக்குட் சிக்கியிருந்த யானைத் திரளின் வருத்தத்தை மழையைப் பெய்வித்து நீக்கி, அரணபாத மென்னும் மலையை யடைந்து, அதன் தாழ்வரையி லிருந்த இருடிகளைக் கண்டு வணங்கி, ஆங்குள்ள கடவுள் கோயிலை வலங் கொண்டு, கடவுள் பாதங்களைப் புஷ்பங்களால் அருச்சித்துப் பாடித் துதித்து, சாரணர்களையுங் கண்டு வணங்கி, இயக்கி யால் விருந்து செய்யப் பெற்றுப் பின்னர் அம் மலைச் சாரலைக் கடந்து பல்லவ தேசம் போய்ச் சேர்ந்தான். அங்ஙனம் சேர்ந்தவன் புலத்திற் களைபறித்து நின்ற இரண்டு மங்கையரிடத்தே வழி கேட்டுத் தெரிந்துகொண்டு, அந் நாட்டிற்குத் தலை நகராகிய சந்திராப மென்னும் நகரிற் புகுந்து அந் நகர்க் கிறைவன் புதல்வனாகிய உலோகபாலனோடு நண்பு பூண்டு, அவனுடைய பரிவார ஜனங்களால் உபசரிக் கப் பெற்று, மங்கையர் நாடகம் நடத்த அதில் ஆடிய தேசிகப் பாவை யென்னும் நிருத்தமாதின் ஆட்டங் கண்டு மகிழ்வுற் றிருந்தான்.

இப்படி யிருந்த தருணத்திலே, அந்த உலோக பாலன் சகோதரியாகிய பதுமை யென்பாள் சோலையிற் சென்று தன் கையில் அரவு தீண்ட மயங்கி விழுந்தபடியால், அதனை யுணர்ந்த சேவகனொருவன் ஓடிவந்து உலோக பாலனிடத்தில் அந்த ஆபத்தான செய்தியைத் தெரிவித்தான். உடனே உலோகபாலன் ஜீவகனை அவ்விடத்திலேயே வைத்துவிட்டுப் பதுமையிடம் விரைந்து சென்று, பற்பல விஷ வைத்தியர்களை அழைத்து அவர்களால் விஷந் தீருதற்கான அநேக பரிகாரங்களைச் செய்வித்தான். எதிலும் பயன்படவில்லை. பதுமை இறந்தனளென்றே நினைத்து எல்லோரும் அழுது புலம்பினார்கள். அதன்மேல் உலோக பாலன், "பதுமையின் விடத்தைத் தீர்த்தாருக்கு, என் தந்தை தனபதி, தம் நாட்டையுந் தந்து, நிதியையும் நல்கி, அப் பதுமையையுங் கொடுப்பார்" என்று பணியாளரால் நகரில் முரசறைவித்தான். அது கேட்டு மந்திர பலத்தால் புடவையை ஆகாயத்தில் நிறுத்தும் வல்லமை பெற்ற வேதியர் எழாயிரம் பேர் வந்து சூழ்ந்து, 'இதோ பதுமையை எழுப்பி விடுகின்றோம்' என்று மாந்திரிகம் முதலிய தொழில்களைச் செய்தும் விஷந் தீர்ந்திலது. அத் தருணத்தில் சோதிட னொருவன், ஆந்தை கூவுதல் முதலியவற்றை ஆராய்ந்து உலோகபாலனை நோக்கி, "இராஜ குமார! இப்போது புதிதாக ஓர் இளைஞன் உன்னிடத்தே வந்து சேர்ந்துளன்; அவனால் நம் இடர் தீரும்; மங்கைக்கும் சாவில்லை" என்று கூறினன்.

உலோகபாலன், அச் சோதிடனாற் கூறப் பட்டவன் ஜீவகனேயென் றுணர்ந்து, 'நாம் இவ்வளவு காரியங்களைச் செய்தும் அவனை நினைக்காம லிருந்துவிட்டோமே' என்று தான் மேலே வைவைப யறைந்து அருகில் நின்ற பணி

யாளரை நோக்கி, "என்னுடன் அங்கு இருந்த குமரனை விரைவில் அழைத்து வருவீராக" என்று கட்டளையிட்டான். அவர்கள் சென்று அங்ஙனமே ஜீவகனை அழைத்து வந்தார்கள். அவன் வந்ததும், பதுமையின் நிலையினைக் கண்டு, அவளிடத்தே சூழ்ந் தழுதுகொண் டிருந்த பெண்களை நோக்கி, "இப்பெண்மணிக்குற்ற தீங்கு என்னை?" என்று வினவ, அது கேட்டு வருத்தத்துடனிருந்த உலோகபாலன், ஜீவகனை நோக்கி, "இவளை அரவந் தீண்டிற்று; நீ எல்லா வித்தைகளிலும் வல்லவனாதலின், இவளை விரைந்து நோக்கி ஏதேனுமோர் பரிகாரத்தைச் செய்வாயாக" என்றான்.

உடனே ஜீவகன் பதுமையை நோக்கி, "இவளுக்கு மரணமில்லை; நீ அழாதே" என்று உலோகபாலனுக்குத் தேறுதல் கூறிவிட்டுப் பின்னர், அரவக் கடியின் விதங்களையும், பற்களின் பாகுபாடுகளையும், பாம்பின் ஜாதிகளையும், பாம்பு கடிக்கும் நேரங்களின் தன்மைகளையும் ஆராய்ந்து, 'இவ்விஷம் விரைவில் இறங்கும்' என்று ஒரு குவளை மலரையெடுத்து அதில் தான் கற்ற மந்திரத்தால் மூன்று உரு ஓதி அதனைப் பதுமையின் சிரசிலே யழுத்திப் பக்கத்தில் விலகி நின்று இரண்டு உரு ஓதி அவளுடைய முகத்தை நேரே நோக்கினான்.

அவ்வாறு நோக்கவே, சூரியன் தோன்ற இருள் நீங்கினாற்போல, பதுமை உடம்பில் விஷம் நீங்கிற்று. உடனே பதுமை கண்களை விழித்து நோக்கினாள். எல்லோரும் சந்தோஷித்து அவளுக்கு அதன்மேற் செய்யவேண்டிய உபசாரங்களைச் செய்து ஜீவகனைக் கொண்டாடினார்கள். பதுமை, தன் உயிரைக் காப்பாற்றிய அவனையே மணம்புரிந்து கொள்ளவேண்டுமென்று மனத்தில் உறுதிபூண்டாள்.

அதன்மேல் தனபதி இவற்றையெல்லா முணர்ந்து ஜீவகனை யழைத்து அவனுக்கு விருந்திட்டு உபசாரங்கள் புரிந்து அவன் குலத்திறங்களை யெல்லாம் விரும்பிக்கேட்டு 'இவனை யிகர்ப்பார் உலகில் எவருமிரார்' என்று அவனைக் கொண்டாடினன். ஜீவகன் சில தினங்கள் வரை அவ்விடத் திலேதங்கி யிருந்தான்.

அப்படி யிருக்கும்போது ஒரு தினம் தனபதி யென்பான், தன் மந்திரியாகிய மதிநரனை நோக்கி, "இங்கே வந்து உலோகபாலனோடு சிநேகங்கொண் டிருக்கும் குமரன், பதுமைக்கு உயிர் கொடுத்தவ னாதலாலும், உலகத்தை யெல்லாம் ஆளத்தக்க உத்தம இலக்கணம் பொருந்தியவனா யிருத்தலாலும் அவனுக்கே பதுமையைக் கொடுக்கலா மென்று நான் கருதுகிறேன்; அவன் இதற்கு இசைவானாயின் அவ்வாறே இதனைச்செய்யலாம்" என்று கூற அவ்வமைச்சனும், "அதுதக்கதே; நானும் இதனை முந்தியே நினைத்தேன்" என்றான். தனபதி, "அப்படியாயின் நீயே அவனுக்கு இக் காரியத்தைக் கூறி அவனது உள்ளக்கருத்தைத் தெரிந்து வருவாயாக" என்று சொல்ல, அவன் சென்று ஜீவகனிடம் இதனைச் சொன்னான். அவனும் இதற்கு இசைந்தான். அமைச்சன் மீண்டுவந்து ஜீவகன் சம்மதத்தைத் தனபதிக்குத் தெரிவித்தான்.

அதன்மேல், தனபதியும், திலோத்தமையும், உலோகபாலனும் கூடி, "அவ் விளைஞன், அழகில் மிகுந்தவன்; பதுமைக்குப்போன உயிரையும் மீட்டான்; அன்றியும் 'விடந்தீர்த்தானுக்குப் பதுமை உரியவள்' என்று முரசறைவித்தபடி அவளை மணஞ் செய்தற்கும் பொருத்த முடையவனானன்; ஆதலின், அவனுக்கு இப்பொழுது பதுமையைக்

கொடுத்தலே நல்லது'' என்று பேசி, ''மணத்திற்கு வேண்டியவற்றை அமைக்கக் கடவீராக'' என்று காரியஸ்தரை நோக்கிக் கூறினர். அங்ஙனமே கல்யாணத்திற்கு வேண்டுவனவெல்லாம் சித்தமாயின; சோதிடனும் முகூர்த்த நாளை நிச்சயித்தான். கல்யாண மண்டபமும் அலங்கரித் தமைக்கப்பட்டது. நன்மையாக ஏற்படுத்திய அம் மண்டபத்திலே பெண்ணையும் மாப்பிள்ளையையும் வைத்துச் சோதிடன் கூறிய நல்ல நாளிலே, மங்கையர் மங்கலங்கூறி இருவர்க்கும் முன்கையில் காப்பைக் கட்டினர்கள். அதன்மேல், இரத்தினப் பாவையை நிகர்த்த மாதர்கள், யானை தன் பிடரால் சுமந்து கொண்டு வரப்பட்ட மங்கல நீராலே ஜீவகனையும், பதுமையையுங் குளிப்பாட்டி இருவருக்கும் மணக்கோலத்தைச் செய்து, திருமணப் பந்தலிலே நன் முகூர்த்தத்தில், அவ்விருவரையுங் கொண்டுவந்து சேர்த்தனர். தனபதி முதலாயினர் பெரியோர்களால் அவர்களுக்கு மணத்தை நிறைவேற்றுவித்தனர்.

அங்ஙனம் மணம் முடிந்தபின் ஜீவகன் பதுமையுடனே அந் நகரத்தில், உயர்ந்த ஆடை யாபரணங்களை யணிந்தும், வாசனை வஸ்துக்களைப் பூசியும், நாவிற்கினிய வஸ்துக்களை உண்டும், இசைப்பாடல்களைக் கேட்டும், நாடகங்களை நோக்கியும் சந்தோஷமாகத் தங்கியிருந்தான். இரண்டு மாதங்கள் கழிந்தன. அதன்மேல் ஒரு நாள் ஜீவகன், மேல் நடக்க வேண்டிய காரியங்களை உத்தேசித்து, அந் நகரை விட்டு நீங்கத் துணிந்து நடுராத்திரியிலே பதுமை உறங்குந் தருணத்தில், அவளறியாமல் வெளியேறிப் போய்விட்டான்.

அவன் அவ்வாறு பிரிந்தவுடனே பதுமை விழித்துப் பார்த்து அவனை எங்குங் காணாமையால் மிக்க துயர்க்கடலில் ஆழ்ந்து மலர்மாலையை அறுத்துச் சிதறியும், கைவளை

களைத் தூளில் மோதி யுடைத்தும், கழுத்தி லணியப்பட்டிருந்த ஆபரணங்களைக் கழற்றி யெறிந்தும், முகத்திலறைந்து கொண்டும், "அந்தோ! என் நாயகர் ஏன் என்னைப் பிரிந்து சென்றார்; நான் என்ன குற்றம் செய்தேன்; அவர் என்னிடம் சொல்லாது சென்ற காரணந் தெரிய வில்லையே; இனி அவரை நான் காணும் நாள் எந்நாளோ" என்று கீழே விழ்ந்து புரண்டழுதாள். அதைக் கண்டு அவளுடைய தோழி, "மாதே! நீ மணவாளர் பிரிவுக்காக வருந்தாதே; தலைவர்கள் மனைவியரோடு கூடியிருப்பதும் காரியத்தினாற் பிரிவதும் இயற்கையே; அவர் ஏதேனுமொருகாரியத்தைக் கருதியே இவ்வாறு பிரிந்திருப்பார்; உன்னிடம் சொல்லாமற் சென்றதற்கும் தக்க காரண மிருக்கும்; ஆயினும், இப்பொழுது ஆந்தைப் பேடும் சேவலும், மரப் பொந்திலே கூடியிருந்து அவர் வரவைக் கூறுகின்றன; அதனால் அவர், நம் கையைவிட்டு நீங்கும் பந்து விரைவில் அக் கையிலேயே வந்து கூடுவதுபோல அகப்படுவார்; பெண்மணி! இது தவறாது; அன்றைக்கு உனக்கு அரவினால் தீங்கு நேர்ந்த காலத்தில் அதனை முந்தியே ஆந்தை உணர்த்த உனக்குக் கூறினேன்; அது சரியாகவே நடந்தது. அதனாலேயே இதுவும் உண்மையாகு மென்று நீ தெரிந்து கொள்ளலாம்; இனி, நீ உன் கவலையை விடு" என்று அவளை எடுத்தணைத்துக் கண்ணீரைத் துடைத்துத் தேற்றினாள். இரவும் விடிந்தது, அவளுடைய நெஞ்சும் தெளிந்தது.

அங்ஙனம் விடிந்தபின், ஜீவகன் பிரிந்த செய்தியை யுணர்ந்த அந்தப்புர மகளி ரெல்லோரும் மனம் வருந்தி முகம் வாடினார்கள். அப்போது பதுமையின் தாயாகிய திலோத்தமை, பதுமையை நோக்கி, "என் அருமைப் புதல்வி! நின் நாயகன், தன் பிரிவு தோன்றுமாறு முன்

ளில் ஏதேனுங் கூறியதுண்டோ?" என்று வினவினாள். அதற்குப் பதுமை "அன்னையே! அவர் நேற்றிரவு, 'போர்த்தொழிலைக் குறித்தும், பொருள் சம்பாதிக்கவும் புருஷர் மனைவியரை விட்டு நீங்குதல் இயற்கை; அங்ஙனம் நீங்கினால் மனைவியர் வருந்தாமல் வீட்டிலிருத்தல் அவரது கடமையாம்' என்று கூறினார்" என்றாள். திலோத்தமை அதனைக்கேட்டு மகிழ்ந்து, தன் மகளிடத்தே, "பாவையே! உன் கணவர் கூறிய வார்த்தைகளினாலேயே, அவர் ஏதோ ஒரு காரிய நிமித்தமாக இன்று பிரிந்தனரென்பதும், விரைவில் மீண்டும் அடைவரென்பதும் விளங்குகின்றன; அவர் தம் பிரிவைக் குறிப்பா லுணர்த்துதற்கே அவ் வார்த்தைகளைக் கூறியிருக்கின்றார். ஆதலின், நீ வருந்தாதே" என்றாள். பதுமை அவ் வார்த்தைகளால் சற்றுத் தேறியிருந்தாள். அப்போது சூரியன் உதயமாயிற்று. பதுமைக் குற்ற துயரையும், ஜீவகன் பிரிவையும் சிலர் தனபதிக் கறிவித்தனர். அவன், தன்னுடைய வேலைக்காரரை நோக்கி, "எப்படியாயினும் அவனைத் தேடிக் கொண்டு வருவீராக" என்றான். சிலர் நாநா திக்குகளிலும் அவனைத் தேடிச் சென்றார்கள்.

இது நிற்க. பாதியிரவில் வெளியேறிப்போன ஜீவகன் தன்னைத் தேடிவந்தார் அறியாதபடி, வடதிசையை நோக்கிப் போகக் கருதித் தன்னுடைய ஆபரணங்களை யெல்லாம் கழற்றி வழியி லெதிர்ப்பட்டா னொருவனுக்குக் கொடுத்துவிட்டு, வஸ்திரத்தை இரண்டு துண்டாக்கி ஒரு துண்டைக் கட்டிக்கொண்டு தன்னை இன்னவனென்று எவருமுணராத ஒரு புது வடிவந் தாங்கிச் சென்றான். அப்போது அவனைத் தேடிக் காணும் பொருட்டுத் தனபதியால் அனுப்பப்பட்டவர்கள், விரைந்துபோய் நடுவழியில் அவனைக்கண்டு, "ஐயா!

உன்னைப்போலவே வடிவம்பெற்ற இளங்குமர னொருவன் நேற் றிரவு எங்கள் அரண்மனையிலிருந்து வெளியேறி வந்து நுவிட்டான்; அவன் பிரிவால் அரசன் மாளிகை மிகுந்த துயர்க்குள்ளாகியிருக்கின்றது; அவனைத் தேடி அழைத்துச் செல்ல நாங்கள் வந்தோம்; நீ அக்குமரனை எங்கேனும் கண்டதுண்டோ?'' என்று வினவினார்கள். அதற்கு அவன் "அக்காளையை இதற்கு ஒன்பதாவது மாதத்திலே நீங்கள் காண்பீர்கள்; அதற்கிடையிற் க ணமாட்டீர்கள்; யான் கூறியது பொய் யுரையன்று; நீங்கள் போய் உங்கள் வேந்தனுக்கும், மற்றையர்க்கும் இதனை உரைப்பீராக" என்றான். அவ்வாறே அவர்கள் சென்று தனபதிக் குரைத்தார்கள்.



# அத்தியாயம்-10

## க்ஷேமசரியின் மணம்

மேற்கூறியபடி பதுமை வருந்த அவளைவிட்டுப்பிரிந்து சென்ற ஜீவகன், முன்னே தோன்றிய காட்டிற்புகுந்து ஆங்காங்குள்ள விநோதங்களை யெல்லாம் பார்த்துக் கொண்டு எவ்வித வாகனமுமின்றிக் கால்நடையாகவே நடந்து, அதற்கப்பால் சித்திரகூட முண்டென்று சுதஞ்சனன் கூறியதை நினைத்து, அதன் பக்கமாகத் திரும்பிக் கடவுள் ஆலயமுள்ள ஒரு மலையைச் சார்ந்து புஷ்பங்களாலே கடவுள் அடிகளை அருச்சித்து வணங்கிப் பலவிதமாகக் கடவுளைத் துதித்துப் பாடி அங்கேயுள்ள சித்திரகூடமென்னும் தவப்பள்ளியைக் கண்டான். அங்கே மனைவியரோடு இல்லற சன்னியாசிகளாய்த் தவஞ்செய்துகொண் டிருந்த முனிவர்கள் ஜீவகனைக் கண்டு அவனுக்கு வள்ளிக்கிழங்கையும் பல கனிகளையுங் கொடுத்து, "பலர்க்கும் உபகாரியே! இவற்றை உண்பாயாக" என்று அவனை உபசரித்து, அதன்மேல், 'இவன் எல்லாக் கலைகளையுங் கற்றவன்; தத்துவக் கேள்வியை உடையவன்; ஆதலின், இவனுடைய கல்வித்தேர்ச்சியை அறியும்படி இவனிடத்தே நம் கொள்கைகளில் இரண்டொன்றைப் பேசிப்பார்ப்போம்' என்று தங்கள் தவநெறியைப் பற்றிச் சில வார்த்தைகள் பேசினார்கள்.

அவற்றைக் கேட்டதும் ஜீவகன் அவர்களை நோக்கி, "முனிவர்களே! உங்களுடைய கொள்கை சரியானதன்று; சமுசாரத்தில் அழுந்தியபடியே முத்தி படையலாமென்று நீங்கள் பிரயாசைப் படுகின்றீர்கள்; இது பயனற்றதாகும். பெரிய கல்லைக் கழுத்திலே கட்டிக்கொண்டு கடலை நீந்தத் துணிந்தவன் பிழைப்பானானால் சமுசாரபந்தத்தோடு கூடிப்

பிறவிக்கடலைக்கடக்க நினைத்து இவ்வாறு விரதங்களை அனுஷ்டிப்பவர்களும் பிழைப்பார்கள். முத்தியடைய விரும்பிச் சடைவளர்ப்பதாலும், காவியுடுப்பதாலும், திருவோடேந்துதலாலும், ஏகாங்கி பூண்பதாலும் பயனில்லை; இவையனைத்தும் பிறவிக்கே வித்தாகுமென்று தத்துவ முணர்ந்தோர் கூறுவர்" என்றான்.

அம்முனிவர்கள், "நாங்கள் நிற்கின்ற வழி நல்லவழி: நீ கூறுவது தூய்மை யில்லாத வழி: எங்கள் பெரியோர் கூறிய இம்மார்க்கத்தில் நிற்குவதாயின் அதனை விவரித்துக்கூறு" என்றார்கள். அதன்மேல் ஜீவகன், "அந்தோ! நீங்கள் உறியிலே கிடந்தாடி இல்லற நுகர்ச்சிகளை அனுபவித்துக்கொண் டிருப்பதால் தீவினை யொழியு மென்று நினைக்கிறீர்கள்; இது தப்பான அபிப்பிராயம்; உங்களுக்கு இதனால் அவ்வாறு நற்கதி கிடைப்பதாயிருந்தால் மரங்களிலே கனிகளை இச்சை தீர உண்டு கொண்டு தலை கீழாகத் தூங்கும் வௌவால்களுக்கும் மோக்ஷம் கிடைக்கலாமே! இன்னும், 'எங்கள் அல்லியரிசிக் கஞ்சி முதலியவற்றை உண்டு, அக்கினி மத்தியிலே நின்று வெவ்விய தவத்தைச் செய்வதால் எங்களுக்கு நற்கதி கிடைக்கும்' என்றும் நீங்கள் நினைக்கின்றீர்கள்: இந் நினைவும் சரியன்று; இதனால் உங்களுக்கு முக்தி கிடைப்பதாயிருந்தால், கல்லையே ஆகாரமாக உண்டு வெம்புகின்ற பாலைவனத்திற் சஞ்சரிக்கின்ற புறுக்களுக்கும் மேற்கதி கிடைக்க வேண்டுமே! இஃதன்றி, 'யாம் சடைவளர்த்து உடம்பை வாட்டி நீரில் மூழ்கி நிலத்திற் சேர்ந்திருப்பதனாலே மேலான கதியை அடைவோம்' என்று நீங்கள் நினைப்பீர்களானால், காட்டில் உரோமங்களை வளர்த்து நீரில் விழ்ந்து நிலத்திற் கிடந்து புரளும் கரடிகளும் முக்தி யடையவேண்டுமே! நீங்கள் சிறு குடிசையி

லே தரையில் படுப்பதால் உங்களுக்கு முக்திகிடைக்குமெனில், இவ்வாறே வாழும் வேடர்க்கும் நற்கதி கிடைக்குமன்றோ! இன்னமொன்றுகேட்பீராக: வெள்ளை வஸ்திரத்திலே பட்டஉதிரக் கறையை அவ்வுதிரத்தினாலேயே போக்கமுடியாது; அதுபோலவே சமுசார பந்தத்தினாலே நேர்ந்த பாவத்தை அந்தப் பற்றைக்கொண்டே நீக்குதல் முடியாது; வஸ்திரம் வெந்து போதற் கஞ்சிப் பின்னும் அதற்குள்ளே நெருப்பையே பொதிந்து வைத்தால் அது அவ்வஸ்திரமுழுவதையும் எரித்து விடாதோ! அது போலச் சமுசாரபந்தம் நின்குசெய்யுமென்று நினைத்துத் துறவுபூணக் காட்டிற்கு வந்த நீங்கள் மனைவியரையும் உடனழைத்துவந்து வைத்துக்கொண்டிருப்பதால் என்னுண்டாமென்பதைநீங்களே யோசித்துப் பாருங்கள்; ஒருபோதும் இதனால்நற்கதியுண்டாகாது; உடம்பு விரைவில் அழிந்துபோகும்; ஆதலின், அதற்குமுன்னே நீங்கள் மெய்த்துறவு பூண்டு, நல்ஞானம்; நற்காட்சி, நல்லொழுக்கம் என்னும் மூன்றினையுங் கைக்கொண்டு மேற்கதியிற் சேர்வீராக; நல்ஞானமாவது, உண்மையை உணர்தல்; நற்காட்சியாவது அங்ஙனமறிந்த பொருள்களை நிச்சயமாகத் தெளிதல்; நல்லொழுக்கமாவது ஐம்பொறிகளையும் ஐம்புலன்களிற் செல்லாமல் கெடுத்து உயிரைக் கெடாமல் அவ்வுயிர் உய்யும்படி ஒழுகுதல். இம்மூன்றும் ஒருவனிடத்தே பொருந்தினால் இருவினையும் நிச்சயமாகக் கெடும்" என்று நல்ல உபதேசத்தைச் செய்தான்.

இவற்றையெல்லாம் கேட்டதும் அம் முனிவர்களெல்லோரும், "உத்தமனே! இன்று உன்னால் நாங்கள்உண்மை மார்க்கத்தினை உணர்ந்தோம்" என்று அவனைக் கொண்டாடி அப்பொழுதே மெய்த்துறவில் சிந்தை வைத்தார்கள்.

அப்போது சூரியன் அஸ்தமித்தபடியால் அன்றிரவு ஜீவகன் அவ்விடத்திலேயே தங்கி இளைப்பாறி, மறுநாள் பொழுதுவிடிந்தவுடன் அங்கிருந்து புறபட்டு அம் முனிவர்கள் வழிகாட்ட நடந்து மிக்க வளம்பொருந்திய தக்க நாட்டை யடைந்தான். அங்ஙனம் அடைந்தபின் அந் நாட்டின் வளங்களை யெல்லாம் பார்த்துக்கொண்டே போய் உயர்ந்த மதிலாலும், சிறந்த கோபுரத்தாலும், ஆழ்ந்த அகழியாலும், செறிந்த கொடிகளாலும் மேன்மை பெற்று விளங்குவதும், நரபதி தேவன் என்னும் அரசனால் ஆட்சி புரியப்பட்டதும், அந் நாட்டிற்குத் தலைமையானதுமாகிய கேமமாபுர மென்னும் நகரத்தை அடைந்தான்.

அந் நகரத்திலே, அரசனுக்குச் சமானமாக நிதி படைத்த சுபத்திரன் என்னும் வணிகன் ஒருவனிருந்தான். அவன் மனைவி நிப்புதியென்பாள். இவ் விருவருக்கும் கேமசரியென்னும் ஒருபெண்பிறந்து பருவமடைந் திருந்தாள். இவள் பிறந்த காலத்தில் இவளுக்குச் சாதகங் கணித்த சோதிடன், "இவள் எவனைக் கண்டு நாணுகின்றுளோ அவனே இவளுக்கு நாயகனாவான்" என்று கூறினான். அதனால், அப்பேர்ப்பட்டவனைக் காணுதற்குச் சுபத்திரனும், நிப்புதியும் அங்கே வரும் இளைஞர்களை யெல்லாம் தங்கள்வீட்டிற் கழைத்துத் தினந்தோறும் அவர்கட்குவிருந்திட்டு வந்தார்கள். இங்ஙனம் பலநாட்கள் செய்தும் அத்தகையமணமகன் அவர்களுக்கு எதிர்ப்படவில்லை. அதனால்நிப்புதியென்பாள், தன்மகள் பருவமடைந்தும் மணமில்லா திருப்பதைப் பற்றி மிகவும் வருந்தினாள். அதுகண்டு சுபத்திரன், "மாதே! பூமலர்ந்தபோதே வண்டு அதனைத் தேடிவருவது இயற்கை. அதுபோலவே நம் புத்திரிக்குரிய மணவாளனை நாளையே

விதி கூட்டிவைக்கும்; நீ வருந்தாதே" என்று அவளைத் தேற்றினான்.

அத் தருணத்திலே, மேற் கூறியபடி சென்ற ஜீவகன் அந் நகரத்திலுள்ள ஓர் ஆலமரத்தின் நிழலிலே கடவுள்மந்திரத்தை ஜெபித்துக்கொண்டு சந்தோஷமாக உட்கார்ந்திருந்தான். அங்ஙன மிருந்த அவனைக் கேமசரியின் தந்தையாகிய சுபத்திரன் கண்டான். அங்ஙனம் கண்ட மாத்திரத்திலே அவனுடைய இராஜ லட்சணங்களை யெல்லாம் பார்த்து, 'இவன் உயர்குலத்திற் பிறந்த குமரனே' என்று அவனோடு வார்த்தையாடி நண்பு கொண்டு அவனைத் தேரிலேற்றித் தன் இல்லத்திற் கழைத்துச் சென்றான். அப்போது கேமசரி வீணையை எடுத்து வாசித்துக் கடவுள் ஸ்தோத்திரங்களைப் பாடிக்கொண் டிருந்தாள். அவள் அவ்வாறு பாடுவதைக் கேட்டு, அவளுடைய தாயாகிய நிப்புதி மகிழ்ந்து, 'இவள் இப்பொழுதே தக்க நாயகனை அடையவேண்டும்' என்று தானும் இறைவனைத் தொழுதாள். இவர்கள் இவ்வாறு கடவுளைத் தொழுது கொண்டிருந்த சமயத்தில் இவர்களுடைய கருத்தின்படியே சுபத்திரனும் ஜீவகனும் அங்குப் போய்ச் சேர்ந்தார்கள்.

ஜீவகனைக் கண்டதும், கேமசரி மிக்கநாணத்தையடைந்தாள். அதுகண்டு அங்குள்ள எல்லோரும் அவளுக்கு அவனே நாயகனென்று நிச்சயித்து அவனைப் பலவிதமாகக் கொண்டாடினார்கள். சுபத்திரன் அவனுக்கு விருந்திட்டான். ஜீவகன் அங்கே நல்லுணவுகளை யுண்டு தாம்பூலந் தரித்து இனிதாக மகிழ்ந் திருந்தான். அதன்மேல் சுபத்திரன் தன் எண்ணத்தை அவனிடத்தில் தெரிவித்து அவனுடைய சம்மதத்தின்மேல் நற்றினத்திலே கேமசரியை

அவனுக்கு மணஞ் செய்துகொடுத்தான். பின்னர் ஜீவகன் அவளுடனே சோலைகளிலும் வாவிகளிடத்தும் சென்று இனிதாகப் பொழுது போக்கி இரண்டு மாதங்கள் அந் நகரத்திற்றங்கியிருந்தான். பின்னல் ஒரு தினம் அவளுடனே சோலையிற் சென்றிருக்குந் தருணத்தில், தன் காரியத்தை உத்தேசித்து அன்றிரவு அவளை விட்டுப் பிரியக் கருதி அதனைக்குறிப்பால் அவளுக்கு உணர்த்துமாறு அங்கேவந்தவொரு வண்டை நோக்கி, "வண்டே! நீ இங்கே மதுவுண்ணவந்த பொழுது நின் பிரிவு பெடைக்குத் துன்பத்தைத் தருவதாயிருந்தாலும், அஃது இறந்தால் பின்னே நீயும் இறப்பாய்; இறவா திருந்தால் நீ உன் தொழில் முடித்துக்கொண்டு போய் அதனிடம் சேர்வாய்; ஆதலின், இதனை நினைந்தே அப் பெடை இறவா திருக்குமன்றோ" என்று கூறினன். கேமசரி அதனை யாதோவென்று நினைந்திருந்தாள். அதன் மேல் இருவரும் தங்கள் மாளிகைக்குச் சென்றார்கள். அன்றிரவு ஜீவகன், கேமசரி அயர்ந்து நித்திரை செய்யுந் தருணம் பார்த்து எழுந்து சந்தடி செய்யாமல் வெளியேறித் தான் நினைத்தபடி ஊரைக் கடந்துபோய்விட்டான்.

அவன் அவ்வாறு சென்ற அத் தருணத்திலேயே கேமசரி, தன் நாயகன் தன்னை விட்டு நீங்கியதாகக் கனவுகண்டு திடுக்கிட் டெழுந்து பார்த்து, அவன் அவ்வாறே காணுதிருக்க, பல விடங்களிலும் சென்று தேடி, நிச்சயமாக அவன் பிரிந்து போயின னென்றே துணிந்து, முதல் நாள் அவன் வண்டை நோக்கிக் கூறியதை நினைந்து, அவன் பிரிவை யுணர்த்துதற்கே அவ்வாறு கூறின னென்று மிகவும் வருந்தி, "எனக்கு அன்புடன் மணமாலே சூட்டிய நாதரே! நீர் என்ன நினைந்து இவ்வாறு என்னை விட்டு நீங்கினீர்? மணமுடித்துச் சில தினங்கள் கழிவதற்கு முன்னரே நீர்

இப்படி என்னை வருந்த விட்டுப் பிரிந்து போதல் நீதி யாகுமா? உமது பிரிவையுணர்த்துதற்குநேற்று நீர் வண்டை நோக்கிக் கூறியதை நான் சிறிதும் உணர்ந்திலேன்; அங் ஙனம் அறிந்திருப்பேனாயின் உம்மைப் போக விடேன்" என்றும், ஆங்குள்ள மயில் முதலியவற்றை நோக்கி, "மயிலினங்காள்! குயிலினங்காள்! கிள்ளையினங்காள்! யான் மறுபடியும் என்நாயகரைக் காணப் பெறுவேனோ? அவர் எங்குளர்? அவர் இருக்கு மிடத்தை நீங்கள் கூறுவி ராயின் உங்களுக்கு மெத்தப் புண்ணிய முண்டு" என்றும் கூறிப் பலவிதமாகப் புலம்பி யழுது வெண்ணெய்ப் பாவை வெயிலெதிர்ப் பட்டு உருகுவது போல மனமுருகினாள். அப்போது விடி வெள்ளி முளைத்தது.

அங்ஙனம் விடியுந் தருணமானவுடனே அவள் தாயாகிய நிப்புதி யென்பாள், கேமசரிக் குற்ற துயரை யுணர்ந்து, அவளிடத்தே வந்து, "அருமைப் புதல்வியே! நின் கண வர் உன்னை வெறுத்துப் பிரிந் திருக்கமாட்டார்; இப் பிரிவு ஏதோ ஒரு முக்கியமான காரியத்தால் நேர்ந்திருக் கும்; மீண்டும் அவர் உன்னிடம் சேர்வர்; கோதையே! இன்னமுங் கேள்; உலகத்தில் மேலாய் வளர்ந்தன தாழ்ந்து விழும்; பிறந்தவ ரெல்லோரும் சாவர்; செத்தவ ரெல்லோரும் பிறப்பர்; மிக்க அழகெல்லாம் ஒரு காற் கெடும்; மற்றொருகாற் கூடும்; கூடினவர் பிரிவர்; பிரிந்த வர் கூடுவர்; இங்ஙனம் காரியங்கள் மாறி மாறிச் சுழன்று வருவது உலகத் தியற்கை; ஆதலின் பிரிந்த அவர் மீண்டு வருதலுங் கூடும். ஒருவாறு அவர் வாராமற் போயினும் அதைப்பற்றி வருந்துவதாற் பயனில்லை; ஏனெனில், மக் கள் இளமை நீர்க்குமிழி நிகர்த்து விரைவில் தோன்றி மறையும்; அவ ரின்பமும் மின்னைப் போன்று விரைவில்

உற்பத்தியாகி மறைவதாம்; அவர் செல்வமும் தீவினை வந்த காலத்தே வெயிலைக் கண்ட பனிபோல் நீங்கும். உனக்குக் கெட்டகால மிருந்தால் அவர் வராமற் போவார். இவற்றை யெல்லாம் நீ உணர்ந்து மனந் தேறி வருத்த மொழிவாயாக" என்று அவளைத் தேற்றினள். அங்ஙனம் தேற்றியும், அவள் நாயகனைக் காணவேண்டுமென்னும் ஆவல் நீங்காதவளா யிருந்தாள்.

அவள் இப்படி யிருக்க, வெளியேறி நடந்த ஜீவகன், வரைவிட்டு நீங்கிய வுடன் விடியற்கால நிலவு தோன்றி இருளை நீக்கியபடியால் அந் நிலவின் வெளிச்சத்தில் மார்க்கத்தைத் தெரிந்து போய், சூரியன் உதயமான வுடனே, தன்னுடைய ஆபரணங்களை யெல்லாங் கழற்றி வழியிற் சென்ற ஒருவனுக்குக் கொடுத்தான். அவன் ஜீவகனை நோக்கி, "ஐயா! நீர் எவ் வூரிலே யிருப்பவர்? எவ் வூர்க்கு வந்தீர்? உம்முடைய மனைவியர் எத்தனை பேர்? உமக்கு ஒழுக்கமில்லாத பிள்ளைகள் எத்தனை பேர்? ஒழுக்க முள்ளவர் எத்தனை பேர்?" என்று வினவினன். அதற்கு ஜீவகன் தன்னுடைய மேலான உணர்வினாலே உள்ளே உயர்ந்த பொருள் தோன்றுமாறு, "நண்ப! இப்பொழுது நான் இவ் வுடம்பிலே யுள்ளவன்; இவ்வுடம் பெடுத்தற்கே இங்கு வந்தேன்; என் மனைவியரோ நால்வர்; ஒழுக்கமற்ற பிள்ளை ஒன்று மில்லை; ஒழுக்கமுள்ள பிள்ளை ஒருவின் உண்டு; அவன் ஒருவனும் நான்கு தாய்மாரது ஒரு வயிற்றிலே பிறந்தான்" என்றான்.

இவற்றைக் கேட்ட வுடன் அறிவில்லாத அவன், 'இஃதென்ன! இவன் கூறுபவை விநோதமா யிருக்கின்றனவே' என்று சிரித்துப் பின்னரும் 'இவனோ மகா

புத்திமானைகக் காணப் படுகிறான்; ஆதலின், வினை இவ் வார்த்தைகளைக் கூறி யிருக்க மாட்டான்; இவற்றில் ஏதேனும் உயர்ந்த கருத்து அடங்கி யிருத்தல் கூடும்' என்று மீண்டும் அவனை நோக்கி, "அறிவுடையீர்! நீர் கூறியவை எனக்கு விளங்க வில்லை; அவற்றை எனக்கு விளங்கக் கூறுவீராக" என்றான். அதன் மேல் ஜீவகன், "தானம், சிலம், தேவ பூசனை, தவம், என்னும் இந் நான்கும் மேற்கூறிய மனைவியர்; இந் நால்வர் வயிற்றினும் பிறந்த நல்வினையே மேற் கதிக்குக் கொண்டு போகத் தக்க நற் புதல்வன்; அவனைப் பெற்றாரே பிள்ளைப் பெற்றவராவர்; அல்லாதார் புத்திரப் பேறற்றவராவர்; அவர்கள் பெற்ற மற்றப் பிள்ளைகளும் புத்திராாக மாட்டார். இனி மேற் கூறிய தானம் முதலியவற்றின் விவரங்களையுங் கூறுகின்றேன் கேள்: ஐம் பொறிகளையும் வென்று துறவு பூண்டார்க்கு வேண்டியவற்றைச் சந்தோஷித்துக் கொடுத்தலே தானமாகும்; தேன், மது, ஊன் முதலிய கெட்ட வஸ்துக்களை உண்ணாது நீக்குதலே சிலமாம்; கடவுள் பாதத்தைப் பூ முதலியவற்றால் அலங்கரித்து அருச்சித்தலே பூசனையாம்; பூரணையிலும் அமாவாசையிலும் அஷ்டமியிலும் பட்டினியிருந்து இடைவிடாது ஒழுக்கத்தைக் காத்தலே தவமாம். இந் நால்வரும் மனைவியராக, இவனை மகனாக உடையார் சுவர்க்கத்திற்சென்று இந்திராாகி அவ் வீட்டை யாண்டு பின்பு சக்கரவர்த்திகளாய்ப் பூமிமுழுவதையும் ஆட்சி புரிந்து கடவுளுக்குப் பூசனைகளை நடத்திப் பின்பு மோக்ஷ வீட்டை யடைதல் நிச்சயம். மேற்கதிக்குச் செல்லும் கதவைத் திறக்கும் தாள் கடவுள் பாதமே யாம்; அத் தாளையுடைய அவனைத் தேறாதார்க்கு, பொருளில்லார்க் கிவ் வுலகத்தின்ப மில்லாதது போல, நல்வினை கூடாது. சுற்றத்தார் இருக்கு மூருக்குச் சென்றாலும் மனி

தர் பொதி சோறு கைக்கொள்ளாமற் போக மாட்டார்கள்; அப்படியிருக்க, உறவின ரொருவரு மில்லாத ஒரு க்கு யமன் அவர்களைக் கட்டிக் கொண்டு செல்லுங் காலத்தில் உதவும்படி நல்வினையாகிய கட்டுச் சோற்றை அவர்கள் தேடிக்கொள்ளார்; அவர்கள் மதியீனத்தை என்னென்று சொல்வது? 'பேராசையாலும், கள்ளாலும், ஊனாலும் பின்னே விளைவது தீவினையே யாம்; ஆதலின், இவை மூன்றையுங் கைவிடுங்கள்' என்று இவற்றை யுடையார்க்குக் கூறினால் அவர் இவ் இழி குணங்களை விடாமல், அங்ஙனம் விட்டு விடும்படி கூறினவர்களைக் கோபித்துக் கொள்வர்; அவர்க்கு எப்போதும் நற்கதி கிட்டாது; மாமிசத்தை விரும்பி உயிர்களைக்கொன்று அவற்றின் தசையைத் தின்று உடம்பை வளர்ப்பவருடைய உடம்பை, பின்பு கழுகும், நாயும், நரியும் தின்னும்; இது தீங்கென்று கூறின் கல்மனத்தாராகிய ஒட்டை மரச் செவியர் கேளார்; உலக வாழ்வே சதமென் றெண்ணிப் பொருள் தேடி முடிப்புக் கட்டி வைத்தவர்கள், தங்களுக்கு மரணங் குறுகி வாய்ப் பேச் சடங்கிய காலத்தில், அப்பொருளைக் கொண்டு எதையோ செய்யும்படி சொல்லக் கருதித் தம் மனைவியரிடத்தே அதனைக் கொண்டு வரும்படி கை குவித்துச் சாடை காட்டினால், அப்பெண்கள் அதனை மறைக்கக் கருதி, 'ஐயோ! நீங்கள் விளாம்பழமா கேட்கிறீர்கள்! இப்போது தங்களுக்கு விக்கல் மேலிட்டிருப்பதால் அதனை உண்ணலாகாது; நான் என்செய்வேன்' என்று கூறியும், இவ்வாறே அம் மதியிலிகள் கேட்ட எல்லாவற்றிற்கும் ஒவ்வொரு மாறுபாடான வார்த்தையை உரைத்தும் அவர்கள்மேல் மிகவும் பற்றுடையவர்கள் போல நடிப்பார்கள். இதனால் அவர்கள், வாயினால் ஒன்றுஞ் சொல்ல இயலாமல் வாதனைப்பட்டிறப்பார்கள்; இக்கதி நேர்வதற்கு முன்னே மனிதர்கள், தம்மிட

முன்னவற்றைப் பிறர்க்குக் கொடுத் துண்ண வேண்டும்; இன்னும் சமுசார பந்தத்தி லகப்பட்டோர் பிறவித் துன் பத்திலகப்பட்டு வெவ்வே றுடலைக் கொண்டு திரிவர்; அதனை விட்டோர் தேவராய்ச் சுவர்க்கத்தை ஆள்வர்" என்று எல்லா நீதிகளையும் அவனுக்கு விளங்கக் கூறினன். அதன்மேல் அவன் ஜீவகனை வலமாக வந்து வணங்கி அவ னிடம் விடை பெற்றுக் கொண்டு போயினன்.



## அத்தியாயம்—11

## கனகமாலை திருமணம்

ஜீவகன், அவ்வாறு வழிப்போக்கனுக்கு நீதி கூறி அவனை யனுப்பிய பின்பு, வழி நடந்து மருத நிலத்தைக் கடந்து, மயில்கள் ஆடுகின்ற வேடுவர் குடிசைகள் சூழ்ந்த குறிஞ்சிக் காட்டிற் புகுந்தான். அங்கே காயா, கோங்கு, மாவம் முதலிய மரங்கள் செழித்து மலர்ந்திருந்தன. சந்தன மரங்களிலுள்ள தேனிறாலை வரையாடுகள் தாவி மிதித்துச் சிதைத்தலினாலே அதிலிருந்து வடிந்த தேனானது மலையில் வழிந் தொழுகிக்கொண் டிருந்தது. மலையில் மேகங்கள் சூழ்வனவும் நீங்குவனவுமா யிருந்தன. அதிற் பாயும் அருவிகள் முழவு போல முழங்கிக்கொண் டிருந்தன ; அந்நாதத்திற்கு இசைய வண்டுகள் பாடின ; மயில்கள் ஆடின. அங்கே இறுங்கு, தினை, யானையின் விலாவெலும்புபோன்ற காய்கள் செறிந்த குலையை யுடைய அவரை, அருவியால் விளைந்த ஐவன நெல், கரும்பு, வாகு, எள்ளு, பயறு, உழுந்து முதலியவைகளும், இன்னும் எண்ணிறந்த உணவுப் பொருள்களும் நிறைந்து கிடந்தன. இன்னும் அவ்விடத்தில் வேடுவ மகளிர், யானைத் தந்தத்தாற் செய்யப்பட்ட உலக்கையாலே பாறையில்தோண்டப்பட்ட நில வுரலில், இடித்த அவலையும், தேனையும், பழத்தையும், தினைமாவையும் ஒருங்கே குவித்துக்கொண்டு பசியால் இளைத்து வந்தவர்களுக்கெல்லாம் கொடுத்து மகிழ்பவர்களா யிருந்தார்கள். ஜீவகன் இத்தகைய குறிஞ்சி நிலத்தின் வளங்களை யெல்லாம் பார்த்துக் கொண்டே சென்று முல்லை நிலத்தை யடைந்தான்.

அங்கே முல்லைக் கொடிகள் செழித்துக் குரவ மரங்களிலும் கொன்றை மரங்களிலும் படர்ந்திருந்தன; காந்தள் மலர்கள் விளக்குகளைப்போல் அலர்ந்திருந்தன; வண்டுகள் குருந்த மரத்திற் சார்ந்து அதன் புஷ்பத்திலுள்ள தேனைப் பருகி ஆரவாரித்தன; இந்திர கோபப் பூச்சிகள் பயிர்களின் மேலே பரவி நிறைந்திருந்தன. கோவலர் ஊதும் வேய்ங்குழலின் ஓசை எங்கும் பரந்திருந்தது; பசுக்களின் கழுத்திற் கட்டப்பட்ட மணிகள் சப்தித்துக் கொண்டிருந்தன. இவற்றையெல்லாம் பார்த்துக் கொண்டே ஜீவகன் முல்லை நிலத்தையுங் கடந்து, நாற் றிசையிலும் வழிந்து அருவிகள் பாய்கின்ற வனகிரியைக் கண்டு அதற்கு முன்னே தோன்றிய ஒரு சோலைக் குள்ளே புகுந்தான்.

அச் சோலையில் வண்டுகள் ஒலிக்கின்ற மரங்களாற் சூழப்பட்ட சுனை யொன் றிருந்தது. ஜீவகன் அதனருகே சென்று இருந்தான். சிறிது நேரம் இருந்து களை தீர்ந்த பின், அவ் விடத்தை விட்டு நீங்கி வனகிரியின் மேலேறி ஆங்குள்ள ஸ்ரீ கோயிலைக் கண்டு வணங்கிக் கடவுளை அருச்சித்துத் துதித்துப் பின்னர் அம் மலையைவிட் டிறங்கி, அதற் கப்பா லிருந்த பாலை வனத்தைக் கடந்து பத்திம தேசத்தை அடைந்தான். அந் நாடானது, கரும்பைக் குறுகத் தறித்துப் போட்டு ஆட்டப்படுகின்ற கரும் பாலைகளாலும், குவளை, அல்லி, தாமரை முதலியன மலர்ந்து அவற்றில் அன்னங்கள் நித்திரை செய்கின்ற தடாகங்களாலும், மந்திகள் மரங்களில் ஏறிப் பல கனிகளை உதிர்க்கின்ற சோலைகளாலும், யானை மறையும்படி வளர்ந்த செந்நெற் கதிரையுடைய வயல்களாலும் சிறந்து விளங்குவதாயிற்று.

ஜீவகன், அந் நாட்டைக் கடந்து நன் னிமித்தத்தோடு அதற்குத் தலை நகரைச்சேர்ந்து, புற நகரினின்றும் எதிரே வந்த மணமகனொருவனிடம், அந் நாட்டின் பெயரையும், நகரத்தின் பெயரையும் வினவினான். அவன், "இந் நாடு மத்திம தேச மென்னும் பெயரை யுடைத்தாம்; இந் நகரத்தின் பெயர் ஏமமாபுரம்" என்று கூறி, மேலும் ஜீவகனை நோக்கி, "ஐயனே! இத் திசைக்கு நீ புதியன் போலும்?" என, ஜீவகன் "ஆம்" என்றான். அதன் மேல் அவன் ஜீவகனிடம், "நண்ப! நீ என்னோடு இங்கே முதலில் வார்த்தை யாடிய படியால் நீ எனக்குச் சிநேகனாயினை; போசன வேளையு மாயிற்று; ஆதலின், என் வீட்டில் தங்கி உணவுண்டு செல்வாயாக" என, ஜீவகன், "இந் நகரிற் புகுந்தபின் நான் உன்னைப்பார்ப்பேன்" என்று அவனுக்குக்கூறி விட்டு மிக்க சிறப்பினையுடைய அந்நகரிற் புகுந்து, மண்டபத்தைப் போன்ற ஒரு பளிங்கறை சேர்ந்த ஒரு பொய்கையின் பக்கத்திலே யுள்ள மாமரத்தின் நிழலில் உட்கார்ந்தான் அந்தப் பொய்கையில், அன்னப் பறவைகளும், வேறு சில பக்ஷிகளும், இனங்களோடு கூடி மகிழ்வுடன் விளையாடிக் கொண்டிருந்தன. அவற்றைக் கண்டதும் ஜீவகனுக்குத் தன் மனைவியாகிய தத்தையின் நினைவு வந்தது. அங்ஙனம் ஞாபகமுண்டாகவே அவன் விசன முற்று, "அந்தோ! நம் ஆருயிர்த் துணைவியாகிய தத்தை நாம் சிறைப் பட்டுச் செல்லுங் காலத்தில் மிகுந்த துயர்க் கடலுள் மூழ்கி யிருந்தாளே; பின் ஒருவரு மறியாமல் நாம் அந் நகரை விட்டு நீங்கி வந்தோமே; இப்போது நாம் இன்ன விடத்தி லிருக்கின்றோ மென்பதை அவள் உணரமாட்டாளே; நம்முடைய பிரிவால் அவள் என்ன பாடு படுகின்றாளோ? ஒருவாறு உயிரை விட்டிருப்பாளோ!" என்று மனங் கலங்கினான். அங்ஙனம் கலங்கிப் பின்னும், "தத்தையோ

விஞ்சையில் வல்லவள்; அதனால், 'எதிரியை வெல்வதற்குப் பன்னிரண்டு மாதங்கள் கழிய வேண்டும்' என்று அப்போது ஆசிரியர் கூறியதையும், மற்றக் காரியங்களையும் உணர்வாள்; ஆதலால், தான் உயிர் விடாமல் இருப்பதோடு மற்றையரையுந் தேற்றுவாள்; நாம் விரைவில் ஆக வேண்டிய காரியங்களை முடித்துக்கொண்டு நகர்க்கு ஏகிப் பகை முடிக்க முயல வேண்டும்" என்று மனந்தேறி அப் பொய்கையி லுள்ள விநோதங்களைப் பார்த்துக்கொண் டிருந்தான்.

அப்படி யிருக்கும்போது, அந் நகர்க்கு அரசனாகிய தடமித்தனுக்கும் அவன் மனைவியாகிய நளினைக்கும் பிறந்த விஜய னென்னும் இராஜகுமாரன் ஆங்குச் சென்று ஜீவகனைக் கண்டு, இராஜகுடும்பத்தார் தவிர அன்னியர் வரமுடியாத அவ்விடத்தில் அவன் வந்திருப்பதைப் பற்றி ஆராயத் தொடங்கி, " எவனோ இங்குவந் திருக்கின்றான்; இவ் வூரி லுள்ள அன்னிய ரெவரும் இவ்விடத்தைச் சேரார்; ஆதலின், இவன் இவ் வூரினனல்லன்" என்று துணிந்து அவன் சமீபத்திற் போய், அவனை நோக்கி " நீ எந் நாட்டினன்? நின் ஊர் யாது? பெயர் என்ன?" என்று வினவினான். ஜீவகன் தன்னுடைய ஊர், பெயர் முதலியவற்றை வெளிப்படையாகக் கூறாமல், பொருளால் மட்டும் அவை விளங்கும்படி வேறொரு வகையாக மாற்றிக் கூறினான்.

விஜயன், ஜீவகனை அவன் வார்த்தைகளால் ஒரு சிறந்த வீரனென் றெண்ணி, " இவனை நம் தந்தையினிடத்தே அழைத்துச் செல்ல வேண்டும். அதற்கு இவன் சம்மதிப்பானோ என்பதை அறிவோம்" என்று ஜீவகனை நோக்கி, " மிக்க கீர்த்தியை யுடையவனே! நீ என்னுடன் நட்புக்

கொண்டா யாதலின், இந் நாடு உன்னுடைய நாடு ; இவ்வூர் உன்னுடைய ஊர்; யாங்களெல்லாம் உன் சுற்றத்தார்" என்று உபசார வார்த்தைகள் கூறினான். ஜீவகனும் "நான் உனதிஷ்டப்படியே உன் உறவை ஏற்றுக் கொள்கிறேன்" என்றான்.

அதன்மேல் விஜயன், அங்கே ஒரு மாமரத்தி லிருந்த கனியை உண்ணக் கருதி அதன்மீது ஒரு கணையை ஏவி, அஃது அதனை வீழ்த்தாது தவறிப்போனமையால் அவ்வெண்ணத்தை விடுத்து நின்றான். அது கண்டு ஜீவகன் அக் கனிமீது ஓர் அம்பைத் தொடுத்து அவ் வம்புடனே அதனை வீழ்த்தி ஒரு வில் தூரத்தில் வரும்பொழுதே எய்த அக் கரத்தினாலேயே பிடித்துக் கொண்டான். அவனுடைய வில்லின் திறத்தைக் கண்ட விஜயன் உடனே அவனைத் தழுவிக்கொண்டு, "நம்ப ! நீ வில்லைப் படைத்த கடவுளோ ; இராமன் வில் வளைத்து மாராமர மேழையும் உருவ அம் பெய்தான் என்பதை நான் பிறர் வார்த்தையாற் கேட்டேனே யன்றி நேரிற் கண்டதில்லை ; எனினும், அத்தகைய வில் வல்லமையை இப்பொழுது உன்னிடம் நேரிற் கண்டேன்" என்று புகழ்ந்து, அவ் வள்ளலை அரண்மனைக்கு அழைத்துச் சென்று, அவனுக்கு வழி நடந்ததால் உண்டான வருத்தத்தை உணவு முதலியவற்றாலே தீர்த்து, தடமித்தனுக்கு அவனுடைய திறமைகளை யெல்லாங் கூறினான்.

தடமித்தனும் ஜீவகனை உற்று நோக்கி, அவனுடைய முழங்கைக்கு முன் யானைத்தோல் போலக் காழ்ப்பேறிச் சுண்ணம்பை புரைத்தாற்போன்று வெண்மையாய்ச் சிறந்தினை யொத்த சிலைத் தழும்பு மூன்றுவிரல் நீளத்தில் இருக்கக் கண்டு, "இவன் விற்றொழிலுக்கு அரசன் ; 'வில் வல்லாரில் துரோணாசாரியருக்குப் பின்பு விஞ்சைய ராலகி

னல்லது மண்ணிடத்தே ஒருவரு மில்லை' என்று ஜனங்கள் கூறுவார்கள்; அவர்கள் வாய் ஒடுங்கும்படி இவ் வேலான் தோன்றினான்" என்று அவனைப் புகழ்ந்து அவனுக்குப் பல உபசாரவார்த்தைகள் புகன்று, மீண்டும் அவனை நோக்கி, "வில்வீர! நான், உன்மீது மிக்க விருப்புடையனாயி னேன்; நம் நேயம் என்றும் வளர்வதாக; என்புத்திரனாகிய விஜயன் விற்றிற மறியான்; அதற்குப் புதியன்; இவ னன்றி இன்னும் என் புதல்வர் நால்வருளர்; அவர்களும் கல்வி நிரம்பாதவர்; ஆதலின் நீ இவர்கட்கு வில்வித்தை முதலிய கல்விகளைக் கற்றுக் கொடுத்தல் வேண்டும்" என்று கூறினான். ஜீவகன் அதற்கு உடன்பட்டான். விஜ யன் முதலியவர்களும், பாதாரவிந்தைபோல அவன் பாதங் களைப் பொருந்தி, விருப்பத்தால் நிழல்போல அவனை விட்டு நீங்காராய், அவன் நினைத்தவற்றை ஒரு கணத்தில் முடித்து, அவனிடத்தே அமைந்து கல்வி கற்று வந்தார் கள்.

அங்ஙனம் கற்கின்ற நாளிலே ஜீவகன் அவர்கட்கு வெவ்விய அம்பையும் இருப்பு நாராசத்தையும் எய்யும் விதங்களும், தம் மேல் வரும் பாணத்தை அம்பாலே விலக்கும் உபாயமும், பகைவர் அம்பு பெய்யுங் காலத்தில் கீருவியாலே தம்மை மறைத்துக் கொள்ளும் தந்திரங்களும், பகைவர் அம்பைப் புறமாக்கித் தம் அம்பைச் செலுத்து மாறும், தம் மேலே யானை வந்தபோது அதன் கா லிடையே புகுந்து மறையும் விதமும், அது கையாலே வளைத்த பொழுது அதன் கைக்கு நடுவே உடம்பு பிறழும் படி செய்யும் தந்திரங்களும், அது வாலாலே வீசினால் அவ் வீச்சுப் படாதபடி போய் அதன் காலிடையிற் புகும் விதமும், அது தந்தங்களால் குத்திக் கொல்லப் பாயும்

போது கொம்பு இரண்டிற்கும் நடுவே விலகிக்கொள்ளும் சாமர்த்தியமும், தேர்ப் போரும், குதிரைப் போரும், வாகனங்களி லிருந்து ஒன்றற் கொன்று உதவுத லறிந்து அவற்றைச் செலுத்தி வாள் வில் எறிகோல் முதலிய ஆயுதங்களைச் செலுத்தும் விதங்களும், தாம் படையினு ளன்றித் தனியே நின்ற இடத்தை ஒழ்ந்திப் பார்த்துப் பகைவர் படை, மேற் சென்ற காலத்து அப் படையைக் கெடுக்கும் தந்திரங்களும் கற்றுக் கொடுத்தான். அவர்களும் இத் தொழில்களில் வல்லவ ராயினர்.

அங்ஙனம் பிள்ளைகள் போர்த் தொழிலிற் சிறந்த தன்மையைச் சிலர் கடமித்தனுக்குச் சொன்னார்கள். உடனே அவன் அவர்களைப் பரிக்ஷிக்க விரும்பி, வரவழைத்துத் தாங்கள் கற்ற தொழிலைக் காட்டும்படி அவர்களுக்குக் கட்டளையிட்டான். அதன்படி விஜயன், கதம்பன், கனகன், அசலகிர்த்தி, சேனன் என்னும் ஐந்து குமாரர்களும், சூழ்ந்துகொண்ட மழையையும் தூளியையும் ராக்கூடங் கட்டி நீக்கிக் காட்டியும், பின்பு காதின் குண்டலத்தைத் தொடும்படி வில்லை வளைத்து அம்பாலே நூல் பிளக்க எய்தும், வாளாலே நூல் பிளக்க வெட்டியும், வேலாலே நூல் பிளக்க எறிந்தும், மின் திரியுமாறு போலச் சாரியை திரிந்தும் தங்கள் யுத்தப் பயிற்சியைக் காட்டினார்கள். அப்போது, 'விற் போருக்கு விஜயன் அருச்சுனனே' 'வேற் போருக்குக் கதம்பன் முருகனே,' 'வாட் போருக்குக் கனகன் பரசுராமனே' 'யானைப் போருக்கும் தேர்ப் போருக்கும் அசலகிர்த்தி * அசலனென்னும் வீரனே', 'குதிரைப் போருக்குச் சேனன்

---

* அசலன்-சச்சந்தனுடைய சேனபதி.

சிறந்த நகுலனே' என்று அவர்கள் ஒவ்வொரு வித்தையிலும் சிறந்தவராக எல்லாராலும் புகழப்பட்டார்கள்.

தடமித்தன், மக்கள் கல்வித்திறத்தைக் கண்டு மகிழ்ந்து, அவர்களை அங்ஙனம் சிறக்கச் செய்த ஜீவகனுக்குத் தன் பெண்ணைக் கொடுத்து அவனை அவ்விடத்திலேயே வைத்துக்கொள்ளக் கருதி, "இவர்களுக்கு இக் கல்விகளைக் கற்றுக்கொடுத்தவன் அரசனாகவோ அந்தணனாகவோ இருத்தல் வேண்டும்; இவ் விரண்டு சாதியுமொழிந்த சாதியிலுள்ளவர்க்கு இக் கல்வி யுண்டாகாது ; ஆதலால், நான் நீங்காததோர் தளையிட்டு அவனை இங்குச் சிறைசெய்வேன் ; இப்பொழுதே அவனைக் கொணர்மின்" என்று பணியாளர்க்குக் கட்டளையிட்டான். அங்கிருந்தவர்களெல்லோரும் அரசனுடைய உள்ளக் கருத்தை யுணராமல் அவன் கூறிய வார்த்தைகளால் மெய்யாகவே ஜீவகனை அம் மன்னன் சிறைசெய்யப் போகின்றானென்று நினைத்து, "அந்தோ ! கல்வியும் மனிதர்க்குத் தீங்கையே செய்கின்றது" என்று வருந்தி நின்றார்கள். அத் தருணத்தில் அரசனால் ஏவப்பட்டவர்கள் போய் ஜீவகனை அழைத்து வந்தார்கள்.

ஜீவகன் வந்ததும், அரசன் அவனை வேறாக அழைத்துப்போய்த் தனியிடத்திருந்து அவனை நோக்கி, "போர்க் களிற்றை நிகர்த்த தோன்றலே ! இம் மண்ணுலகும் அவ் விண்ணுலகும் வந்து வணங்க எல்லாச் சிறப்பினையும் நீ எனக்களித்தாய்; நானும் அவற்றைப் பெற்று இந்திரனானேன்; காளை ! யான் இதற்குச்செய்யத் தக்க கைம்மாறு இன்னதென்றறியேன் ; ஆயினும், என் பாவை கனகமாலையை உனக்குரியவளாக்கக் கருதினேன்: இதுவே யான்செய்யும் கைம்

மாரும்; இதனை நீ ஏற்றுக் கொள்வாயாக" என்ருன். ஜீவகன் தனக்கு இதில் விருப்ப மிருந்தும் அதற்கு இசையாதவன் போன்று மறுத்துப் பேசினுன். அவ்வாறு பேசவே அரசன் அவன் கரத்தைப் பிடித்துக்கொண்டு, "இளவலே! அப் பெண் பிறந்த பொழுது உனக்கேயுரியவளாவளென்று சாதகம் கணிக்கப்பட் டிருக்கிறது; ஆதலின், நீ இம்மணத்தைத் தடை செய்யாதே" என்று கூற, அதன்மேல் ஜீவகன் அதற்கிசைந்தான். பின்னர் அரசன் தன் மகளை ஜீவகனுக்கு மணஞ்செய்து கொடுக்கப் போவதை எல்லோருக்கும் அறிவித்தான். அதனைக் கேட்ட ஜனங்கள், "இதைத்தான் அக்குமரர் அக்குர்கிறையென்று அரசர்முன்கூறினரோ" என்று மகிழ்ந்தார்கள். பிறகு மணத்திற்குரிய நாளை ஏற்படுத்தி நல்ல முகூர்த்தத்திலே தடமித்தன், ஜீவகனுக்கும் கனகமாலைக்கும் கலியாணத்தை நிறைவேற்றினுன். ஜீவகன், கனகமாலையுடனே களிப்புற்று அந் நகரத்தில் வாசஞ் செய்து கொண் டிருந்தான். இது நிற்க.

இராஜமாபுரத்தில் அன்று ஜீவகன் காணுமற்போன பின், அவனுக்கு இளையோனுகிய நந்தட்டன், சந்திரனை யிழந்த உரோகிணிபோல மயங்கி, ஜீவகனுடைய இருப்பிடமறியானுய்ப் பற்பல நாடுகளிலுஞ் சென்று தேடி அவனைக் காணுமல் வருந்திச் சில மாதங்கள் கழிந்த பின்னர்,ஜீவகன் ஏமமாபுரத்தி லிருக்கும் போது, திரும்பி வந்து குணமாலை வீட்டிற்குப் போய், வருத்தமுற் றிருந்த அவளைத் தேற்றி விட்டுக் காந்தருவதத்தை யிருக்குமிடத்திற்குச் சென்ருன். அப்போது அவள் வீணையை மீட்டி, தன் நாயகன் பிரிந்த வருத்தத்தால், "ஐயோ! நாத! என் நாளெல்லாம் துக்கமாகவே கழிகின்றது; எனக்குத் துக்கமற்ற நாள் இனி எப்போது வருமோ: எனக்கோ தினமும் நித்திரை பிடிக்க

வில்லை ; என் கண்களெல்லாம் மருட்சியடைந்திருக்கின்றன; உம்மை நான் காணும் நாள் எந்நாளோ ? என்னுடைய வாழ்க்கை பயனற்றதாகும்; நன்மை முற்றும் இழந்த நான் எதற்கோ உயிர் வைத்திருக்கின்றேன்" என்ற துக்கமான வார்த்தைகள் அமைந்த சோகப் பாடலைப் பாடிக் கண்ணீர்விட்டழுது, அவ் வருத்த மிகுதியினாலே பஞ்சணையிற் சாய்ந்து முகம் வாடியிருந்தாள்.

நந்தட்டன், இந் நிலைமையி லிருந்த அவளைக் கண்டு, வணங்கித் துக்கமிகுந்த முகத்துடனே அவளுக்கு முன்னே தனக்கும் அவளுக்கு மிடையில் ஐந்து வில் நீளமிருக்கும்படி விலகித் தலைகுனிந்து தரையைப் பார்த்தவண்ணமாக நின்றான். காந்தருவதத்தை அவனைத் தன்னுடைய மைந்தனைப்போல நினைத்து அன்பு மிக்கவளாய், "வேலாய்!இங்கே வந்து இருப்பாயாக" என்றாள். அதன்மேல் அவன் மூன்று விற்கிடை நீளத்திற் போய் உட்காராமல், அவளுடைய வாடிய முகத்தையும், மாசடைந்த மேனியையும் நோக்கானாய் வணங்கினபடியே அவள் பாதச் சிலம்பை மாத்திரம் பார்த்து, "அன்னையே! அடிகள் எங்குளார் ? அப் புண்ணிய புருஷர் பொன்றிவிட்டாரோ ? அங்ஙனமாயின், நீ தபஸ்வினியாய் நோன்பைக் கைக்கொள்ள வேண்டும், இன்றேல் தீப்பாய்ந்திறத்தல்வேண்டும் : இவ் விரண்டுமின்றி நீ அழகைச் சுமந்துகொண் டிருக்கின்றாயே ; இப்படி யிருப்பதை யான் எங்குக் கண்டதில்லை" என்று கூறி நெருப்புப்பற்றிய கற்பகம்போல அன்பாகிய தீயின் வெம்மையாலே வாடிக் கண்களில் நீர் ததும்ப மனங்குன்றி நின்றான். அவன் தத்தையை நிமிர்ந்து பார்க்காமையால் அவளது வாட்டத்தை யுணராமல் இவ்வாறு கூறினான்.

நந்தட்டன் இவ்வாறு கூறிய வார்த்தைகளைக் கேட்ட வுடனே தத்தை, 'நம்முடைய வாட்டத்தை உணராமை யால் இவன் இவ்வாறு கூறுகின்றான்; தூர திருஷ்டியை உண்டாக்கும் மதிமுகம் என்னும் வித்தையை அறிந் திருக்கின்ற நாம் இனி வருந்துவது தகுதியன்று; அதன் மூலம் நம் நாயகரது நிலைமையைத் தெரிந்து இவனுக்குக் கூறுவோம்' என்று கவலையை நீக்கி அம் மந்திர வுதவி யால் தன் நாயகன் பிறமணங்களை முடித்துச் சௌக்கியத் துடனிருப்பதை யுணர்ந்து, நந்தட்டனை நோக்கி, "வில் வல்லாய்! நான் வேண்டிய அடிமைத் தொழிலை நீ செய்யச் சம்மதிப்பா யாயின் உன்னுடைய தமையனாரை இப் பொழுதே காண்பாய்" என்று புன் சிரிப்போடு விளையாட் டாகக் கூறினாள். அது கேட்டு நந்தட்டன், "யான் இம்மை யில் மட்டுமன்று, எழுமையினும் தங்களடிக் கடிமையாகின் றேன்" என்றான். அதன்மேல் தத்தை ஒரு வித்தை யை ஓதித் தன் முகத்தைத் தடவினாள். அவ் வித்தை யானது ஜீவகன் இருந்த இடத்தை நந்தட்டனுக்கு விளக் கிற்று. அப்போது ஜீவகன் ஏமமாபுரத்திலே கனகமாலை யுடன் அமளிமேல் சந்தோஷமாக வார்த்தை யாடிக் கொண்டிருக்க அத்தோற்றத்தை நந்தட்டன் கண்டான். அங்ஙனம் தமையனை எதிர்முகமாகக் காணவே அவன் மகி ழ்ந்த முகத்தனாய்த் தமையனடியினைத் தொழுது மனங் குளிர்ந்து அதிசயித்து நின்றான். அதன்மேல் தத்தை, தான் செய்த வித்தையை மாற்றினாள். நந்தட்டனு க்குத் தோற்றிய ஜீவகன் தோற்றம் மறைந்துவிட் டது. உடனே நந்தட்டன், "நான் இப்பொழுதே தமைய னடியைக் காணவேண்டும்; அதற்கு நீ அருள்வாயாக" என்று தத்தையின் அடிகளில் இறைஞ்சினான். காந்தருவதத்தை, ஜீவகன் அணிவன போன்ற அணிகளையும், ஆடை களையும், படைக்கலங்களையுங் கொண்டுவரும்படி ஏவல்

செய்வோர்க்குக் கூறி அவர்கள் கொண்டுவந்த பின் அவற்றை நந்தட்டன் அணியும்படி செய்து தன்னுடைய மந்திர பலத்தால் அவனிடத்தே ஜீவகனுடைய வடிவத்தை நிருமித்து, அவன் ஜீவகனைக் காணுமளவும் அவ் வடிவ மிருக்கும்படி ஏற்படுத்தி, ஒரு பரிசுத்தமான இடத்தைச் சந்தனத்தால் மெழுகி, சுற்றிலும் மலர்மாலைகளைத் தொங்க விட்டு, அகிற் புகையைப் புகைத்து, வேண்டிய பூசனைகள் புரிந்து, அதன் மத்தியில் ஓர் படுக்கையிட்டு அதில் நந்தட்டனைப் படுக்க வைத்து ஆகாச காமினி என்னும் மந்திரத்தை ஓதினள். உடனே ஒரு தெய்வம் அவனை மயக்கி யெடுத்துக் கொண்டு போய் ஏமமாபுரத்தி லுள்ள இராஜ மாளிகைக்குள்ளே வைத்து விட்டது.

அங்ஙனம் வைத்த பின்னர், மந்திர பலத்தால் நித்திரை கொண்டு மயங்கிக் கிடந்த நந்தட்டனை, கனகமாலையின் தோழியாகிய வசந்தரி யென்பாள் கண்டு, ஜீவகனென்றே நினைத்து, "ஐயோ! சுவாமி என் இவ்வாறு வெறுந் தரையிற் படுத்திருக்கின்றனர்; கனகமாலை இதைச் சிறிதும் கவனித்திலள் போலும்" என்று கனகமாலையைக் கோபித்தற்கு அவளிடத்தே சென்றாள். அங்கே ஜீவகனிருந்தான். அவனைக் கண்டதும் அவள் அதிசயித்து, 'இஃது ஏதோ மாயமா யிருக்கின்றது' என்று திரும்பி விஜயனிடம் போய்த் தான் கண்ட அதிசயத்தைக் கூறினாள். விஜயன் உடனே ஜீவனுருக் கொண்டிருந்த நந்தட்டனிடம் வந்து, அவன் ஜீவகன் போலவே யிருக்கக் கண்டு அதிசயித்து, அவனை நோக்கி, "நீ யார்?" என்று வினவ, அவன் அத்தெய்வ சக்தியால் மறுமொழி கொடாதிருந்தான். அதன்மேல் விஜயன் ஒன்றுந் தோன்றாதவனாய்த் தன் மைத்துனனாகிய ஜீவகனிடம் சென்று, வசந்தரி

தன்னிடம் கூறியதையும், தான் அவனைக் கண்டு யாரென்று வினவியதையும், அவன் மறுமொழி கொடாதிருந்ததையுங் கூறி,மேலும், "அவன் உன்னைப் போன்றே யிருக்கின்றான்; அவன் யாவன்? மறுமொழி பேசாதிருத்தற்குக் காரணமென்னை?" என்று வினவினான்.

விஜயன் கூறியவற்றைக் கேட்டு ஜீவகன், "தத்தையின் மந்திர பலத்தால் நந்தட்டனே நம் உருப்பெற்று வந்திருப்பான்" என்று மகிழ்ந்து அப்பொழுதே அவனிடம் சென்றான். ஜீவகனைக் கண்டதும் நந்தட்டன் தருமனை நெடுநாட் பிரிந்திருந்து கண்ட அருச்சுனனைப் போல அவனெதிரே வீழ்ந்து தொழுதான். அங்ஙனம் தொழுத அவன் தாமரைத் தடந்தை யொத்தான்; ஜீவகன் அவனுடைய முகத் தாமரை முதலியவற்றை மலர வைத்ததாலே சூரியனை நிகர்த்தான். அதன்மேல் ஜீவகன், அன்பின் மிகுதியால் நந்தட்டனை மும்முறை தழுவிக்கொண்டு தனக்குற்ற வருத்த மெல்லாந் தீர்த்தான். அங்ஙனம் தீர்த்த பின் நந்தட்டனை நோக்கி, "சகோதர! நமக்குத் தீவினை வந்து சேர்ந்ததனாலே, குணமாலையின் ஓர் உயிரை நான் காப்பாற்றப் போய்ப் பல உயிர்க்குந் தீங் குண்டாகும்படி கட்டியங்காரன் பகையைக் கொண்டு அவனால் சிறை செய்யப்பட்டு, நீங்கள் அறியாமல், உங்களை விட்டுப் பிரிந்து இவ்வாறு உங்களுக்கு வருத்தத்தைச் செய்தேன்; ஆயினும் இனி எல்லோரும் ஒன்று சேருங் காலம் சமீபித்து விட்டது; ஆதலால் நீ வருத்த மொழிவாயாக" என்றான்.

அது கேட்டு நந்தட்டன், ஜீவகனை நோக்கி, "அண்ணா! இவ்வாறு துன்பமுற்றவர் நீர் மாத்திரமல்லீர்; முன்

னுள்ள இராமனுக்கும் இஃதுண்டு ; ஆயினும், அவன், இவ்வாறு தம்பியைக் கை விடாமல், கேடடைந்த காலத்தில் அவனையுந் தனக்கு உதவியாகக் கொண்டான். உடன் பிறந்த பெண்களைப் போல நான் உமக்கு உதவாதிருந்து வருந்தும்படி நீர் என்னைக் கை விட்டீர்; முற்பிறப்பில் நான், தாய் தந்தையர் முதலிய குரவரைப் பேணுதிருந்திருப்பேன் ; அப் பாவத்தினாலேயே இப்போது உம்முடைய பாதத்தை விட்டு நீங்கி இவ்வாறு வருத்த முற்றேன்" என்று அவனுடைய பாதங்களைச் சென்னிமேற் சூடி மனம் நொந்தழுதான். அது கண்டு ஜீவகன், மனங் கரைந்து, "அன்பிற் குரிய தம்பி! நடந்து போனதைப் பற்றி இனி நீவருந்தாதே" என்று அவன் கண்ணைத் துடைத்து அவனைத் தேற்றிக் கனகமாலையிடம் அழைத்துச்சென்முன். நந்தட்டனும் அவளைக் கண்டு வணங்கினான். அவள் ஜீவகனை நோக்கிக் குறிப்பினாலே, "இவன் யார்?" என்று வினவ, ஜீவகன், "உன் மைத்துனன்" என்முன். அவள், 'இத்தகைய மற்றத்தை நான் எழுபிறப்பிலும் பெறுவேனாக' என்று மகிழ்ந்து, அவனும் ஜீவகனும் எதிரேயிருந்து உண்ணும்படி நந்தட்டனுக்கு விருந்திட்டாள்.

அவ் விருந்து நடந்த பின்பு ஜீவகனும் நந்தட்டனும் தனியிடத்தைச் சேர்ந்தார்கள். அப்போது ஜீவகன், தம்பியை நோக்கி, "என்னைக் காணுமையினாலே தாய் தந்தையர் எவ்வாறு வருத்த முற்றார்கள்?" என்று முதலிற் கேட்டுப் பின்பு, "தோழன்மார் செய்கைகளை யெல்லாங் கூறக்கடவாய்" என்று சொல்ல, நந்தட்டன், "அன்று நீர் சிறைப்பட்டுச் செல்லுங் காலத்தில் உம்மை மீட்க வேண்டுமென்ற எண்ணத்துடனே தொடர்ந்து வந்த நாங்

கள் செவ்வானங்கொண்ட அந்தி நேரத்திலே, மிகுந்த மழையுங் காற்றுஞ் சூழ்ந்து கொள்ளவே மயங்கி நின்று, அம் மழை விட்ட பின்பு உம்மைக் காணாமையினாலே அவ் விடத்தினின்று நீங்கி நகருக்குத் திரும்பி வந்தோம்; அதன்மேல் பதுமுகன், 'இனிமேற் செய்யுங் காரியத்தை என்னுங்கள்' என்றான். புத்திசேனன் கோபித்து, 'இப் பொழுதே கொடியனாகிய கட்டியங்காரனைக் கொன்று அவனுடைய நகரையும் அழித்துப் பின்பு ஜீவகனைத்தேடிக் காண்போம்' என்றான். திரண்ட தோளையுடைய தேவதத்தன் இடிபோலச்சீறி, 'பகைவனுயிரை யுண்ணுதல் நமக்கு எளிது; இதனை எப்பொழுதும் செய்து கொள்ளலாம்; ஆதலின் நீங்கள்முதலில் நந்தலைவன் இருப்பதையும்இல்லா ததையும் ஆராய்ந்துகொண்டு பின் பகைவனைக் கொல்லத் துணியுங்கள்' என்றான். ஸ்ரீதத்தன், 'புத்திசேனன் கூறிய வாறே முதலிற் பகைவரைக் கொன்று நம் கோபத்தைத் தணிப்போம்; மற்றவைகளைப் பின்னர்ப் பார்த்துக்கொள் வோம்'என்றான்.பதுமுகன் என்னை நோக்கி,'நந்தட்ட! உல கத்திலுள்ளார், தமக்கு நன்மார்க்கங்களைத் தெரிவிப்போர் சொல்லைத் தட்டார்; இவ்வுலகொழுக்க முழுதும் தெரிந்த உனக்கு நான் சொல்லுவதென்? ஆதலால், என் சொல்லை நீ தட்டாது கேள்; நீயும் எங்களைப் போன்று கலங்கி உயிர்விடத் துணியாதே; அங்ஙனம் செய்வாயாயின், தாய் தந்தையராகிய பெரியார்க்குத் துணையாவார் எவருமிலர்; நீ இவ் வருத்தத்தினின்று நீங்கி அவர்க்குள்ள வருத்தத்தை யும் நீக்கி அவர் இருக்குமளவும் அவரைப் பாதுகாத்து அவர் இறந்தால் அவர்க்கு நீர்க் கடன் முதலியவற்றைச் செய்வாயாக; நாங்கள் பகைவரோ டெதிர்த்து ஜெயம் பெறுகின்றோம், அல்லது மடிகின்றோம்' என்று கூறினான். அதுகேட்டு நான், 'உயிருடனே நான் இருக்கக் கூடியவனா

யிருந்தாலன்றே நீ எனக்கு இந்த வார்த்தைகளைக் கூற வேண்டும்; உயிர்வாழுந் தன்மை என்னிடத்தி லில்லை; ஆதலின், இதுகூறவேண்டாம்; என்கண்களே கையாக அவற்றினாலே உமக்கும் நம் தலைவராகிய ஜீவகசாமிக்கும் செய்யும் நீர்க் கடனெல்லாம் செய்து விட்டேன்; இனிக் காட்டுத் தீப்போல பகைவரைச் சூழ்ந்து கொல்வதற்கு எல்லோரும் ஒன்று சேர்ந்து எழுவோமாக' என்றேன். பின்னர், 'ஜீவகன் வாழ்க' என்று ஆர்த்து எல்லோரும் போர்க்கெழுந்தோம்; அப்பொழுது எங்களுக்கு நன்னிமித்த மாம்படி ஒருவன் ஒரு பாட்டைப் பாடினன். அந்தப் பாட்டில், 'இது போர்செய்தற் குரிய பருவமன்று; தலைவன் மீண்டும் விரைவில் இங்கு வருவான்; அப்போது பகைவ ரொழிவார்', என்னும்கருத்து அடங்கி யிருந்தது; அதனல்,நாங்கள் 'ஜீவகனைத் தேடிக் கண்டால் பின்னர்ப் பகைவனை எளிதிற் கொல்லலாம்; இவ் வெளிய காரியம் பின் ஒருகாலத்திலும் செய்யக்கூடியது தான்; இதற்கு இப்பொழுது அவசரமில்லை; ஆதலால் முதலில் தலைவனைத் தேடிக் காண்பதே தகுதி' என்று துணிந்து பற்பல இடங்களிலும் சென்று உம்மைத் தேட ஆரம்பித்தோம்.

"அவ்வாறு தேடப் புகுந்த காலத்தில், யான் சென்று பற்பல மலைகளை ஆராய்ந்தும் உம்மைக் காணுமல் வருந்தித் திரும்பிவந்து குணமாலை மனையைச் சேர்ந்தேன். அப்பொழுது மிகுந்த துன்பத்தை அனுபவித்துக் கொண்டிருந்த அவள் எனக்கு விருந்திட்டாள். நான் இருந்துஉணவுண்டேன்; அங்ஙனம் உண்ணுங்கால், நோயுற்றமயில்போலிருந்த அவள் அணுகி, நீரொழுகுங் கண்ணளாய், என்னை நோக்கி, 'ஐயரே! நம் சாமியின்றி நீர் இங்ஙனம் தனித்திருந்து உண்ணவும் காலம் நேர்ந்த தல்லவா' என்று விம்மி

ளுள். நான் அவ் வருத்தத்துடனே விருந்துண்டு அவளைத் தேற்றி மீண்டேன். அங்ஙனம் மீண்டதும், 'இனிச் செல்வனை எப்படியுந் தேடிக் கண்டு வணங்க வேண்டும்; இன்றேல் உயிர்விட வேண்டும்; இவ்விரண்டி லொன்றை இன்றைப் பொழுதிலேயே முடிப்பேன்' என்று துணிந்து தந்தையார் மனையைச் சேர்ந்தேன்.

"அப்பொழுது அவள் வீணையையெடுத்துமீட்டிஉமது பிரிவு வருத்தந் தோன்றும் பாடல்களைப் பாடிச் சோர்வுற் றிருந்தாள். அவளுடைய உள்ளக் கருத்தை நான் உணராமையால், அவளை நோக்கி 'தலைவரைப்பிரிந்தும் நீ இன்னும் உயிர்வைத்திருக்கின்றாயே; இஃது உன்னைப்போன்ற பெண்களுக்குத் தகுதியாமா?,' என்று அவளுக்குப் பொருந்தாத வசனங்களைக் கூறினேன். அதைக் கேட்ட அவள் என்னை நோக்கி, 'ஐய! நீ வருந்தாதே; நின் தமையன் பாதத்தை நீ சேரும்படி நான் இப்பொழுதே செய்வேன்' என்று சூரியன் அஸ்தமித்த பின்பு, மந்திர பலத்தால் என்னை விடியற்காலத்து இருளிலே இவ்விடத்தே சேர்ப்பித்தாள்'' என்று கூறிப் பின்பு, "உம்முடைய விருத்தாந்தங்களையுங் கூறுவீராக'' என்று சொன்னான்.

அதைக் கேட்டு ஜீவகன், "ஐயனே! நான் அப்பொழுதே பகைவரை ஒழித்துவிட நினைத்தேன்; எனினும், நம் தந்தையார் அது கூடா தென்று தெரிவித்தமையால் அவர் சொல்லால் பிணிப்புண்டு ஒன்றுஞ் செய்ய இயலாமல் மதனன் முதலியவர்கள் சூழச் சென்றேன்; அப்பொழுது நம் சுற்றமெல்லாம் 'வேலேந்திப் புலிக்கூட்டம்போலச் சீறி என் பொருட்டாக உயிர்விடத் துணிந்து நின்றதையும், நீ பகைவரைக் கொல்லக் கோபமுற்று நின்

றதையும், உன்னைச் சூழ்ந்து நம் தோழர் கொதித்து நின் றதையும், கண்டேன்; அங்ஙனம் கண்டும், தந்தையார் போர்க்கு அனுமதி கொடாமையின் நான் உம்மைப் போர்த்தொழிற்கு ஏவாமல் மற்றொரு பக்கம் நோக்கி னேன். அப்போது, தத்தை அந் நகரத்தை அழிப்பவள் போன்று தன் படைக் கூட்டத்துடன் நிற்கக் கண்டேன்; அந் நிலை கண்டதும், 'மனையாள் தன் இடரை நீக்கி உதவிசெய்ய அதனைப் பெற்று உயிர் வாழ்வதைக் காட்டி லும் இறத்தல் மிக நன்று; நாம் ஒன்றும் செய்ய இயலா மல் இப்படிப் பல விதத்திலும் வருந்தும்படி நமக்குத் தீவினை வந்து சேர்ந்தது; இத் தருணத்தில் நம் கவலையை நீக்கத் தக்கவன் நண்பனாகிய சுதஞ்சணனென்னும் இயக் கனே; அவனை இப்பொழுது சிந்தித்தலே நலம்' என்று முதலில் கடவுளை வாழ்த்திப் பின்னர் சுதஞ்சணனை நினைத் தேன். அவன் உடனே வந்து என்னைத் தன்னிருப் பிடத்திற்குத் தூக்கிக்கொண்டு சென்றான்" என்று கூறிச் சுதஞ்சணனிடமிருந்து புறப்பட்டதுமுதல் கனகமாலையைக் கலியாணஞ் செய்தவரையில் நடந்த சரித்திரங்களையும் சொன்னான்.

இவ்வாறு ஜீவகன், தான் உற்ற எல்லாவற்றையும் நம்பிக்குக் கூறித் 'தாய் தந்தையரைக் காணப் பெற் றிலமே' என்று வருந்தினான். அது கண்டு நந்தட்டனும் கண்ணீர்விட் டழுதான். அப்போது ஜீவகன் அவ னுடைய கண்ணீரைத் துடைத்து, "நம்பி! என் வருத்தங் கண்டு நீயும் வருந்தாதே; தாய் தந்தையரைக் காணப் பெற் றிலமே யென்று எனக்குச் சிறிது கவலையுண்டாயிற்று; ஆயினும், உன்னைக் காணப்பெற்ற எனக்கு அது நீங்கிவிட் டது; மிகுந்த பொருளையும் அடையலாம்; பகைவரைக்

கொல்லலாம்; சிநேகிதரையும் பெறலாம்; பெண்டிரையும் அடையலாம்; நற் புத்திரரையும் பெற்றுக்கொள்ளலாம்; உடன் பிறப்பை மாத்திரம் பெறுதல் அருமையாகும்; ஆதலால், என் உயிரினுஞ் சிறந்த தம்பியாகிய உன்னை அடைந்த எனக்கு இனிக் குறையாதுளது?" என்று அவனைத் தேற்றினான். பின்னர் நந்தட்டன் ஜீவகனுடனே அந் நகரில் இனிதாகத் தங்கியிருந்தான்.

இங்ஙனமிருக்க, சில தினங்கள் கழிந்தபின்பு, இராஜமாபுரத்திலிருந்த ஜீவகன் தோழர்கள், வெளியிற் பட்ட மலைப் போல மனங் கொதித்து, தேகம் மெலிந்து, ஜீவகனைக் காணாமையால் 'இனி என் செய்வோம்' என்று வருந்தி, மேற் செய்யவேண்டிய காரியங்களைப் பற்றி ஆலோசிக்கத் தொடங்கியவர்களாய் ஒரு நாள் எல்லோரும் ஒன்று சேர்ந்து, "தத்தை வருத்தமில்லாதவளாயிருக்கின்றமையின், நம் தலைவர் எவ்விடத்தோ கரந்து உறைகின்றனரென்பது விளங்குகின்றது; ஆதலின் அவளிடம் சென்று கேட்டு அவர் இருப்பது உண்மையாயின் விரைவில் நாம் அவரைச் சேர்வோம்" என்று துணிந்து அத் தத்தையிடம் சென்று, "ஜீவகசாமி எங்கேனுமிருக்கின்றாரோ?" என்று வினவினார்கள். அவள், ஜீவகன் மறைந்திருக்கின்ற விதத்தையும், அவனுக்குற்ற நன்மைகளையும், நந்தட்டன் அவனிடம் சேர்ந்திருப்பதையுங் கூறினாள்.

அங்ஙனங் கூறக் கேட்டவுடனே தோழர்கள், போன உயிரை மீண்டும் பெற்றவர்களைப் போல மெய் குளிர்ந்து வருத்தம் நீங்கினார்கள்; ஜீவகன் இருக்குந் திக்கை நோக்கி வணங்கினார்கள்; மனமுருகிக் களித்தார்கள்; அக் களிப்பினால் உடல் பூரித்தார்கள்; 'இனி நம் தலைவனைக் காண்போம்'

என்னும் விருப்பத்தால் பாடி யாடினார்கள்; அவனிருப்பிடத்தைக் கூறிய காந்தருவதத்தையைப்பலவாறு புகழ்ந்தார்கள்; பின்னர் அவளை நோக்கி, "ஆயிழையே! யாங்கள் இப்பொழுதே சென்று ஐயனைக் காண்போம்; அவரிடம் கூறுங் காரியம் உளதாயின் விரைவிற் கூறுவாயாக" என்று சொன்னார்கள். அவள், ஜீவகனன்றிப் பிறர் வாசித்துணராத விதத்தில் திருமுகமொன்றெழுதி அதில் அரக்கிட்டு அதன்மேலே தன் செவிக் குழையினால் முத்திரையிட்டு அதனைத் அத் தோழரிடத்தே கொடுத்து, "நம் நல்லவர் இருக்குந் திசைநோக்கி நீர் செல்வீராக" என்று அவர்களை யனுப்பினாள்.

அவர்கள் பிரயாணத்திற் குரிய ஏற்பாடுகளைச் செய்தார்கள். அப்போது சந்திரனும் அசுவநி நக்ஷத்திரமுங் கூடிய தினத்திலே பிறந்து வளர்ந்தனவும், புள்ளிகளையும் சுழிகளையு முடையனவும், காற்றைத் தோற்று விப்பன போல்வனவும், குறக்குப்பாய்வனவும், தம்மேலிருந்தெய்த அம்பினைப் பின்விடுவனவும், சேறு முதலியவற்றிலும் தளராது செல்வனவும், வலிமை கெடாதனவும், கொள்ளி வட்டம்போல் இடையறாமல் திரிவனவும், வெள்ளிமலை யடிவாரத்திற் பிறந்தனவும், வீரரேறிய சேணங்களை யுடையனவும், கழுத்திற் கட்டிய கெச்சை முதலியவைகள் சப்திப்பனவும், சாமரை அணியப்பட்டனவு மாகிய இருபதினாயிரம் குதிரைகள் வீர ரேறப்பட்டனவாய் வந்து கூடின; மற்ற வீரர்களும் வந்து சேர்ந்தார்கள். நொடிப்போதிலே நூறு விற்கிடை தூரம் செல்வனவாகிய எருதுகளும், கோவேறு கழுதைகளும், ஒட்டகங்களும் பிரயாணத்திற் குரிய பல பண்டங்களைச் சுமந்துகொண்டு வந்து சேர்ந்தன. இப் பூமியை விலையாகக்கொள்ளத்தக்க உயர்ச்சி

வாய்ந்தனவும், பைங்கிளி போன்ற நிறத்தினை யுடையவைகளும், பவளம்போன்ற நாவும் குளம்பும் பொருந்தியவைகளும், காற்றினும் கடுகிச் செல்வனவும், கண்ணைக் கவரும் காட்சியை யுடையனவு மாகிய நான்கு குதிரைகளை அலங்கரித்து, அவற்றில் பதுமுகன், ஸ்ரீதத்தன், தேவதத்தன், புத்திசேனன் ஆகிய நால்வரும் ஏறி நல்ல நேரத்தில் புறப்பட்டார்கள். நபுல விபுலர் சுற்றத்தார்க்குத் துணையாக நகரத்தி லிருந்தார்கள். பறை ஒலிக்க, சங்கு முழங்க, வாளும் வேலும் மின்ன, படைகள் கடலைப்போல ஆர்த்தெழுந்து சென்றன.

இவ்வாறு படைகளுடனே புறப்பட்டுச் சென்ற அவர்கள், மருதம், முல்லை முதலிய நிலங்களைத் தாண்டிக் குறிஞ்சி நிலத்தை யடைந்து அங்குள்ள மலைகளையும், அருவிகளையும், தினைப்புனங்களையும், ஐவனச் சாரலையும், செல்வமற்றவருடைய தேசங்களையுந் தாண்டித் தபசிகள் இருக்கும் தாபதப் பள்ளியிற் போய்ச் சேர்ந்தார்கள். அங்கே தேவருலகை நிகர்த்த ஒரு சோலை யிருந்தது. அதனிடையே குளிர்ந்த வாவியொன்று மிருந்தது. அவ் வாவி சேர்ந்த சோலையைக் கண்டவுடனே பதுமுகன் முதலியோர் அவ் விடத்தி லிறங்கி முனிவர்க ளிருக்கும் ஆசிரமங்களைப் பார்க்கச் சென்றார்கள். அவ்வாறு அவர்கள் பார்த்துக்கொண்டு வரும்போது ஓரிடத்தில் ஜீவகன் தாயாகிய விஜயமாதேவியைக் கண்டார்கள். அவள், காவியால் போர்த்தப்பட்ட திருமேனியுடனும், சச்சந்தனை யிழந்ததாலும் ஜீவகனைப் பிரிந்ததாலு முண்டான வருத்தம் நிறைந்த மனத்துடனும், கழுவுதலின்றிச் சடையாகி வளர்ந்து தொங்கும் கூந்தலுடனும் அருகக்கடவுள் அடிகளில் மலர்களைக் கொண்டு அருச்சித்துப் பல தோத்திரங்

களைக் கூறி அவரை வணங்கி, 'என் பிள்ளை என்ன விதமா யிருக்கின்றானோ' என்று ஜீவகனை நினைத்துக் கண்களில் நீர் ததும்ப ஏக்கமுற் றிருந்தாள்.

அவளைக் கண்டதும், பதுமுகன் முதலியோர் அவள் சமீபத்திற் சென்று, "இவள் திருமகளோ ! நாமகளோ ! மண் மகளோ !" என்று அதிசயித்து, அவளை நோக்கி, "தாயே! தங்கள் குலம் யாது? தாங்கள் இங்குவந்திருக்கும் காரணம் யாது ?" என்று வினவ, அவள், "என் குலமும் வரவும் கூறுதல் எளிதாயினும் நான் கொண்டிருக்கும் இவ் வேடத்தாலே அவற்றைக் கூறக் கூடாதவளா யிருக்கின் றேன் ; நீங்கள் உங்களுடைய குலத்தையும் வரவையுங் கூறுங்கள்" என்றாள்.

அதைக் கேட்டுத் தேவதத்தன், அவளை நோக்கி, "அன்னையாரே! நாங்கள் இருப்பது இராஜமாபுரம்" என்று கூறிப் பின்னர், ஸ்ரீதத்தனைக் காட்டி, "இவன் அந்நகரில் மந்திரியாகிய சாகரனுக்கும் குருதத்தைக்கும் பிறந்த ஸ்ரீதத்தன்" என்றும், புத்திசேனனைக் காட்டி, "இவன், சச்சந்த மன்னருடைய அந்தணனாகிய அசலனுக்கும் திலோத்தமைக்கும் பிறந்த புத்திசேனன்" என்றும், பது முகனைக் காட்டி, "இவன், அரசர்க் குரிய செட்டியாகிய தனபாலனுக்கும் பவித்திரைக்கும் தோன்றிய பதுமுகன்" என்றும், தன்னை, "அரசன் பெயராற் பட்டம்பெற்ற விசய தத்தனுக்கும் பிரிதிமதிக்கும் பிறந்த தேவதத்தன்" என் றும் சொன்னான். அவ்வாறு கூறி மேலும், "அரசர் கட்டி யங்காரனாற் கொல்லப்பட்டார் ; அக் காலத்தில் கந்துக னிடத்தே ஒரு புத்திரர் தோன்றி வளர்ந்தார். நாங்க ளும் முற்பிறப்பிற் செய்த நல் வினையாலே அவர் பிறந்த

போது வந்து பிறந்தோமாதலால், எங்கள் சுற்றத்தார் எங்களை அவருக்குத் தோழராகும்படி செய்தார்கள். நாங்களும், எங்கள் தலைவராகிய அவரும், நாங்கள் பிறந்து ஒரு வருடங் கழிந்தபின்பு அவருக் கிளையராகப் பிறந்த நந்தட்டன், நபுல விபுலர் ஆகியவர்களும் கூடித் திக்கயங்களென் னும்படி எட்டுப் பேர்களாய் வளர்ந்து கற்கப்படும் வித்தைகளை யெல்லாம் கற்றோம். அதன்மேல் எங்கள் தலைவர், வேடர்கள் ஓட்டிக்கொண்டுபோன பசுநிரையை மீட்டுக் கலுழவேகன் மகளை வீணைவித்தையிலே வென்று மணம் புரிந்து, பின்பு குணமாலையைக் கொல்லச்சென்ற யானையை அடக்கி அவளைக் காப்பாற்றி அவளையுங் கலியாணஞ் செய்திருந்தார். அவர் பெயர் ஜீவகன என்பதாம். அவரால் அடக்கப்பட்ட கட்டியங்காரனுடைய பட்டத்துயானை கவளங் கொள்ளாதிருந்தது. அதனால் கட்டியங்காரன் பகைகொண்டு அவரைக் கொல்ல........'' என்ற மாத்திரத்திலே மேல் நடந்த விஷயங்களைச் சொல்வதற்கு முன்னரே விஜயை தன் மகன் இறந்தானென்றே நினைத்து, "ஆ!" என்றேங்கி அறிவழிந்து மூர்ச்சித்து அடியற்ற மரம்போல் நிலத்தில் வீழ்ந்தாள்.

அதைக் கண்ட ஜீவகன் தோழர்கள், "நம் துணைவர்க் குண்டான தீங்கைக் கேட்ட மாத்திரத்திலே, தம் மகனுக் குற்றத்தைப் போல நினைத்து இவ் வம்மையார் மயங்கி வீழ்ந்தார்; இவருடைய சித்தம் மிக இரக்கமுடையதாம்; இவ் விரக்கம் இவர் தவத்தினாலேயே ஏற்பட்டது. இத்தகைய தவத்தின் பெருமையை நாம் என்னென்று சொல்வோம்!'' என்று விஜயமா தேவியை யாரோவென்று நினைத்துப் புகழ்ந்து, உடனே முத்துவடத்தை யறுத்து, அம் முத்தோடு சந்தனத்தைச் சேர்த்

தரைத்த குழம்பைப் பனிநீரிற் கலந்து அவள் மேற் றெளித்து விசிறியால் விசிறி அவளைத் தெளிவித்தார்கள்.

அங்ஙனம் மூர்ச்சை தெளிந்த வுடனே விஜயை தன் வரலாறுகளைக் கூறிப் புலம்பத் தொடங்கி, "ஆ மகனே! நின் தந்தை, மகா பாவியாகிய கட்டியங்காரனால் இறக்க, எந்திர மயிலேறிச் சென்ற யான் நடுச் சாமத்தில் சுடுகாட்டில் வீழ்ந்து வருந்த, அவ்வாறு வருந்திய எனக்குத் துணையாகப் பிறந்த நீ இப்போது என்னைப் பரிதபிக்க விட்டுச்சென்றாயே; நான் உன்னைப் பெற்ற அன்று கந்துக்கடன் எடுத்துக் கொண்டு போய்த் தன் மனைவியாகிய சுநந்தைக்குக் கொடுக்க, தன் புத்திரனை யிழந்த வருத்தத்தால் மயங்கி யிருந்த அவள் அவ் வருத்தம் நீங்கிச் சந்தோஷமுற்று உன்னை வளர்த்து வந்தாளே; அவளும் வருந்துமாறு என் ஐயனே! நீங்கினையே; என் அரசே! நான் ஆதியிற் கண்டு இறைவரால் பலன் தெரிந்து கொண்ட மூன்று கனவில் நீ பிறத்தலாகிய ஒன்று பலித்ததால், மற்ற இரண்டும் பலிக்குமென்றே நினைத்திருந்தேன்; உன் தந்தை பகை முடிக்குமாறு தெரிவித்ததை உன்னிடம் சொல்லிச் சத்துருவை அழிப்பிக்கவும் கருதி யிருந்தேன்; அப்படியிருந்த என்னுடைய எண்ணங்களில் ஒன்றையேனும் நீ கேளாமல் இறந்து போயினையே; நீ பகைவனை வென்று அரசைக் கைக்கொண்டு குடிகளைப் பாதுகாக்க அதனை நான் என் கண்ணாரக் கண்டு மகிழ்ந்து, நீ, 'இனி மேல் துறவடையலாம்' என்று சொன்ன பின் துறந்து போகக் கருதி யிருந்தேன். அப்படி நான் பிரிந்து போவதற்குள்ளே நீ பிரிந்து கந்துகனிடம் சென்றாய்; ஆயினும், உயிருடனிருக்கின்றாயென்று மகிழ்ந்திருந்தேன். அம் மகிழ்ச்சி யெல்லாம் அடியோடு நீங்கும்படி, ஆ! ஐயோ! ஐயோ! ஐயோ!

நீ உயிர் விட்டாயே; இதற்குக் காரண மென்ன? கோமான் மகனே! குரு குலத்தார் போரேறே! ஏமாங்கத நாட்டார்க் கிறைவா! என் இன் னுயிரே! அழகனே! வெற்றிமாலே யணியத் தக்க வீர சிங்கமே! கடலிலே கப்பலைக் கவிழ்த்த வனைப் போல நான் இப்போது கலங்கிக் கண்ணீர் விடுகின்றேன்; நீ என் கண்ணீரையும் நோக்காமற் போய் விட்டாயே; நீ நிதின்றி வளர்கின்ரு யென்று வந்தார் கூறக் கேட்டு 'மகனே மீண்டும் காணப் பெற்றிலமே' என்று நான் மனம் நொந்து இங்கே மறைந்திருந்து நோன் பியற்றி வந்தேன்; அங்ஙனம் நொந்திருந்த யான் மேலும் ஆருத் துயரத்தில் மூழ்கும்படி நீ மறைந்து விட்டாய்; அந்தோ! இனி நான் ஆற்றேன்! ஆற்றேன்! இத் துன்பத்தால் இறந்தே போவேன்; ஏ தேவர்களே! என் மகனே முன்னெரு கால் கண் குளிரக் கண்ட யான் பின்னெரு கால் காணுதற்குத் தவஞ் செய்யாது போய் விட்டேனே. இவ்வாறு நேருதற்கு யான் செய்த தீவினை யாது? பெண்ணுய்ப் பிறந்தவருள் என்னைப் போன்ற பாவிகள் எவரும் இரார்" என்று மயங்கிய மயில் போல மீண்டும் நிலத்தில் வீழ்ந்தாள்.

இவள் கூறிப் புலம்பிய வார்த்தைகளை யெல்லாங் கேட்ட வுடனே ஜீவகன் தோழர்கள், இவளைச் சச்சந்தன் மனைவி யென்றும், ஜீவகனை இவளுடையகுமார னென்றும் உணர்ந்து, அதிசயித்து, ஒருவர் முகத்தை ஒருவர்பார்த்து, "காரியம் எவ்வாறு முடிந்திருக்கின்றது பார்த்தீர்களா? இனிக் கட்டியங்காரன் நமக்கு ஒரு பொருளாவனே; நாம் அவனுக்குக் கூற்றமாய் அவ னுயிரை இப்பொழுதே உண்டோம், உலகையுங் கொண்டோம்" என்று கூறி உவகை மிகுந்து ஆடினர்கள். அங்ஙன மாடி, மயங்கிக் கிடந்த விஜயமாதேவிக்குக் குளிர்ச்சிகளைச் செய்தார்கள். அதனுல் அவள் உணர்ச்சி பெற் றெழுந்தாள்.

உடனே அவர்கள் அவளைச் சூழ்ந்து கை குவித்து வணங்கி அவள் திருமுகத்தை நோக்கி, "அன்னையே! விஷயத்தை முழுதுங் கேட்டுத் தெரிந்துகொள்ளு முன் மைந்தன் மீது ஏற்பட்ட அன்பால் தாங்கள் திடுமென மயங்கிவினை துன்ப முற்றீர்கள்; நீங்கள் இவ்வாறு வருந்தத் தக்க தீங்கு ஒன்றும் நடந்திலது; ஆதலின் வருத்த மொழிவீராக; ஜீவகசுவாமி இறக்கவில்லை; உயிருடனிருக்கின்றார்; அவரைக் கொல்லும்படி கட்டியங்காரனுடைய ஏவலாட்கள் கொலைக் களத்திற்குக் கொண்டு போன மாத்திரத்திலே ஒரு தெய்வம் வந்து அவரை அத்தீங்கினின்றும் நீக்கி விட்டது. அவர் மங்கலமான பல காரியங்களைச் செய்து இப்பொழுது ஏமமாபுரத்திலே யிருக்கின்றார்; அவரைத் தேடியே நாங்கள் செல்கின்றோம்; வரும் வழியில் நாங்கள் செய்த நல்வினையால் உமது சேவடியைச் சேர்ந்தோம்; அவரை இதுவரை வணிக புத்திரரென்று நாங்கள் நினைத்திருந்த நினைப்பு நீங்கி இராஜ புத்திர ரென்பதையும் உணர்ந்தோம்; இனி எக் குறைவு• மின்றி எல்லாம் ஜெயமாகவே முடியும்" என்றார்கள்.

விஜயை, " ஆ! என் புத்திரனும் இருக்கின்றானே" என்று தேகம் பூரித்து மகிழ்ச்சியுடனே அவர்களை நோக்கி, "புதல்வர்காள்! பரணி நக்ஷத்திரத்திற் பிறந்தவராகிய சச்சந்த மன்னர் அந் நாளின் விசேடத்தால் பகைவரை மதியாமல் இரணியன் பட்டது போற் பட்டார். அதனால் நான் அடைந்த தீங்குகட்கு ஓர் அளவின்று; என் புத்திரன் வருந்தாதபடி இவற்றை யெல்லாம் அவனுக்கு முறைமைப் படக் கூறி விரைவில் அவனை இங்கே நீங்கள் அழைத்து வருவீராக; இக்காரியத்திற் சிறிதும் ஜீவகனுக்கன்றிப் பிறர்க்குக் கூறாதீர்கள். இவ் விஷயத்தில் எவரையும் நம்பாதீர்

கள்; இந்த இரகசியம் நீனே யின்றியும் ஒரு சமயம் வெளிக்கு வந்து விடுமாதலின் இதில் முக்கியமாகக் கவனம்வைத்துக் கொள்ளுங்கள்; அறியாதவர்க ளிடத்தில் இதைப் பற்றிப் பேசாதிர்கள்; பகைவர் நெஞ்சம், பாம்பின் போக்கும், பின்னலும் நேரே ஒருவழியில் இல்லாவாதலின் இத்தகைய இடங்களில் இரகசியத்தை வெளிவிடாமல் ஜாக்கிரதையாக நடந்து கொள்ளுங்கள்'' என்று கூறினள். அவர்கள், ''அடிகளே! நாங்கள் ஒரு மாதத்திற்குள்ளே ஜீவக வள்ளலை உமது திருவடியிற் கொண்டு வந்து சேர்ப்போம்; அதன் மேல் தாங்கள் அருளியவாறே பகையை முடிப்போம்'' என்றார்கள். விஜயை, ''அதனைத் தவறாது செய்யுங்கள்'' என்றாள்.

பின்னர் அவர்கள், விரதம் நிறைந்த விஜயை பாதத்தை வணங்கி அவளிடம் விடை பெற்றுக்கொண்டு புறப்பட்டார்கள். சங்குகள் முழங்க அவர்களுடன் படை நடந்தது. அப் படையிலுள்ள குதிரைகளின் மணியோசையைக் கேட்டு இந்திரகோபப் பூச்சிகளைக் கௌவிய மயில்கள் பறந்து சென்றன. அவ்வாறு சென்ற படையானது மனித சஞ்சார மில்லாத மலைகளையும், யாறுகளையுங் கடந்து, மாந்தர் மிகுந்த மத்திம நாட்டிற் புகுந்து, மங்கையர் எரிக்குந் தீபாலே பொங்கிப் புதுக் கலசத்தினின்று மெழுந்த, பாற் பொங்கலின் நுரைபோல மதிலுக்கு மேலே வெண்மை நிறம் பொருந்திய மாடங்கள் தோன்றும் ஏமமாபுரத்திற்கு நாற் காதத் தவவி லிருந்த ஒரு நதிக்கரையில் போய்த் தங்கிற்று. அங்கே பதுமுகன் முதலிய நால்வரும் இறங்கி, அந் நதிக் கரையி லிருந்த அழகிய சோலையில் இருந்து, ஜீவகனை அடைதற்கு என்ன உபாயஞ் செய்யலாமென்று யோசித்தார்கள்.

அப்போது பதுமுகன், மற்றையரை நோக்கி, "துணைவரே! நாம் இத் தேசத்து மன்னனுடைய பசு நிரையைக் கவர்வோம்; அப்போது நம் ஜீவகரே அதனை மீட்க வருவார்; அப்படி வருங்கால் நாம் அவரை எளிதிற் கண்டு கொள்ளலாம்; இனி நீங்கள் எழுவீராக" என்று, படைக்கும் இதனைக் கூறினன். இதைக் கேட்டுப் புத்திசேனனென்னும் அந்தணன், "நாம் நிரையைக் கவருங்கால், நம் ஜீவகர் அங் கில்லையாயின், அரசனுடைய பெரும் படை வரும்; அது வந்தால் நாம் அஞ்சினரைப் போல மீள வேண்டும்; அங்ஙனம் மீண்டால், பார்த்தோர், 'இவர்கள் தோல்வியடைந்தார்கள்' என்று பழிப்பார்கள்; அதனால் நமக்கு இழிவுண்டாகும்; அவ்வாறு நாம் மீளாமல் நின்றால், வீணே இரத்தப் பெருக் கெடுத் தோடும்படி பல உயிர் மாளும்; ஆதலால், நீங்கள் இவற்றை யெல்லாம் நன்றாக ஆராய்ந்து ஒரு காரியத்தைச் செய்யத் துணியுங்கள்" என்றான். பின்னர் நால்வரும் ஆலோசித்தார்கள். அந்த ஆலோசனையில் பதுமுகன் கூறியதே சரியான தென்று தெரிந்தது. அதனால் நால்வரும் அதையே செய்யத் துணிவுகொண் டிருந்தார்கள்.

அத் தருணத்தில், ஏமமாபுரத்தில் உள்ள விசேஷங்களை அறிந்து வரும்படி முன்னரே அவர்களால் அனுப்பப்பட்ட ஒற்றர்கள் ஆங்குச் சென்று சில ஆச்சரிய சம்பவங்களை உணர்ந்து மீண்டு வந்து, அவர்களிடத்தில், "ஏமமாபுரத்தில் வனயசுந்தர மென்னும் யானை மதங்கொண்டு கட்டுத்தறியை முறித்துப் பாகருக்கும் அடங்காமல் வெளியேறிப் பலரும் அஞ்சும்படி கோபித்துத் திரிந்தது. நம் ஜீவகசாமி அக்களிற்றை அடக்கினர். அப்பொழுது அக்களிறு அவரிடத்தே தாழ்ந்தது. அவர் புரோசைக் கயிற்றைப்

பிடித்து அதன்மேலேறி, 'அப்புது அப்புது, ஆது ஆது, ஐ ஐ' என்று கூறி அழகிய கைத்தலத்தால் பொய்த் தட்டித் தட்டினார். அவ்வளவிலே அக் களிறு அவரால் சொல்லப்பட்ட, 'பரி பரி' என்பன முதலிய பாஷைகளைக் கேட்டுத் தோட்டி எடுத்துக் கொடுத்தல் முதலிய தொழில்களைத் தன் கையாலே செய்தது; அதன்மேல் அவர் கையாலே தலையில் மணிமுடியை யுடைய புரோசைக் கயிற்றை இரண்டு வடங்கொண்டு சேரக் கட்டி, நெடுந் தோட்டியையுங் குறுந்தோட்டியையுந் தம்மிற் பிணைத்து அக் களிற்றின் கழுத்திலே யிட்டுக் கயிற்றைக் கோத்து அதற்குப் பட்டத்தையுங் கட்டிக் கீழ்வயிற்றிற் கட்டுங் கச்சையையும் இறுக்கி, இரண்டு பக்கங்களிலும் மணியையும் அணிந்து, அடியிரண்டின் உச்சியையும் புரோசைக்குள்ளே செலுத்தி, புலிமுகம் அமைக்கப்பட்ட அரண்மனை முன்வாயிலிலே யிருந்த அரசன்மகிழும்படி அதனை நடத்தினார். அப்போது அம் மன்னன், வளைவாகிய கோட்டை மதிலின்மேல் வந்து நின்று, 'ஐய! உன்னுடைய யானை யேற்றத்தின் விநோதத்தை நாம் காண வேண்டும். ஆகலின், அதனை இவ் விடத்தே கொண்டு வருக' என்ன, நம் ஜீவக வள்ளல், விசையாற் காற்றென்னவும், ஒலியாற் கடலென்னவும், வடிவால் மலையென்னவும், அச்சம் செய்வதால் இடியென்னவும், கொலை செய்வதாற் கூற்றென்னவும் அந்த யானையை உள்ளே கொண்டு சென்றார். அவ்வாறு சென்றவர், ஓர் இளஞ்சூரியன் ஒரு மலையை இரண்டு துடைகளுக்கு மிடையே கொண்டு விரைவாகப் பறப்பது போலவும், ஒரு தேவன் மேகத்திலேறிச் செல்வது போலவும் விளங்கி, அதனை, வட்டம் வீதி, பத்தி என்கின்ற கதிகளிற் பல விதமாகச் செலுத்தினார். அது கண்டு அரசனும், அவனைச் சூழ்ந்த

வரும், 'இவ் வுலகில் யானை யேற்றத்திற்குத் தக்கவன் இவனொருவனே' என்று அவரைப் புகழ்ந்து, அதை நிறுத் தும்படி வேண்டினார்கள். உடனே ஜீவகர், தோட்டியின் நுனியாலே அதன் நெற்றியில் அழுத்தினார். அப்போது களிறு நின்றது. அஃது ஓடிய விசைபால் அசையாமல் மேலெழுந்தபடியே நின்ற மணிகளும் சப்தித்தன; அரச னும், அவன் மக்களும், மற்றைய ஜனங்களும், 'இந்த யானை நம்பி மனப்படியே தொழில் செய்தது; இவன் மன மும் அதன் மனமும் ஒன்று யமைந்தன; ஆதலின் இவன் தேவனே' என்று வள்ளலைக் கொண்டாடினார்கள். பின்பு அவர், மங்கலப் பாடகரும், எத்தாளிகளும் புகழவும், நகர மாந்தர்கள் தொழவும் அக் களிற்றைக் கம்பத்தோடே சேர்த்துக் கட்டிவிட்டு மாளிகைக்கு ஏகினார். இவற்றை யெல்லாம் நாங்கள் நன்றாகக் கண்டோம்" என்று கூறி னார்கள். பதுமுகன் சந்தோஷித்து இந்த நற்செய்தி கூறியதற்காக அவர்களுக்கு நிதியைக் கொடுத்தான்.

அதன்மேல் பதுமுகன் முதலியோர், அரசனுடைய பசுநிரையைக் கவர்தற்கு எழும்படி தம் சேனா வீரர்க்குக் கட்டளையிட்டார்கள். உடனே அவர்கள் ஆயுதங்களைத் தாங்கிக் குதிரைகளை அலங்கரித்துப் புறப்பட்டார்கள். துடும் பறையும் ஆர்த்தன; சங்குகள் முழங்கின. பது முகன் முதலியோரும் கவசங்களை யணிந்து படையுடன் சென்றார்கள். படை பசுநிரையைச் சமீபித்தது. அப்பொ ழுது பசுக்கூட்டத்தி லிடையே கரிக்குருவிகள் எழுந்தன. அவ்வாறு கரிக்குருவிகள் எழுவது துர்நிமித்தமாதலால், நிரைகாத்திருந்த இடையர்கள், "துர்நிமித்தம் நிகழ்கின்ற தாதலின் பசுக்களுக்கு இடையூறு வரும்போலிருக்கின் றது; ஆதலின், நிரையைக் கடினமாகக் காக்கவேண்டும்"

என்று பேசிக் கொண்டார்கள். அத் தருணத்தில், மேற் கூறியபடி சென்ற சேனையிலுள்ள வீரர்கள் நெருங்கி வில் வளைத்து அம்புகளைச் சிதறினார்கள். அதைக் கண்டு கோவலர் நிரையைக் காக்க ஓடினார்கள். அவ்வளவிலே ஜீவக னுடைய தோழர் படையாட்கள் அந்நிரையை வளைந்தனர். அப்பொழுது ஆயர்கள் சிறிது நேரம் அவர்களோடு போர் செய்து இளைத்து அதனைக் கைவிட்டு, நிரை பிறர்கைப்பட் டதை யுணர்த்துதற்கு அரசனிடம் ஓடினார்கள்.

அத் தருணத்தில் தடமித்தன், ஜீவகனுக்கிளைஞனாகிய நந்தட்டனிடத்தில், "உம்முடைய நாட்டின் பெயரையும், நகரத்தின் பெயரையும், குலத்தையும் எனக்குத் தெரிய வுரைப்பாயாக" என்ன, அவன் அவற்றைக் கூறத் தொட ங்கி, "இறைவ! எம்முடைய நாடு ஏமாங்கதம்; நகரம் இராஜமாபுரம்; இனி எங் குலத்தைக் கூறுவேன் கேட்பீ ராக" என்று அதனைக் கூறத் தொடங்கினன். அவ்வாறு தொடங்கி, அதனைச் சொல்லுமுன், மேற் கூறியபடி ஓடிய கோவலர் மிகுந்த பரபரப்புடன் சென்று, அரசனிடத்தில், "இறைவ! எவருடைய குதிரைப்படையோ வந்து நம் பசு நிரையைக் கவர்ந்து கொண்டன" என்று சொன்னார் கள். அவ்வளவிலே அரசன் சிறிக் கோபத்தாலே தீப் பிறக் கக்கையால் தூணிலறைந்து, பக்கத்தில் நின்றவர்களை நோ க்கி, "நால்வகைப் படையுடனும் நீங்கள் சென்று சீக்கிரம் நிரையை மீட்பீராக" என்று சொல்ல, உடனே படைகள் எழுந்தன. ஜீவகன், குதிரையை அலங்கரித்துத் தேரிற் பூட்டி நந்தட்டன் அதனைச் செலுத்த அதன்மே லேறி, "அரசருடைய நிரையைக் கவர்ந்தவரை இந் நகரிலே கொ ண்டு வந்து நான் அவரடியிலே அவர்களுடைய முடியைச் சேர்ப்பியேனாயின் உலகில் என் பெயர் பிரசித்தமாகாது

மறைவதாக" என்று வஞ்சினங் கூறி அப் படைகளுடனே விரைந்து சென்று; பதுமுகன் முதலியோர் பசுநிரையைக் கவர்ந்த இடத்திற்குச் சமீபத்திற் சார்ந்தான்.

அப்பொழுது பதுமுகன் வில்லை வளைத்து, ஓர் அம்பில், "அடியேமாகிய யாம் உம்முடைய அடிநிழலிலே தங்க வேண்டி உம்மைக் காண வந்தோம்" என்று எழுதி அது சென்று ஜீவகன் தேரிலே மாறி விழும்படி அதனை வில்லில் தொடுத்து எய்தான். அஃது அங்ஙனமே சென்று மாறி வீழ்ந்தது. ஜீவகன் அதனை எடுத்துப் பார்த்து, 'இவ்வாறு எய்தவன் பதுமுகனே' என்று தெளிந்து, துகிலை வீசித் தன் படையை மேற் செல்லாது விலக்கினான். உடனே தோழரெல்லோரும் ஜீவகன் சமீபத்திற் சென்று, விஜயையால் அவனை அரசனென்று அறிந்துகொண்டமையால் அவனடியிலே வீழ்ந்து வணங்கினார்கள். அவன் அவரவர் தரத்துக்குத் தக்கபடி தோளால் தழுவியும், சொல்லால் இனியன கூறியும், முடி யசைத்தும், கண்ணால் மகிழ்ந்து நோக்கியும் நால்வரையும் உபசரித்தான். அவர்களும் மனவேதனை தீர்ந்தார்கள்.

அதன்மேல் ஜீவகன், தன் தோழர்களை யானைமீ தேற்றி நகரத்திற்கு அழைத்துச் சென்றான். எல்லோரும் தடமித்தனைக் கண்டு வணங்கினார்கள். அப்போது அரசன், ஜீவகன் தோழரைப் பார்த்து, "இவர்கள் யாவர்?" என்று ஜீவகனிடத்தே பார்வையின் குறிப்பால் வினவினான். ஜீவகன், "அடிகளே! இவர்கள் என் தோழர்கள்; என்னைக் காணும்பொருட்டே இங்கு வந்து நிரை கொண்டதுபோல ஒரு விளையாட்டைச் செய்தார்கள்" என்ன, அரசன் மகிழ்ந்து, 'எல்லோரும் கனகமாலையிடம் செல்வீராக" என்றான்.

ஜீவகனும் தோழரும் அவள் மாளிகைக்குச் சென்றார்கள். தோழர்கள் கனகமாலையைக் கண்டு வணங்கினார்கள். அவள், "இவர்கள் யார்?" என்னும் குறிப்புத்தோன்ற ஜீவகனை நோக்கினாள். அவன், அவர்கள் இன்னவரென்று கூறினான். கனகமாலை, "இவரோ ஆங்கு நிரை கவர்ந்த கள்வர்! இவர்க்குத் தக்க தண்டனை செய்ய வேண்டும்" என்று நகைத்து, அளவற்ற மகிழ்ச்சி யடைந்து, அப்பொழுதே அவர்களுக்கு அளகைக்கோன் மகள் விருந்து செய்தது போல விருந்து செய்தாள்.

எல்லோரும் உணவுண்டு களித்த பின்பு, புத்திசேனன் இரகசியமான காரியங்களை யெல்லாம் கூற வேண்டி ஜீவகனைத் தனியே அழைத்துச் சென்று காந்தருவதத்தை கொடுத்த ஓலையை அவனிடத்தே கொடுத்தான். ஜீவகன் அதனை வாங்கி முத்திரையைப் பிரித்து வாசித்தான். அதில், "சுவாமி! நும் திருவடிகட்குத் தத்தை மிக்க வந்தனம் செய்தேன்; நாம் பிரிந்து சென்ற பின்பு, என் தந்தை கலுழவேகர், எலிமயிர்ப் போர்வை, படைக்கலங்கள் முதலியவற்றை உமக்கு நல்குமாறு தரனிடத்தே கொடுத்தனுப்பினார்; தரன் வந்து உம்மை விசாரித்தான். அப்போது நீர் சிறைப்பட்டு விலகிச் சென்றது அவனுக்குத் தெரியுமாயின் அது வெள்ளி மலையிலும் பரவி உமக்குப் பழிப்பை யுண்டாக்கு மென்றஞ்சி, அவனிடத்தே, 'ஜீவகசுவாமி, தம் பகைவனைக் கொல்ல இன்னும் ஐந்து மாதங்கள் கழிய வேண்டு மென்றும், அதுவரை மறைந் திருக்க வேண்டு மென்றுங் கூறித் தம் தலைவருடனே ஏமமா புரத்திற் சென் றிருக்கின்றார்' என்று கூறி அவனை அனுப்பி விட்டேன்; இனி அப் பழியானது வெளியாய் வெள்ளிமலையிற் பரவுமுன் தாம் வந்து பகைவனை மடித்து அரசுரிமையைக்

கைக்கொள்ள வேண்டும்; இதை விட்டுத் தாம் மணஞ் செய்துகொண்டு திரிவதனல் வரும் புகழ் ஒன்றும் இல்லை; குணமாலையோ உம்முடைய பிரிவால் வருந்தி உடல் மெலிந்து உயிர்விடுஞ் சமயத்தை எதிர்பார்த் திருக்கின்றுள்; அவள் பிழைப்பாளோ இறப்பாளோ; பிழைப்பது சந்தேகமா யிருக்கிறது; அவளுடைய பரிதாப நிலைமையையேனும் நீர் கவனித்தல் வேண்டும்'' என்ற விஷயங்கள் எழுதப் பட்டிருந்தன.

ஜீவகன் இவற்றை வாசித் துணர்ந்த பின் தலையசைத்து, மேல் நடக்கவேண்டிய காரியங்களை விரைந்து செய்யவேண்டு மென்று மனத்தில் நிர்மானித்துக்கொண்டு, தோழரிடத்தே சென்றுன். பின்னர்த் தோழர்கள் ஜீவகனை நோக்கி, "ஐய! இராஜ குமாரராகிய உம்மை இது வரை வணிகபுத்திர ரென்றே நாங்கள் மதித்திருந்தோம்; எனினும் இப்பொழுது உண்மையை உணர்ந்து கொண் டோம்'' என்றுர்கள். ஜீவகன் அதிசயித்து, "என்னுடைய இரகசியத்தை நீங்கள் எங்கே உணர்ந்தீர்கள்?'' என்று வினவ, அவர்கள், "ஐயனே! நாங்கள் வரும்போது, சச்சந்த மன்னர்தேவியாரும், உம்முடைய அன்னையாருமாகிய விஜயமா தேவியாரைத் தண்டகாரணிய மென்னும் வனத்திலே தவவேடத்துடனும், நீர் வாழவேண்டு மென்ற சிந்தனையுடனும இருக்கக் கண்டோம்; அவர் கூற உம்முடைய இரகசியங்களை யெல்லாம் உணர்ந்தோம்'' என்று கூறினுர்கள்.

ஜீவகன் அவர் மொழியைக் கேட்டதும் திடுமென அதிசயித்து, அவர்களை நோக்கி, "நீர் கூறியது என்ன! என்ன!!'' என்று வினவ, அவர்கள் மீண்டும் விஜயை முன்னே நின்று கூறியதுபோல எல்லாச் செய்திகளையும் விவர

மாகக் கூறினார்கள். அவ் வார்த்தைகள் செவியுட் புகவே ஜீவகன், முத்துக்கள் சிந்துவதுபோலக் கண்ணீர் மார்பிலே சொரிய, "அந்தோ! இப் பாவியைப் பெற்ற அன்னையாரும் இருக்கின்றாரோ! என்னைப் பெறும் தீவினையை யுடைய அவர்க்கு இனிமேல் வரும் தீவினை ஒன்றுமே யில்லை; அவர் எல்லாத் துன்பங்களையும் அடைந்தார்" என்று வருந்தினான். அவன் துயர் கண்ட தோழர், "நாம் செய்த நல்வினையே அவர் இருக்கும் இடத்தை நன்கு உணர்த்தியது; இனி எல்லாம் நன்மையாகவே முடியும்; நீர் வருத்தம் ஒழிவீராக" என்றனர். பின்னர் ஜீவகன் அவரை நோக்கி, "அன்னையார் இருக்குந் திசை யாது?" என்று வினவி அதனைத் தெரிந்து, அத் திசை நோக்கிவணங்கி,உடனே தோழரோடு அரசன் மாளிகைக்குச் சென்றான். அரசன் தோழரிடம், "ஜீவகன் குலம் யாது?" என்று வினவ, அவர்கள், "இவர் குருகுலத்தார்" என்று சொல்லி ஜீவகனுடைய வரலாறனைத்தும் தெரிவித்தார்கள். தடமித்தன், 'நான் முன்னரே என் மருகனைக் குருகுலத்தா னென்றே நினைத்திருந்தேன்: அஃது இப்போது நிச்சயமாயிற்று' என்று அதுவரை காத்திருந்த ஜீவகனைத் தழுவி மகிழ்ந்து, அமைச்சருடனே மேல் நடக்கவேண்டிய காரியங்களை யோசித்து, ஜீவகனை நோக்கி, "இனி நீ பகைமுடித்தற்கான உபாயங்களை நிறைவேற்றுதற்கு விரைந்து செல்லுதலே தகுதி". என்றான். உடனே ஜீவகன், கனகமாலை யிடத்தும், தன் மைத்துனர்க ளிடத்தும் மேல் நடக்கவேண்டிய விஷயங்களைத் தெரிவித்து விடைபெற்றுத் தோழருடனே தண்டகாரணியஞ் செல்வதற்குக் குதிரைமீதேறிப் புறப்பட்டான். அப்பொழுது நன்னிமித்தமாகச் சங்குகள் முழங்கின. எல்லோரும் ஏமமாபுரத்தை விட்டு வெளியேறிப் போனார்கள்.

## அத்தியாயம்-12

## ஜீவகன் விஜயமாதேவியைக் காணல்

மேற் கூறியபடி எல்லோரும் புறப்பட்டுப் போகும் போது, ஜீவகன் அரசனைவிட்டமையை யுணர்ந்தபடியி னாலே, நந்தட்டன், அவனைக் காக்கவேண்டிய முறைமை களை நாடிப் பதுமுகன் முதலியவர்களை நோக்கி, "துணை வரே! உலகை விலைகொள்ளும் பெரிய இரத்தினம் மாசே றிக் கிடக்க, அதனை மாசு நீக்கி வெளிப்படுத்தியது போல மறைந்திருந்த நம் தலைவருடைய இரகசியங்களை நீங்கள் வெளியாக்கினீர்கள்; இப்பொழுது அவர் நமக்கு அரசரும், இனி நாம் மந்திரிகளும் துணைவருமா யிருக்கின்றோம்; ஆத லின், நாம் அவரை மிகுந்த ஜாக்கிரதையுடன் காக்கவேண் டும்; இன்னும் சில நாட்கள் வரை இவருடைய விஷயங்களை வெளிப்படுத்த லாகாது; அங்ஙனம் வெளிப்படாமல் காப் போமானால் நாம் உலகை யெல்லாங் கைக்கொள்வோம்; அங் ஙனமின்றி அஜாக்கிரதையா யிருப்போமானால் நாம் செல் வத்தை அடைய மாட்டோம்; இன்னும் கேட்பீராக; பகை வருடைய கையிலும், முடியிலும், கண்ணிரிலும், ஆபரணத் திலும் கொல்லும் படைக்கலம் மறைந்திருக்கும்; அத் தகை யினர் சில சமயங்களில் நண்பர்போல நெருங்கி வணங்க வருவர்; அவர்களை நம்பி அருகிற் சேர்க்கலாகாது; சேர்த் தால் சமீபத்தில் வந்தவுடன் அவர்கள் மேற் கூறியவாறு மறைத்து வைத்திருந்தஆயுதங்களால் கொல்வார்கள். சில பகைவர் வஞ்சகநட்புக்கொண்டு பூமாலை முதலியவற்றிலும், தண்ணிரிலும், சோற்றிலும் விஷங் கலந்து அவற்றைக் கொண்டுவந்து கொடுப்பார்கள்; அவற்றுள் பூமாலை முதலிய வற்றை அரச அன்னத்தி னிடமும் சக்கரவாகப் புள்ளிட மும் காட்டி ஆராய வேண்டும்; தண்ணிர், சோறு முதலிய

வற்றைக் கருங்குரங்குக்கு இட்டு ஆராய வேண்டும்; கெட்ட வஸ்துக்களா யிருந்தால் அன்னத்தின் கண்ணில் இரத்தம் வெளிப்படும்; சக்கரவாகம் முகங் கடுக்கும்; கருங் குரங்கு உண்ணாது. அஞ்ஞான முழுதும் ஒரு சிறிய கோலால் அடித்தற்குப் பற்றுத அவ்வளவு அற்பமான நாகம், தன் பல்லாலே பெரிய யானையையும் கடித்துக் கொல்லும்; ஆதலின், பகையானது பஞ்சைக் காட்டிலும் மெல்லியதா யிருப்பினும் அதனைச் சிறிதென்று கருத லாகாது; அதனைப் பெரிதாகவே நினைத்து அதற்கு அஞ்சித் தக்க காவலை ஏற்படுத்திக் கொள்ள வேண்டும்; அன்றியும் நாம், நம் தலைவரை விட்டு நீங்கா திருப்பதில் ஓரிடத்தில் அசைவற் றிருக்கும் பல்லியைப் போன்றும், இவர்க்கு வேண்டுவன செய்து இவரைப் போற்றுவதில் தாயாரை நிகர்த்தும், இவரைச் சில முதலியவற்றைத் தப்பாமற் காக்கச் செய்வதில் அருந் தவர் போன்றும், இவரிடத்தே அடக்கங் காட்டுவதில் ஆமையை நிகர்த்தும், இவர் தீதான வழிகளிற் செல்லும்போது இடித்துக்கூறி இவரை நல்வழிப் படுத்துவதில் இவர்க்குப் பகைவர் போன்றும், உணவுப் பொருள்களில் இவர் விரும்பியவற்றைத் தேடி இவரை உண்ணச் செய்வதில் மனைவியை நிகர்த்தும் இவரை எப்பொழுதும் காக்கவேண்டும்" என்று கூறினான். இவற்றையெல்லாம் ஜீவகன் கேட்டு, "பகையை ஆராய்ந்து, தீங்கு வராமல் என்னைக் காக்குந் தொழிலைப் பதுமுகன் கைக் கொள்க" என்று சொல்ல, அவன் அத் தொழிலை ஏற்றுக் கொண்டான்.

அதன்மேல் அவர்கள் யானைகளும், புலிகளும், சிங்கங்களும், மான்களும், பன்றிகளும், வருடைமான்களும், மலைப் பாம்புகளும், இன்னும் பலவித மிருகங்களும், பறவைகளும்

சஞ்சரிக்கக் கூடியனவும், சாதிலிங்கம் முதலியவைகளும் பனிக்கட்டிகளும் உருகி வழியத் தக்கனவும், அருவி தேனோடு கலந்து பாயப் பெற்றனவும், திமிர, சந்தனம், திம்பூ, தக்கோலம், இலவங்கம், கருப்பூரம் முதலிய மரங்கள் புழுகோடு சேர்ந்து நறுமணம் வீசிக்கொண்டிருப்பனவும், பல தீங்கனிகள் பழுத்து உதிரும் வளம் பெற்றனவுமாகிய மலைகளையும், மலைச் சாரல்களையும், காடுகளையும் கடந்து தண்டகாரணியத்தைச் சேர்ந்து விஜயை தங்கியிருக்கும் தவப் பள்ளியை அடைந்தார்கள். அப் பள்ளி தேவருலகம் போல மிகவும் சிறப்புற்று விளங்கிற்று. அங்கே மகா உத்தமிகளாகிய பெண்களின் கண்ணால் நோக்கப் பெற்றும், கையால் தீண்டப்பெற்றும் பழுக்காத மரங்களும் பழுத்தன; மலராத மரங்களும் மலர்ந்தன; அவர் கையை வைத்து மலர் கொய்யச் சில மரங்கள் தாழ்ந்து கொடுப்பதுஞ் செய்தன.

இவ் வகைச் சிறப்புடைய அத் தவப் பள்ளியைச் சேர்ந்தவுடன் ஜீவகன், அதுதான் தன் அன்னை யிருக்கும் இடமென்று பதுமுகனால் உணர்ந்து, மயிலின்மே லிருந்து இறங்கும் முருகனைப் போலக் குதிரையி லிருந்து இறங்கிப் பதுமுகனை நோக்கி, "நீ முன்னே சென்று அன்னையாரின் சமயத்தை அறி" என்று ஏவி அவன் முன் செல்லத் தான் பின்னே சென்றான். அன்று விடியற்காலத் திருளிலே விஜயை, ஜீவகன் வரக் கனவு கண்டதாலும், தனக்கு இடக்கண் ஆடியதாலும், நல்ல இடத்திலே பல்லியுஞ் சொன்னதாலும், 'என் குமாரன் இப்பொழுது வருவானோ' என்று அத் தருணத்தில் பதுமுகனும் ஜீவகனும் செல்லும் திசையை நோக்கி நின்றாள். அப்பொழுது பதுமுகன் போய் அவளைக் கண்டு வணங்கி, "அடிகளே! நம்பியார் வந்

தார்" என்றான். அவள் ஆவலோடு, "ஐயன் எங்கே?" என்ன, பதுமுகன் விடை பகருவதற்கு முன்னே, பின்னால் சென்ற ஜீவகன், "அன்னையே! அடியேன் இதோ வந்தேன்" என்று தொழுது அவளுடைய பாதங்களைப் பிடித்துக்கொண்டு கீழே விழுந்தான். இருவருக்கும் அத் தருணம் உண்டான அன்பை என்னென்று புகல்வேம்! அவ்வாறு விழுந்த தன் புதல்வனைக் கண்டவுடனே விஜயை, கண்ணீர் பெருக, "ஐயனே! இங்கே வருவாயாக", என்று அவனை எடுத்துத் தழுவி, மீண்டும், அவனை நோக்கி "என் கண்மணி! நான் உன்னைப் பெற்றும் மடிமீது வைத்து அன்பு பாராட்டி வளர்க்கத் தக்க தவஞ் செய்யாத பாவியா யிருந்தேன்; எனினும் அக் குறைவு இப்பொழுது நீங்கப் பெற்றேன்; என் தீமை ஒழிக்க வந்த ஜீவக சாமியே! இறக்குந் தருணத்தில் அரசனைப் பகைவனிடத்தே விடுத்து, உன்னைச் சுடு காட்டிலே கைவிட்டு வந்த கொடியேனாகிய என்னைக்காண வந்தாயோ நீ! உன்னுடைய அன்பின் திறத்தை நான் என் னென்று புகல்வேன்!" என்று புலம்பினாள்.

ஜீவகன் அவ்வாறு வருந்திய தாயை நோக்கி, "அடிகளே! என் தந்தையார் இறக்க, அவர்க்கு நட்புடையவர்களெல்லாம் வருந்த, நாம் பல துன்பங்களை யடையப் பிறந்தது மன்றி, இப்பொழுது இடையன் கெடுத்த மரத்தைப் போல, விரமிருந்து பகையை வெல்வதிலாவது அல்லது இறப்பதிலாவது துணிவு கொள்ளாமல் இருக்கின்ற என் பொருட்டு நீங்கள் என் வருந்துகின்றீர்கள்? கவலைப் படவேண்டாம்" என்று அவளைத் தேற்றினான்.

அதன்மேல், குணத்திற் சிறந்த விஜயை, ஜீவகனை நோக்கி, "ஐய! உனக்குத் தாய் யானல்லேன்," சுநந்

தையே; தந்தை சச்சந்த நல்லர், கந்துக்கடனே; எனக்குப் பிள்ளை நீ அல்லை, நந்தட்டனை" என்று, நந்தட்டனையும், "புதல்வ! இங்கே வருக" என்று அருகில் அழைத்துத் தழுவி, இருவரையும் இரண்டு பக்கத்திலும் வைத்துக் கொண்டு மயில் தன் குஞ்சுகளை இரண்டு சிறகாலும் தழுவியிருப்பது போல இருந்து, அவர்களுடைய தோழர்களுக்கெல்லாம் முறையே இனிய வசனங்கள் கூறிப்பின் எல்லோருக்கும் அடிசில் ஊட்டி உபசாரம்செய்தாள். அவர்கள் அவ்விடத்தில் மகிழ்ச்சியுடனே தங்கி யிருந்தார்கள்.

ஆறு தினங்கள் கழிந்த பின்பு விஜயமாதேவி ஜீவகனுக்கும், மற்றையர்க்கும் இராஜ தந்திரங்களை நூலிற் கூறும் முறைப்படி கூற நினைந்து, அவர்களைத் தனியாக அழைத்துக்கொண்டு போய் ஒரு சோலையி லிருந்து, ஜீவகனை நோக்கி, "மகனே! நான் கூறும் விஷயங்களை நீசிரத்தையோடு கேட்டுக்கொள்; அழித்தற் கரிய மலையிலும் காட்டிலும் தங்குகின்ற பெரும் பொருளையுடைய குறுநில மன்னர் பெண்களை மணஞ்செய்து கொள்ளுதலும், வலிமையுள்ள அரசர் குமாரத்திகளைக் கலியாணம் புரிந்து கொள்ளுதலும், உன்னைப்போன்ற இராஜ குமாரர்களுக்கு மிகவும் பொருத்த முடையனவாம்; எனெனில், இழந்த அரசுரிமையைப் பெறப் பகைவருடன்போர் செய்யுங்காலத்தில் அவர்கள் துணை செய்வார்கள்; ஆதலின், நீ இப்பொழுது செய்திருக்கும் கலியாணங்கள் மிகச் சிறந்தனவே; இன்னும் ஆறிலொரு கடமை வாங்குதல், பழம் பகையை மறந்து விடாமல் நெஞ்சில் நினைத்திருத்தல், முள்ளைக்கொண்டு முள்ளை எடுப்பதுபோல உறவாயிருக்கும் பகைவர் இருவரைப் பேதஞ்செய்து அவருள் ஒருவரைக்கொண்டு ஒருவரை அழித்தல், சேர்ந்து போர் செய்யத் தொடங்

கும் சத்துருக்கள் இருவருள் ஒருவரைப் பிரித்துத் தம்மோடுசேர்த்துக் கொள்ளுதல், ஒற்றரை ஒற்றரைக்கொண்டு ஆராய்தல், நீதி நூல் கற்ற அமைச்சரைக் கண்ணென்று கொள்ளுதல், மந்திரிச் சுற்றத்தையும் தந்திரிச் சுற்றத்தையும் பெருகச் செய்தல், ஆகிய இவைகள் வெற்றி பெறும் அரசர்க்குரிய முக்கிய காரியங்களாம். இவை யன்றியும் அவர்க்குப் பொருளும் அவசியமாம்; அப் பொருள் பல வெற்றியை உண்டாக்கும்; மதிப்பைத் தரும்; கல்வியையும் அழகையும் கொடுக்கும்; குறைந்தவரைப் பெருகச் செய்யும்: மேலும் அப் பொருளாலே படையுண்டாம்; அதனாலே பூமி கைகூடும்: அதனாலே பின்பு அளவற்ற பொருள் சேரும்; அது கைகூடும் போது முத்தியும் கிடைக்கும்" என்று கூறிப் பின்னும் அவனை நோக்கி, "என் அருமைப் புதல்வ! நாம் பூமியையும் இழந்து பொருளுமில்லாமல் மிகத் தாழ்ந்திருக்கின்றோம்; நமக்குத் தக்க உபாயங்களைச்சொல்லும் அமைச்சருமிலர். ஆதலின் இந்நிலைமையிலிருக்கின்ற நீ பகைவனை வெல்லுதற்கு என்ன உபாயத்தைத் துணிந்திருக்கின்றாய்?" என்று வினவினாள்.

அதற்கு ஜீவகன், "அன்னையே! சிங்கம் தனக்கு நிகராகிய சிங்கத்தோடன்றி நரியோடே போர் செய்யத் தொடங்கினால் அப்பொழுது அதற்கு அந்நரியை வெல்லத் தக்க சூழ்ச்சிகளும் துணையும் வேண்டுமோ? அதுபோல மிகவும் அற்பனாகிய கட்டியங்காரனுடனே போர் செய்வதற்கு அவை அவசியமல்ல மேலும் நான் அவனுடன் யுத்தம் புரிய வேண்டுவதில்லை: நந்தட்டன் ஒருவனே அவனுக்கு எமனாவான். போர் செய்யுங் காலத்தில் கட்டியங்காரன் பாம்பாவான்; நந்தட்டன் கருடனாவான். நந்தட்டனைக் கண்ட மாத்திரத்திலேயே அவன் கெடுவான்; ஆத

மின், நீர் அவ்விஷயத்தில் கவலைப்பட வேண்டாம்'' என்று கூறினன்.

அது கேட்ட விஜயமாதேவி, 'நந்தட்டன் கருடனே!' என்று சந்தோஷித்து அவன் தோள்களைத் தொட்டு, "இத்தோள்கள் நிச்சயமாகப் பூமியாட்சியைத் தரும்'' என்று வாழ்த்தி, மேலும் எல்லோரையும் நோக்கி, "இளஞ் சிங்கங்களே ! நீங்கள் பகைவனை எளிதிற் கொல்வீர்களென்பது நிச்சயம்; ஆயினும், நாம், காட்டிலே ஒரு காக்கை அநேக கூகைகளிருக்கின்ற இடத்திற்குப் பகற்காலத்திலேசென்று அவற்றை எளிதிற் கொன்ற கதையையும், இடமறியாமல் சிங்கம் நரிமேலே பாய்ந்து வலையிலே அகப்பட்ட கதையையுங் கேட்டிருக்கின்றோம்; ஆதலின், 'நாம் வீரமுடையோம்' என்று அகங்கரித்து நினைத்ததையே துணிந்து செய்யலாகாது; காலத்தையும், இடத்தையும் நாடி ஒரு காரியத்தைச் செய்யத் தொடங்கவேண்டும்'' என்றாள்.

இவைகளைக் கேட்ட நந்தட்டன், "தாயே ! பகைவரைவெல்லும் வல்லமை எங்களுக்கு உண்டு; ஆதலால் நாங்கள் பிறர் சகாயத்தை விரும்போம்; கட்டியங்காரனாகிய பதரை வெல்லுதற்கு ஒருதுணையும் வேண்டுமோ; தாங்கள் உத்தரவு கொடுத்தால் இப்பொழுதே நாங்கள் அவனை எமபுரத்திற்கனுப்பி அரசாட்சியைக்கைக்கொள்வோம்; தங்கள் கட்டளை பிறப்பது தான் தாமதம்'' என்றான். மற்றத்தோழர்களும் அவளை நோக்கி, "அடிகளே ! ஜீவகசாமியின் அடியைச் சேர்ந்த நாங்கள் மிக்க வெப்பத்தையுடைய சூரியனாவோம்; எம்முடன் எதிர்த்த பகைவர் அச் சூரியனுக்கு எதிர்ப்பட்ட பனியும் இருளுமாவர்; இவ் விஷயத்தில் தாங்கள் சந்தேகங்கொள்ள வேண்டாம்'' என்றார்கள்.

இவர்களுடைய வார்த்தைகளை யெல்லாங் கேட்ட விஜயமா தேவி, ஜீவகனை நோக்கி, "என் செல்வனே! மேகமும் சூரியனும் தோன்றிய மாத்திரத்திலே எப்படி முல்லையும் தாமரையும் மலருமோ அதுபோல உன்னுடைய சிறப்பைக் கண்ட மாத்திரத்திலே நின் மாமன் சந்தோஷத்தை அடைவார்; ஆதலால் நீ அவரிடத்தே சென்று ஆலோசித்து அதன்மேல் பகைவனைக் கொல்வாயாக" என்றாள். அது கேட்டு ஜீவகன், "அன்னையே! தாங்கள் கூறியது நன்று; தோழர்வந்து என்னிடம் தெரிவித்த அப்பொழுதே அதனை யானும் துணிந்தேன்; யான் நாளைக்கே இராஜமாபுரம் சென்று, சுற்றத்தார்க்கு யானிருக்கும் விதத்தைத் தெரிவித்து அவர்கள் கவலையை நீக்கி, மறுநாளே என் மாமனிடம் அடைவேன்; தாங்கள் இப்பொழுதே அங்குச்செல்ல வேண்டும்'' என்று கூறினன். அவளும் அதற்கிசைந்தாள்.



## அத்தியாயம்-13

## விமலை திருமணம்

பின்பு ஜீவகன், தன் படைகளைக் கொண்டு விஜயமா தேவிக்குக் காவலிட்டு அவளை அனுப்ப, அவள் நூற்றை ந்து தவ மகளிரோடு தன் தமையனாகிய கோவிந்தன் வீட்டிற்குச் செல்வதற்குக் காட்டின் வழியாக நடந்து போனாள். ஜீவகனும குதிரைமீதேறித் தன் படைகளுடன் வழிக்கொண்டு, மலைகளையும், ஆறுகளையும் கடந்து ஏமாங்கத நாட்டையடைந்து இராஜமாபுரத்திற்குப் பக்கத்திலேயுள்ள ஒரு சோலையில் தங்கி இளைப்பாறி அவ்விரவு அவ்விடத்திலேயே அடிசிலுண்டு துயில்கொண்டு, மறுநாள் சூரியோதயமானவுடன் காலைக் கடன்களை முடித்துக்கொண்டு தன் படைகளையும் தோழர்களையும் அச்சோலையிலேயே நிறுத்திவிட்டுத் தான் மாத்திரம் தனியே நகரத்தைப் பார்த்து வரஅங்குச் சென்றான். அப்பொழுது நகரம் மிகவும் சிறப்புடையதாய் விளங்கிற்று.

ஜீவகன் அங்குள்ள விநோதங்களைப் பார்த்துக்கொண்டு செல்லுங் காலத்தில் அந் நகரத்தி லுள்ள சாகரதத்தன் மகளாகிய விமலையென்பாள், தன் மாடத்தில் பந்து விளையாடிக்கொண்டு நின்றாள். அவள் அங்ஙனம் விளையாடுங் காலத்தில் கூந்தலில் அணியப்பட் டிருந்த பூமாலை சிதைந்தது; கழுத்திலணிந்த முத்துவடம் குதித்தாடிற்று; காதிலுள்ள ஓலைகள் அசைந்து பிரகாசித்தன; காற் சிலம்புகள் சப்தித்தன. அவள் ஏக காலத்தில் ஐந்து பந்துகளைக்

கைக் கொண்டு தவறி விழாதபடி அவை வண்டுபோலவே யெழுந்து மாலையைச் சூழ்ந்து வரவும், மாலையில் மறைந்த பந்து மீண்டு கையில் வரவும், கூந்தலின் பக்கத்தே சென்ற பந்து முகத்தின் பக்கம் வரவும், உச்சியிற் போன பந்து மீண்டு மாலைக்குள்ளே வரவும், மாலைமேலே போய் உயர்ந்தபந்து திரும்பி விரலினிடத்தே வரவுஞ்செய்து, கையால் பந்துகளை அடித்துக் கொண்டே மயில் போல எட்டுத் திக்குகளிலும் உலாவியும், குங்கும மணிந்தும், மாலை சூடியும், பந்துகளைப் படிமுறையாக அடித்தும், அம்முறையே தன்னைச் சூழ்ந்து வர அடித்தும் விளையாடினாள்.

அப்போது ஒரு பந்து கையினின்றும் தவறி வீதியிலே குதித்து ஆங்குச் சென்றுகொண் டிருந்த ஜீவகன் முன்னே வீழ்ந்தது. விமலை விரைந்து வந்து அந்தப் பந்தை எடுத்தாள். ஜீவகன் அவளுக்கு எதிர்ப்பட்டான். அவனைக் கண்டதும், அவள், ‘இப் புண்ணிய புருஷன் மிகவும் உத்தம இலட்சணங்களோடு கூடியவனா யிருக்கின்றான்; எவர் செய்த தவத்தால் தோன்றியவனோ!’ என்று அதிசயித்துத் திரும்பி மாளிகைக்குள் போய் விட்டாள். ஜீவகனும் அவளைக் கண்டு, ‘இவள் மகா உத்தமி’ என்று வியந்து அந்த விமலையின் தந்தையாகிய சாகரதத்தனுடைய மாளிகைக்கு வெளிப் புறத்தில் உட்கார்ந்து இளைப்பாறி, மனத்தில் ஏதேதோ பல எண்ணங்களைச் சிந்தித்துக் கொண் டிருந்தான்.

விமலை பிறந்த காலத்தில் ஜாதகங் கணித்தவர்கள், “இவளுக்குரிய நாயகன் உன் வீட்டின் வெளிப் பக்கத்தில் வந்து ஒரு காலத்தில் தங்குவான் ; அவன் வந்திருந்த மாத்திரத்தில் நெடு நாட்களாக விலையாகாமலிருக்கும் உன் சர

க்குகள் விலையாகும்; அக் குறிப்பால் அவனை உணர்ந்து அவனுக்கே இவளை மணஞ் செய்து கொடு" என்று சாகரதத்தனுக்குக் கூறி யிருந்தார்கள். அதன்படியே, ஜீவகன் மேற் கூறியவாறு போய் உட்கார்ந்த வுடனே, சாகரதத்தன் கட்டுப் பட்டிருந்த தன்னுடைய சரக்குகளை ஆறு கோடி பொன்னுக்குமேல் விற்றான். அங்ஙனம் சரக்குகள் விலையாகவே அவன் சோதிடர்கள் கூறியபடி விமலைக் குரிய நாயகன் வந்திருப்பா னென்று நிச்சயித்து, வெளியில் வந்து பார்த்து ஜீவகனைக் கண்டு ஆனந்த மடைந்து, உள்ளே அழைத்துச் சென்று ஆசனத்தில் உட்கார வைத்து, அவனை நோக்கி, "ஐயனே! என் மனைவியாகிய கமலைக்கு விமலை யென்னும ஒரு பெண் பிறந்தாள்; அவள் பிறந்த வுடனே என் வியாபாரச் சரக்குகள் விலை யாகாமல் வீட்டிற் கட்டுப்பட்டன. அப்போது அவளுக்கு ஜாதகம் செய்த ஜோதிடர்க ளிடம் அதற்குக் காரணங் கேட்டேன்; அவர்கள், என்னை நோக்கி, 'இதனால் உனக்கு நன்மையே வரும்; எப்படி யெனில், உன் மகளுக்குரிய நாயகன் ஒரு காலத்தில் உன் வீட்டின் வாயிலிலே வந்திருப்பான்; அப்போது இந்தச் சரக்குகள் நல்ல விலைக்குப் போகும்; நீஅவனை உணர்ந்து அவனுக்கே இப்பெண்ணைமணஞ் செய்து கொடுத்து விடு' என்று கூறினார்கள். அப்படியே நீர் இங்குவந்திருந்தவுடன் காரியம் நடந்தது; ஆதலின் என் மகளை நீரே மணஞ் செய்து கொள்ள வேண்டும்" என்று கூறினான்.

ஜீவகன், 'இது விதி கூட்டி வைத்த காரியம்' என்று மகிழ்ந்து அதற் கிசைந்தான். பின்பு சாகரதத்தனும் அவனுடைய சுற்றத்தார்களும் சேர்ந்து பல வாத்தியங்கள் முழங்க ஜீவகனுக்கும் விமலைக்கும் கலியாணத்தை முடித்

தார்கள். ஜீவகன் அங்கே இரண்டு தினங்கள் தங்கி விமலையிடத்தும் அவள் சுற்றத்தாரிடத்தும், “தோழரைக் கண்டு விரைவில் மீண்டு வருவேன்” என்று சொல்லி விடைபெற்றுக்கொண்டு திரும்பி நந்தட்டன் முதலியவர்களிடம் சென்றான்.



# அத்தியாயம்-14

## சுரமஞ்சரி கலியாணம்

தங்களை விட்டுப் பிரிந்து சென்ற ஜீவகன் திரும்பி வராததால் வருந்தி யிருந்த தோழர்கள், மணக்கோலத் தோடு வந்த அவனைக் கண்டு மகிழ்ந்து, "நீர் மணஞ்செய்த பெண் யாவள்? அவள் பெயரென்ன?" என்று வினவ, ஜீவகன் விமலையின் பெயரையும், கலியாணம் நடந்த விவரத்தையும் கூறினன். அம் மணம் அவ்வளவு விரைவில் நிறைவேறியதைப் பற்றி அங்குள்ள எல்லோரும் வியந்து, 'இவரே ஆடவர்க்குத் திலகம்போன்றவர்' என்று அவனைக் கொண்டாடினார்கள். அப்போது புத்திசேனன் தனக்கு உண்டான மகிழ்ச்சியால் ஜீவகனைப் பரிகசிக்கத் தொடங்கி, அவனை நோக்கி, "நற்குடியிற் பிறந்த பெண்கள், தங்களுடைய தாய் தந்தையர் தங்களை எவ்விடத்திற் கொடுத்தாலும் அதற்கிசைந்து, மணவாளர்கள் தங்கள் மனதிற்கு இசையாதவர்களாயினும் அவர்களுக்கு இணங்கி வழிபடுவார்கள். கன்னியர்பருவ மடைந்தால் தாய் தந்தையர் விரைவில் அவருக்குமண முடிக்க வேண்டும்; இல்லையேல் பாவ முண்டாகும்; ஆதலால் அவர்கள் தாமே பிரயத்தனப்பட்டுத் தகுதியற்ற இடத்திலும் பெண்களை மணஞ்செய்து கொடுத்துத் தங்கள் பாரத்தை நீக்கிக் கொள்வார்கள்; இந்தக் கலியாணமும் அப்படியே நிறைவேறி யிருக்கின்றது; இதுபோலவே நீர் இன்னும் பல இடங்களில் பல கலியாணங்களை முடித்திருக்கின்றீர்; ஆயினும், இவற்றா லெல்லாம் நீர் சிறந்தவராக மாட்டீர்; நீர் இப்பொழுது மணஞ் செய்து வந்த இவ்வூரிலேயே சுரமஞ்சரி என்னும் ஒரு மடந்தை யிருக்கின்றாள்; அவளோ ஆடவர் பெயரைக் காதினாற்கேட்கவும் வெறுப்புறுவாள்; நீர் அவளை மண செய்து விடுவீராஞல்

உம்மை, 'ஆடவர் திலகர்' என்று எல்லோரும் கொண் டாடுவோம்" என்று கூறினன்.

அதைக்கேட்டு ஜீவகன், அவனை நோக்கி, "நான் அவ் வாறே செய்யேனாயின் புருஷரில் மிகவும் தாழ்ந்தவனாவே ன்; இவ்வூரில்சித்தசகோட்ட மென்னும் கோவில் ஒன்று உளது;நீ காளைச்சென்று அக்கோவிலிலுள்ள விக்கிரகத்தின் பின் மறைந்திருப்பாயானால், அவள் அக்கோவிலில் வந்து என்னை மணமகனாகஅடைதற்கு அத்தெய்வத்தினிடம் வரங் கேட்கும்படி நான் செய்வேன்" என்று கூறி ஒரு விருத்தப் பிராமண வடிவுகொண்டு சுரமஞ்சரியிடம் சென்றான். அவன் உடம்பின் தோல் பாம்பின் தோலைப்போல் திரைந் திருந் தது;உடம்போ வில்லைப்போல் வளைந்திருந்தது; உரோமங் கள் ஒன்றொழியாமல் நரைத்திருந்தன; தலைவளைந்து நடுங் கிக்கொண்டிருந்தது; வஸ்திரமோ பல பீறல்களையுடையதா யிருந்தது; அவனுடைய உருவம், 'வயோதிகரில் இவனுக்கு மிஞ்சியவர் ஒருவருமிரார்' என்று பார்த்தோர் அதிசயித் துச் சொல்லக் கூடியதாயிருந்தது.

இவ்விதத் தோற்றத்தோடு சென்ற அவன் தண்டே பற்றுக்கோடாக அதனைக் கையிற் பிடித்து ஊன்றித் தள் ளாடி நடந்து தேகமெல்லாம் வியர்த்து மிகுந்த இளைப் புடன் சுரமஞ்சரியினது மாளிகையின் வாயிலிற் போய் நின்றான். அப்போது வாயில் காப்பாளர் அவனை நோக்கி, "நீர்யார்? எங்கு வந்தீர்?" என்று வினவ, அவன், "நானே இம் முதுமைப் பருவத்தில் மிகுந்த பசியால் இளைத்து வந் தேன்; இளமையில் பாற்சோறு ஒன்றுமே விரும்புவேன்; இப்பொழுதோ என்மீது இரக்கமுள்ள உத்தமிகள் எது கொடுத்தாலும் உண்பேன்" என்று கூறினன். அதைக்

கேட்டலும் வாயில் காப்பாளர், 'அந்தோ ! இவர் பசியால் இளைத்தனர் போலும்; உள்ளேசென்றால் ஏதேனும் வாங்கி உண்பார்' என்று மனமிரங்கி அவனை உள்ளே அனுப்பினார்கள். அவன் தளர்ந்த நடையோடு மகளிர் காக்கும் வாயிலருகே போய்ச் சேர்ந்தான்.

அவனைக் கண்டதும் அங்குக் காவலிருந்த பெண்கள், 'ஐயோ ! இங்கே எவனோ ஆடவன் வருகின்றானே' என்று அவசரமாக ஓடி வந்து அவனை நோக்கி, "வயோதிகரே! நீர் இங்கே வருதல் கூடாது; வந்தால் தீங்கு உண்டாகும்; ஆடவர் வாடையும் இங்கே அணுகுதல் கூடாதென்பதை நீர் உணரீர் போலும்; விரைவில் மீண்டு செல்வீராக" என்று சற்று வெறுப்போடு கூறினார்கள். அதற்கு விருத்த வேதிய வடிவு கொண்ட ஜீவகன் மறுமொழி யொன்றும் பேசாமல் ஊதினாலும் பறந்து போய்விடுபவன் போலத் தள்ளாடிக் கொண்டு அவர்கள் சமீபத்தில் போய் நின்றான். அங்ஙனம் நிற்கவே அப் பெண்க ளெல்லோரும், 'நாம் தடுத்தும் இவன் கேளாமல் இங்கு வருகின்றானே' என்று கோபங்கொண்டு வாளையும் அம்பையும் கைக் கொண்டு அவனைச் சூழ்ந்து பலவிதமான கடுஞ்சொற்களைக் கூறிப் பயமுறுத்தினார்கள். அதற்கும் அவன் ஒன்றுங் கூறாமல் மௌனமாக நின்றான். அப்போது அப் பெண்களிற் சிலர், "ஐயோ பாவம் ! இவரோ மிகவும் முதிர்ந்த வேதியராயிருக்கின்றார்;இவர் மனம் நோவும்படி நாம் கடுஞ் சொற்களைக் கூறுதல் தகாது; தொட்டாலும் இவர் இறந்துபோவர்; ஆதலின், நாம் இவரை ஒன்றும் செய்யலாகாது; நம் தலைவியிடம் சென்று இவர் தன்மையைக் கூறுவோம்; அவள் என்ன கட்டளையிடுகின்றாளோ அதன்படி நடப்

போம்" என்று கூறினார்கள். அதற்கு மற்றையரும் இசைந்தார்கள்.

பின்பு எல்லோரும் சுரமஞ்சரியிடம் போய், "எங்கள் தலைவியே! ஒரு விருத்தப் பிராமணன் நம் வாயிலில் வந்து நிற்கின்றான்; அவன் இப்பொழுதோ இன்னுஞ்சற்று நேரத்திலோ இறந்து விடக்கூடிய அவ்வளவு தளர்ச்சியை அடைந்திருக்கின்றான்; பசியால் இளைத்தவன் போலவும் காணப்படுகின்றான்; நாங்கள் இங்கே வரக்கூடாதென்று அவனைத் தடுத்தும், அவன் முதுமைப் பருவத்தால் அறிவு கெட்டுப்போயிருப்பதால் எங்கள் சொல்லைச் செவிக்கொள்ளாமலும் மறுமொழியொன்றும் பேசாமலுமிருக்கின்றான்; அவன் பொருட்டு யாது செய்யத்தக்கதோ அதனை நீ தெரிவிப்பாயாக" என்று கூறினார்கள்.

சுரமஞ்சரி, "அவன் அத் தன்மையனாயிருந்தால் அவனை நானே வந்து பார்க்கின்றேன். நீங்கள் முன்னே செல்வீராக" என்று அவர்களை அனுப்பிவிட்டு, இருக்கைவிட்டெழுந்து இளங்கொம்பு நடப்பது போல நடந்து பிராமணனிடம் சென்று, "கிழப் பிராமணனே! நீ என்ன காரியத்தைக் கருதிப் புறப்பட்டாய்?" என்று வினவ, அவன் "நங்கையே! நான் குமரியாற்றில் தீர்த்தமாடச் செல்பவன்" என்றான். சுரமஞ்சரி, "அந்நதியில் மூழ்குவதால் உண்டாம் பயன்யாது?" என்று வினவினாள். அதற்கு அவ் வேதியன், "அதில் மூழ்கினால் இம் முதுமைப் பருவம் நீங்கும்" என்றான். அது கேட்டுச் சுரமஞ்சரி நகைத்து, "பிராமணா! உனக்கு என்ன பைத்தியம் இது! குமரியாற்றில் மூழ்கி இளமை பெறுவாரும் உளரோ! இதை எவரேனும் கேட்டால் நகையார்களோ?" என்று சொல்ல,

அவன், "நீ சொல்கிறபடி மற்றையர் பெறுவது அருமை தான்; ஆயினும், என்னால் அடைதல் முடியும்" என்றான். அதற்குச் சுரமஞ்சரி, 'உலகத்தார் அறியும் மார்க்கத்தை யன்றி நீ வேறோர் மார்க்கத்தை உணர்ந்திருக்கின்றாயோ?" என்ன, அவன், ":அதில் எள்ளளவும் சந்தேகமே யில்லை' என்று கூறினான்.

அதன்மேல் சுரமஞ்சரி, "பட்டுப்போன மரம் பெருமழையால் தளிர்ப்பதா யிருந்தால் இவன் சொல்லு கிற காரியம் நிறைவேறும்; இவன் முதுமைப் பருவத்தா லும் பசி மிகுதியாலும் புத்தி மாறுபட்டு இவ்வாறு உளறுகின்றான்; ஆதலின், இவன் பசியிளைப்பை மாற்ற வேண்டும்" என்று அவ் வேதியனை அழைத்துக்கொண்டு மாளிகைக்குட் சென்று தன் சேடியரை நோக்கி, "தோழி யரே! இவ் வேதியனுடைய முதுமைப் பருவமும் பசி யிளைப்பும் மிகப் பரிதபிக்கக் கூடியனவா யிருக்கின்றன; நாம் கொண்ட நியமத்தை யனுசரித்து இவன் மீது பக்ஷம் செலுத்தா திருப்போமாயின் மிகுந்த பாவ முண்டாகும்; ஆதலின் நீங்கள் விரைவில் உண்டி சமைத்துக் கொண்டு வாருங்கள்; இவ் விருத்தனுக்கு அதனை ஊட்டி இவனு டைய இளைப்பைப் போக்க வேண்டும்; அவ்வாறு செய்யின் நமக்கு மிக்க புண்ணிய முண்டாகும்" என்று கூறினாள். அவர்கள் அவ்வாறே உணவு சித்தப்படுத்தினார்கள். பின்பு சுரமஞ்சரி அவ்வேதியனை நன்னீரால் தைலஸ்நானஞ் செய் வித்து, அவனுக்கு நல்ல வஸ்திரத்தையும், பொற் பூணூலை யும், பவித்திரத்தையும் கொடுத்து, ஆசன மிட, அவன் அவற்றை அணிந்து அவ்வாசனத் தமர்ந்தான். பெண்கள் அவனுக்கு முன்னே பொற்கலத்தையும், பக்கத்தட்டுக்களை யும் பரப்பி அறுசுவையோடு கூடிய உணவு படைத்தார்

கள். விருத்த வேதியன், "இவ்வளவு சுவையுள்ள உண்டியை நான் எங்குங் கண்டதில்லை" என்று சந்தோஷித்து அவ் வுணவை உண்டான். உண்டு முடிந்தபின், மாதர்கள் மலர் கலந்த வாச நீரை அவனுக்கு வாய் சுத்தி செய்யும் பொருட்டுக் கொடுத்து, நீர் கொப்பளித்து உமிழும் பாத்திரத்தை யேந்தினார்கள். அவன் அந் நீரால் வாயைச் சுத்தி செய்து கொண்டு, அதன் மேல் அவர்கள் தக்கோலம், நிம்பூ, இலவங்கம், பச்சைக் கர்ப்பூரம், சாதிக்காய் என்னும் ஐந்து வஸ்துக்களால் கூட்டிய பஞ்ச முக வாசத்தோடு வெற்றிலை பாக்கையுங் கொடுக்க, அவற்றை வாங்கி வாயி லடக்கி மென்றுகொண்டு மற்றோ ராசனத்தில் உட்கார்ந்தான்.

அங்ஙன மிருந்த பின்பு, சுரமஞ்சரி அந்தக் கிழப்பிராமணனை நோக்கி, "வேதியனே! நீ எத் தொழிலில் தேர்ச்சியடைந் திருக்கின்றாய்?" என்று சில கேள்விகளைக் கேட்க, அவன் அவற்றிற்கு ஏதேதோ விடைகூறி விட்டு, அயர்ந்து நித்திரை செய்பவன் போலத் தூங்கி விழ்ந்து தலையைக் கீழே சாயவிட்டு, அவளை நோக்கி, "பெண்ணே! 'உண்ட மயக்கம் தொண்டர்க்கு முண்டு' என்றபடி எனக்கு நித்திரை வருகின்றது; இங்கே படுக்கலா மென்றாலோ வாடைக் காற்று மிகுந்திருக்கின்றது; அதனால் என் நெஞ்சு நோவும்; அவ்வாறாயின் நான் சிறிது பொழுதில் இறந்து போவேன்; இதற்கென்ன செய்வேன்" என்று வருந்தினான். அவ் வருத்தங் கண்டு சுரமஞ்சரி சகியாளாய் அவன் மீது இரக்கமுற்று அவனைத் தன் கட்டிலில் படுக்க வைத்து உபசரித்தாள். சூரியன் அஸ்தமிக்க இராக்காலந் தோன்றிச் சந்திரிகையும் வீசிற்று.

அத்தருணத்தில் விருத்தப் பிராமண வடிவங்கொண்டு கட்டிலில் படுத்திருந்த ஜீவகன் ஒரு கீதத்தை இனிமையுண்டாகுமாறு பாடினன். அதனை அங்குள்ளவர்கள் கேட்டவுடன், 'இக் குரல் சித்தசனுடைய குரலோ! இப் பாடலைப் பாடுவோன் இயக்கனா யிருத்தல்வேண்டும்; இல்லை இல்லை, இது ஜீவகன் பாடலே' என்று அதிசயித்துப் பலவாறு பேசிக்கொண்டு அங்கே நெருங்கி ஜீவகன் காணப்படாமையால் மயங்கினர்கள். பின்னர் ஜீவகன் சாம கீதத்தை நன்றாகப் பாடினன். வேடன் நடிப்பாக இடும் ஓசையைக் கேட்டுத் தம் இனத்தின் ஓசையென்று நினைத்து ஓடும் மயிற் கூட்டங்கள் போல அச் சாம கீதத்தைக் கேட்டவுடன் பெண்களெல்லோரும் வந்து சூழ்ந்தார்கள். அப்பொழுது சுரமஞ்சரியும் அங்கே வந்து அப் பாடலை விருப்பமாகக் கேட்டாள். அப்போது கிழவனைப்போன் றிருந்த ஜீவகன் சுரமஞ்சரியையும் தோழியரையும் நோக்கி, "நீங்கள் இங்கே ஆடவரைக் காணுவதில்லையென்ற விரதங்கொண் டிருந்தும் நான் மிகுந்த கிழவனா யிருப்பதை முன்னிட்டு என்னிடம் வெறுப்புறாது அணுகி நிற்கின்றீர்கள்; நான் இளமைப் பருவமுடையவனா யிருந்தால் இவ்வாறு நெருங்கமாட்டீர்கள்; ஆனல் என்னையன்றி ஓர் இளைஞனை இங்கே நீங்கள் கண்டால் என்ன செய்வீர்கள்?" என்ன, அதற்குத் தோழியர், "அவர் பெயரும் இங்கே கூறலாகாது; அவரைக் காணின் நாங்கள் ஒழித்து விடுவோம்" என்று கூறினர்கள். அது கேட்டு ஜீவகன், "நீங்கள் ஏன் இத்தகைய விரதங் கொண்டீர்கள்? உங்கள் தலைவியை எவரும் மணம்பேசாமல் இகழ்ந்திருக்கக் கூடும்; அதனாலேயே நீங்கள் இவ்வாறு ஆடவர்மீது வெறுப்புற்றிருக்கின்றீர்களென்று நான் நினைக்கிறேன்" என்ன அவர்கள், "ஆம்; அஃது உண்மையே; எங்கள் தலைவியின்

சுண்ணத்தை முன்னொரு காலத்தில் ஜீவகர் பழித்தார்; அந்த வெறுப்பினாலேயே இவள் இந் நியமம் பூண்டாள்" என்று சொன்னார்கள்.

அது கேட்டு ஜீவகன், "இவளுக்கு வெறுப்பைச் செய்த அவன் இறந்து விட்டதாக நான் கேள்விப்படுகின்றேனே" என்ன, அவர்கள், "அவர் இறக்கவில்லை; காந்தருவ தத்தையின் மாளிகைக்குத் தூதனுப்பி நாங்கள் இதனை யுணர்ந்தோம்; உம்முடைய பாடல் அவர் பாடலைப் போன்றிருக்கின்றது; ஆதலின் நீர் இன்னும் ஒரு கீதத்தைப் பாடுவீராக" என்று அவனை வேண்டினார்கள். அவ்வாறே அவன் மற்றொரு இனிமையான கீதத்தைப் பாடினான். அதைக் கேட்டவுடனே சுரமஞ்சரி, 'இது ஜீவகசாமியின் பாடலைப் போன்றே யிருக்கின்றது; அவர் நம்மை இகழ்ந்தாராயினும் நாம் எப்படியேனும் அவரையே மணமகனாக அடைதல் வேண்டும்' என்று சிந்தித்து மறுநாள், அந்தண வடிவங்கொண்டிருந்த ஜீவகனையும் அழைத்துக்கொண்டு தன் தோழிமாருடனே சித்தச கோட்டத்தை யடைந்து, தான் வரம் வேண்டுவதை ஜீவகன் உணராதபடி அவனை ஓர் மறைவிடத்தில் வைத்துவிட்டுத் தான் மாத்திரம் தெய்வத்தின் முன் சென்று முறைப்படி முழந்தாளிட்டு வணங்கி, "தாமரைக் கண்ணையுடைய சித்தச தேவனே! நீ எனக்கு ஜீவக சாமியை மணமகனாகத் தரல்வேண்டும்; அங்ஙனம் தரின் உனக்கு மகரக் கொடியும், மல ரம்பும், கரும்பு வில்லும், தேரும் நான் தருவேன்" என்று வரம் வேண்டினாள்.

அத் தருணத்தில் ஜீவகன் சொல்லிவைத்தபடி அங்கே மறைந்திருந்த புத்திசேனன், அத் தெய்வம் கூறுவது

போலவே, "பெண்ணே! நீ விரும்பியபடியே ஜீவகனை அடைவாய்; இனி நீ வருந்தாமே செல்வாயாக" என்று கூறினன். இந்த வார்த்தைகளைக் கேட்டவுடனே சுரமஞ்சரி தெய்வமே கூறியதாக நினைத்து மனமகிழ்ந்து பின்னும் பன்முறை தெய்வத்தைத் துதித்து வணங்கி மீண்டாள். அப்போது மறைவிடத்தி லிருந்த ஜீவகன், தன் உண்மை வடிவைப்பெற்று அவளுக்கெதிரே நின்றான். அவனைக் கண்டதும் சுரமஞ்சரி மிகுந்த ஆச்சரியமும் நாணமும் உடையவளாய்த் தலை குனிந்து நின்றாள். அவள் நிலையைக் கண்ட ஜீவகன் அவள் மன மகிழுமாறு சில வார்த்தைகளைக் கூறி அவளை அனுப்பினன். அவள் தன் தோழியருடனே மாளிகைக்குச் சென்றாள். ஜீவகனும் புத்திசேனனும் தோழ ரிருக்கு மிடத்தைச் சேர்ந்தார்கள். தோழர்கள், நடந்ததை யுணர்ந்து ஜீவகனை ஆடவர் திலகனென்று புகழ்ந்தார்கள்.

அதன் மேல் ஜீவகனுடைய தோழர்கள் அவனுக்குச் சுரமஞ்சரியைத் தரவேண்டுமென்று மணம் பேசுதற்குஅவளுடைய தாய் தந்தையரிடத்தே தூதரை அனுப்பினார்கள். தூதர்கள் சென்று சுரமஞ்சரியின் தந்தையாகிய குபேரதத்தனிடம் அதனைத் தெரிவிக்க, அவன், தன் மகள் ஆடவரனுகா விரதம் பூண் டிருந்ததை நினைத்து, "நம் மகளோ கொடிய விரதம் பூண்டிருக்கின்றாளே; இப்பொழுது ஜீவகசாமியே அவளை விரும்பி யிருக்கின்றார்; அவரோ நமக்குக் கிடைக்கத் தக்கவ ரல்லர்; இதற்கு நாம் என் செய்வது?" என்று, மகள் அப்பொழு திருந்த நிலைமையை உணராதவனாய்க் கவலை யுற்றுப் பின்னர் அவளுடைய எண்ணத்தைத் தன் மனைவியாகிய சுமதியாலும், தோழியராலும் அறிந்து, "இது நமக்குப் பாற் கடலிலே தேன்மாரி

பெய்தது போலாயிற்று'' என்று மகிழ்ந்து, சுற்றத்தார்க் கெல்லாம் அதனை அறிவித்து அறு சுவையோடு கூடிய உணவுகளைச் சித்தப்படுத்தி எல்லோர்க்கும் விருந்திட்டு, பல வாத்தியங்களும் முழங்க நல்ல நாளிலே ஜீவகனுக்குச் சுரமஞ்சரியை மணஞ்செய்து கொடுத்து, அவளுக்கு வீணை வித்தையிலும் நர்த்தனத்திலும் சிறந்த நாற்றெட்டுப் பெண்களையும், ஒன்றரைக் கோடி பொன்னையும், மூன்று ஊர்களையும் சீதனமாகக் கொடுத்தான்.

ஜீவகன், கலியாணம் நடந்த தினம் மாமனார் வீட்டில் மகிழ்ந்திருந்து, மறுநாள் சுரமஞ்சரியிடம், ''எனக்குச் சில அவசியமான காரியங்க ளிருக்கின்றன; அவை நிறைவேறும் வரை நான் உன்னைப் பிரிந் திருந்து பின்பு சேர்வேன்; நீ இதற்காக வருந்தாதே'' என்று சொல்லி விடை பெற்றுக் கொண்டு தன் தோழருடனே புறப்பட்டுத் தன்னுடைய மாளிகையை அடைந்து, 'என் மகன் ஜீவகன் எங்குளனோ' என்று இரவும் பகலும் ஓயாமல் அழுது வடிகின்ற கண்ணீராலே கை கழுவி வருந்தியிருந்த சுநந்தையையும் கந்துகனையுங் கண்டு வணங்கி அவர்களுடைய வருத்தத்தைப் போக்கினன். அவர்கள் அளவற்ற மகிழ்ச்சியுடையவர்களாய்ச் சுற்றத்தார்க்கும் ஜீவகன் வரவை உணர்த்தினர்கள். அவர்களெல்லோரும் ஓடி வந்து, 'நம்பியும் வந்தானோ!' என்று அவனைத் தழுவிக்கொண்டு கண்ணீர் விட்டழுதார்கள். அவ் வழுகுரலைக் கேட்டவுடனே கந்துகன், 'இதனால் நம் ஜீவகன் இரகசியம் வெளிப்படும்; அங்ஙன மாயின் கட்டியங்காரனால் தீங்குண்டாகும்' என்று பயந்து, அவர்களை நோக்கி, ''அழு குரலை நிறுத்தி விடுங்கள்; இதனால் கேடு சம்பவிக்கும்'' என்று கூறினன். அது கேட்டு அவர்கள் அழுகையை அடக்கினர்

கள். விட்டிலுள்ளவர்க்கு அழுகை அடக்க முடியாமற் போனபடியால் அவர்கள் கட்டியங்காரனுக் கஞ்சி, "இன்று தான் எங்கள் தந்தையார் இறந்த நாள்" என்று வேறொரு காரணஞ் சொல்லிக்கொண்டு அழுது, பின்பு அழுகை ஒய்ந்து எல்லோரும் மகிழ்ச்சி யடைந்தார்கள்.

அதன்மேல் காந்தருவதத்தை ஜீவகனைக் கண்டு மகிழ்ந்து அவனிடத்தில், "சுவாமி! உம்மைக் காணாததால் குணமாலை உயிர்விடும் நிலைமையி லிருக்கின்றாள்; ஆதலின் நீர் விரைந்து சென்று அவளுடைய துயரத்தைப் போக்குவீராக" என்றாள். உடனே ஜீவகன் குணமாலையிடம் சேர்ந்தான். அவள் ஜீவகனைக் கண்டதும், "அடிகளே! ஏன் மீண்டும் இந்தப் பாவியைக் காண வந்தீர்கள்? மணமுடித்ததும் தங்களுக்குப் பெருந் தீங்கை விளைவித்த என்னையுங் காணலாமோ" என்று முகத்தில் அறைந்து கொண்டழுதாள். அவள் வருத்தத்தைக் கண்ட ஜீவகன் மனஞ் சகிக்காமல் அவளை நோக்கி, "குணமாலா! நீ வருந்தாதே; நீ செய்த நல்வினையினாலேயே நான் எல்லா ஆபத்துக்களினின்றும் நீங்கினேன்; இனி வருவது நமக்கு நல்ல காலமே" என்று கூறி அவளைத் தேற்றி அங்கே ஒரு நாளிருந்து, மறுநாள் கந்துகனிடம் மேல் நடக்க வேண்டிய காரியங்களைக் கூறிக் குதிரை வாணிகன்போல வேடந்தாங்கித் தன் சுற்றத்தார் சூழ அந் நகரைவிட்டு வெளியேறி விந்தய தேசத்தை நோக்கிச் சென்றான்.



## அத்தியாயம்-15

## ஜீவகன் மண்மகளை அடைதல்

மேற் கூறியபடி இராஜமாபுரத்தினின்றும் வெளி யேறிய ஜீவகன், தன் படைகளுடன் ஏமாங்கத நாட்டைக் கடந்து, மருதம், நெய்தல், முல்லை, குறிஞ்சி, பாலை ஆகிய ஐந்து நிலங்களையுந் தாண்டி, மிகவும் குளிர்ச்சிபொருந்திய ஒரு நதிக் கரையிலே தங்கி இளைப்பாறிப் பின்னர் சகல வளங்களும் நிறைந்த விதைய தேசத்தை அடைந்து, தன் வரவை மாமனாகிய கோவிந்தனுக்கு அறிவிக்கும்படி முன் னே ஓர் ஆள் அனுப்பினான். அவன் அவ்வாறே சென்று தெரிவித்த மாத்திரத்தில் கோவிந்தன் மகிழ்ந்து, தன் நாட் டிலுள்ள எல்லோரும் சென்று ஜீவகனை எதிர்கொண் டழைக்கும்படி கட்டளை யிட்டு அதனை நிறைவேற்று தற்குக் காரியக் காரர்களையும் ஏவினான். அவர்க ளெல்லோரும் முல்லை நிலத்தே சென்று ஜீவகனை எதிர் கொண் டழைத்துவந்தார்கள். நகர மாந்தர்கள் தங்கள் தங்கள் மாளிகைகளையும், தெருக்களையும் அலங்கரித்து ஜீவகன் வரவை எதிர்பார்த் திருந்தார்கள். அத் தருணத் தில் ஜீவகன் யானைமீதேறி நகரத்தின் வீதியிற் சென்றான். அப்போது ஆங்காங்குள்ள மனிதர்கள் அவனைக் கண்ட தும, "எங்கள் திருவே வருக; திருமாலே வருக; மால் மகனே வருக; காளையே வருக; வித்தியாதர குமாரனே வருக; இயக்கனே வருக; அருகனே வருக; வீரனே வருக" என்று புகழ்ந்து வரவேற்றார்கள். பலர் வாழ்த் தினார்கள்.

இவ்வாறு பலருங் கொண்டாட ஜீவகன் வீதிகளைக் கடந்துபோய் அரசன் மாளிகையைச் சேர்ந்தான். அரண் மனையி லுள்ள பட்டத்துத் தேவிய ரெல்லோரும் அவனைக்

கண்டு அளவிலா மகிழ்ச்சி யடைந்தார்கள். அத் தருணத்தில் அவன் யானையை விட்டிறங்கிப் போய் மாமன் அடியில் வீழ்ந்து வணங்கினன். கோவிந்த ராஜன் தன் மருமகனைத் தழுவி, அவனுக்கு நேர்ந்த விபத்துக்களைப் பற்றி மனம் நொந்து கண்கலங்கி அழுது, தன் கண்ணீர் அவன்மார்பை நனைக்கும்படி நின்றான். அவன் அவ்வாறு அழுவதைக் கண்டு அந்தப்புரத்து மாதர்க ளெல்லோரும் அழுதார்கள். சச்சந்தன் மரணத்தை நினைத்தும், ஜீவகனுடைய பரிதாப நிலைமையை நோக்கியும் அவ்வாறு அரண்மனையிலுள்ள எல்லோரும் அழவே, விஜயமாதேவி வந்து அவர்களுக் கெல்லாம் தேறுதல் கூறி, அழுகையை அமர்த்தினள்.

அதன்மேல் கோவிந்த ராஜன், ஏத்தாளிகள் புகழவும், கட்டியக்காரர்கள் கட்டியங் கூறவும் மிகவும் அலங்கரிக்கப் பட்ட கொலுக்கூடத்திற் சென்று அமர்ந்தான். அடைப்பை முதலியவற்றை ஏந்திய மாதர்கள், அவற்றை ஆசனத் தருகே வைத்து நீங்கினர்கள். அத் தருணத்தில் ஜீவகன் தன் மாமனோடு காரியங்களைப்பற்றி யோசித்தற்கு அமைச்சருடனே போய் அவன் பக்கத்தில் அமர்ந்தான். கோவிந்த ராஜனும், ஜீவகனும், அமைச்சரும் மேல் நடக்க வேண்டிய காரியங்களைப் பற்றிக் கலந்து பேசிச் சில விஷயங்களை முடிவு செய்தார்கள். ஜீவகனுக்கும், அவன் தோழர்க்கும் கோவிந்தராஜன் வேண்டிய ஆபரணங்களையும், படைக்கலங்களையும் கொடுத்து, தன் மனைவியாகிய புதவியென்பாள் பெற்ற ஸ்ரீதத்தனுக்கு நல்ல நாளிலே பட்டங் கட்டி அரசுரிமையை நல்கினன்.

கோவிந்தன் இவ்வாறு செய்திருக்குங் காலத்தில் ஒரு நாள் கட்டியங்காரன், 'சச்சந்தன் அரசுரிமையைப் பெறு

தற்குக் கோவிந்தனே உரியவனாதலின், நாம் அவன்மைத்துனனுக்குச் செய்த தீங்குகளை நினைத்து அவனும் நம்மீது பகைகொண்டிருப்பான்; ஆதலால் அவனுடைய கருத்தை நாம் உணரவேண்டும்; உணர்ந்து அவனையும் வஞ்சனையாகக் கொல்லவேண்டும்' என்று கருதி அவனிடம் நேயங் காட்டுபவன்போல வஞ்சகமாக அவனுக்கு ஓர் ஓலை எழுதிஅனுப்பினான். அதனைத் தூதுவன் கோவிந்தனிடம் கொண்டுவந்து கொடுத்தான். கோவிந்தன் அதைப் பிரித்து வாசிக்கும்படி விரிசிக னென்பானுக்குக் கட்டளையிட, அவன் அவ்வாறே அதனை வாசித்தான். அதில், "கட்டியங்காரன் ஓலையை விதையத்தார் வேந்தன் காண்க: என்மேல் ஒரு பொய்ப் பழி பரவி யிருக்கின்றது; அதனை உலகத்தாரெல்லோரும் மெய் யென்றே நினைத் திருக்கின்றனர்; நீயும் அவ்வாறே நினைத் திருப்பாய்; நான் என் உயிர்போகும்படி என்னுடைய மனத்தைப் பிளந்து உண்மையை வெளியிட்டாலும் உலகத்தார் என் சொல்லை மெய் யென்று நம்ப மாட்டார்கள்; ஆயினும், நீ ஒருவாறு நம்புவா யென்று நினைத்து நான் உன்னிடம் நடந்த விஷயத்தை வெளிப்படுத்த முன் வந்தேன்; அதனைக்கேட்பாயாக: ஒரு தினம் அசனிவேக மென்னும் பட்டத்து யானையானது மதங்கொண்டு கட்டுக் கடங்காமல் வெளியேறி நகரில் பல தீங்குகளை விளைத்தது. அதனைக் கண்டு நம் சச்சந்த மன்னர் அந்த யானையைஅடக்குமாறு பாகரை ஏவினர். அங்ஙனமே பாகர் செல்ல அசனிவேகம் அவர்களில் நூறுபேர்களைக்கொன்றுவிட்டது. அதன்மேல் மன்னர் தாமே சென்று அக்கரியை அடக்கி எறிக் கட்டுத்தறியில் சேர்த்துக் கட்டினார். அவ்வளவில் அந்த யானை அவரைக் கையால் வளைத்து அடியில் வீழ்த்திக் கொன்றுவிட்டது. நடந்த காரியம் இப்படியிருக்க நானே மன்னரைக் கொன்றதாக உலகத்தார் என்

மீது பொய்ப் பழியைச் சுமத்தி விட்டார்கள்; திடுமென மன்னர் இறந்ததால் அரசுக் குரியார் வருமளவும் 'நாம் அதனைக் காப்பாற்றுதல் முறைமை' யென்று இராஜ காரியங்களை நான் நடத்தி வருகின்றேன்; இனி இவ்வரசுக்குரியவர் நீரே; ஆதலின் நீர் விரைந்து வந்து இவ் வரசுரிமையைக்கைக்கொள்வீராக; அவ்வாறு செய்வீராயின் என்மீது உண்டான இந்த வீண்பழி நீங்கும்; உமக்குஎன்னுயிரையும் நான் தருவேன் ; எனக்கு இறைவர் நீரே" என்றவாசகங்கள் எழுதப்பட்டிருந்தன.

ஜீவகன் இவற்றையெல்லாம் கேட்டவுனே கட்டியங்காரன் வஞ்சக எண்ணத்தைக் குறித்துச் சிரித்து, அங்குள்ளவர்களை நோக்கி, "நூலில் வல்லவர்களே! இவனுடைய ஓலையை நோக்குமிடத்து இவன் தன்னுயிரைக் கொல்லும் பயனைத் தானே கையால் அழைப்பது போன்றிருக்கின்றது; இவன் நம்மை வஞ்சகமாக அழைக்கக் கருதினன்; இதுவே இவனை நாம் கொல்லுதற்குத் தக்க ஏதுவாயிருக்கின்றது ; இதையே நாம் வழியாகக் கொண்டு சென்று இவனைக் கொல்லவேண்டும்" என்று கூறினன். கோவிந்த ராஜனும், "இந்த இரகசியத்தை எவரும் வெளிப்படுத்த லாகாது; அவன் வஞ்சத்தால் நம்மைக் கொல்லக் கருதினன்; நாம் அவ்வாறே அவனைக் கொல்லக் கருதினேம்; ஆதலின், முதலில் அவனுடைய நட்பை விருத்தி செய்வதற்கான காரியங்களைச் செய்யும்படி சொல்லிப் பின்பு படைகூடும்படி நகரிலே முரசறைவிக்க வேண்டும்" என்று அங்குள்ளவர்களை நோக்கிக் கூறினன். அவ்வாறே முரசறைவோன் ஊரில் சென்று, "நம் காவலர் கட்டியங்காரன்மீது ஏற்பட்டிருந்த பகை நீங்கி அவனுடைன்உறவானார்; ஆதலின், அக் கட்டியங்காரனுக்குச் சந்தோஷ முன்

டாகும்படி, நம் நாட்டிலுள்ளவர் யாவரும் அளவற்ற நெல்லையும் பொன்னையும் இரண்டு நாட்டிலும் ஒக்க வழங்க வேண்டும்" என்று முதலிற் சாற்றிப் பின்பு "நம் மன்னர் இராஜமாபுரத்துக்குப் பிரயாணமாவதால் நாளையே நம் வீரர்களெல்லோரும் படைக்கலங்களைத் தாங்கிநால்வகைச் சேனைகளுடனும் வந்து அரண்மனை வாயிலிற் கூடவேண்டும்" என்று முரசறைந்தான்.

மறுநாள் அவ்வாறே படைகள் வந்து நிறைந்தன. கோவிந்தராஜன் மேல் மாடத்திலே வந்து நின்று படைகளை நோக்கினான். அப் படைகளில் சகல லக்ஷணங்களோடும் பொருந்திய பதினாயிரத் தறுநூறு யானைகள் நிறைந்திருந்தன; அவற்றில் ஏறியிருந்த வீரர்கள் போர்க்களஞ் சாப் புலியை நிகர்த்தவர்களா யிருந்தார்கள். உத்தம லட்ணங்களை யுடைய இலட்சத்து முப்பத் திராயிரம் குதிரைகள் வந்து கூடி யிருந்தன; அவற்றி லேறிய வீரர்களோ மகா சமர்த்தர்களா யிருந்தார்கள். பல தேயத்துக் குதிரைகள் பூட்டிப் பொன் முதலியவற்றால் அலங்கரிக்கப் பட்டிருந்த தேர்கள் இருபதினாயிரத் தறுநூறு வந்து சேரிந் திருந்தன; அத் தேர்களி லமர்ந்த வீரர்களோ தம் பகைவரைக் காலனுக்குத் தினமும் விருந்திடுபவரா யிருந்தார்கள். மனிதராற் செய்ய முடியாத பல அற்புத வீரச் செயல்களைச் செய்யும் நான்கு நூறாயிரம் காலாட்கள் யமனைப் போன்று பற்பல ஆயுதங்களைக் கைப்பற்றி வந்து கூடியிருந்தார்கள்.

இவ்வாறு கூடியிருந்த படைகளை ஏனாதி யென்னும்பட்டத்தைப் பெற்று அதற்கு அறிகுறியாக முத்திரை யிடப்பட்ட மோதிரத்தை யணிந்த சேனாதிபதி வகைவகையாகப்

பிரித்து எண்ணிக்கையுடன் அரசனுக்குக் காட்டினான். கோவிந்தனும் அவற்றைக்கண்டு, "இனி நமக்கு ஜெயமுண்டாவது நிச்சயம்" என்று சொல்லி மகிழ்ந்தான். அப்பொழுது சங்குகள் முழங்கின; முரசங்கள் கடலைப்போல் ஆர்த்தன, படைகள் செல்லும் வழியிலே சகுனப் பறவைகள் முறைப்படி பாய்ந்து நன்னிமித்தத்தைக் காட்டின; நிறைகுடம் முதலியன எதிர்ப்பட்டு நன்மையை அறிவித்தன; அரசனுக்கு வலக் கண் பன்முறையும் துடித்தது.

இவ்வித நன்னிமித்தங்களுண்டாக, கோவிந்தராஜன் தன் படைகளுடனும் ஜீவகனுடனும் புறப்பட்டு, அருவிகளையுடைய பல மலைகளையும், காடுகளையுங் கடந்து, ஏமாங்கத நாட்டை அடைந்து, இராஜமாபுரத்தின் மதிற் புறத்திலே தங்கினான். விதைய தேசத்தவர்கள் முதலிற் கூறியபடியே நெல்லையும் பொன்னையும் இரண்டு நாட்டினும் வழங்கினார்கள். கோவிந்தராஜன் மேற் கூறியபடி மதிற்புறத்தே போய்த் தங்கியவுடனே கட்டியங்காரனுக்குக் கேடு வருவதற்கு அறிகுறியாக அவனுடைய மனைவிமார்களின் வலக்கண் துடித்தது; அவர்கள் பொல்லாக் கனவு கண்டார்கள்; கட்டியங்காரனுடைய தேகத்தின் ஒளி கெட்டது; அவனுடைய அரண்மனையில் கூகை பகலிலிருந்து அஞ்சத்தக்க குரலாலே குழறிற்று; முரசு ஒலி அவிந்தது; ஆகாயத்தினின்று இரத்த மழை சொரிந்தது; மண்ணும் விண்ணும் அதிரும்படி பூகம்பமும் வெள்ளிடியும் உண்டாயின.

இவ்வித துர்நிமித்தங்கள் நிகழ்ந்தும் கட்டியங்காரன், ஜீவகன் வந்து தன்னைக் கொல்லுதற்கு நகர்ப்புறத்தே தங்கியிருக்கின்றானென்பதை உணராமல், கோவிந்தன்மட்டும் வந்திருக்கின்றானென்றெண்ணி, 'இனிநான்கோவிந்தனை

யுங் கொன்று ஜெயம் பெறுவேன்; என் நினைவு முடிந்தது; என்னைப் போன்ற சமர்த்தர் உலகில் எவருமிரார்' என்று தன்னைத் தானே துதித்து மகிழ்ந்து, யானை முதலிய சில வாகனங்களைப் பொற் படைகளாலே அலங்கரித்துக் கோவிந்த ராஜனுக்கு வஞ்சனையாகப் பரிசளிப்பவன் போன்று அனுப்பினான். கோவிந்தன் 'உன்னுடைய பெரும்படை என்னுடைய சிறு படையை நிகர்க்கும்' என்பது தோன்ற அவற்றிற்கு நிகராகத் தன்னுடைய யானைகளில் வாரிமனுஎன் என்னும் யானையையும், தேர்களிலே விஜயம் என்னும் தேரையும், குதிரைகளில் பவனவேகம் என்னும் குதிரையையும் அலங்கரித்து அவனுக்கு அனுப்பினான். கட்டியங்காரன் கோவிந்தனுடைய கருத்தை உணராமல், அவன் தான் அனுப்பியவற்றிற்கு இரட்டித்த சிறப்புடையவற்றை அனுப்பினானென்று மகிழ்ந்து அவனைப் புகழ்ந்தான்.

கட்டியங்காரன் இவ்வாறு நினைத்திருக்க, கோவிந்தன் அவனோடு கூடியிருந்தே அவனுயிரைப் போக்கும் உபாயத்தை நாடி, "என் மகள் இலக்கணை மிகவும் அழகுபொருந்தியவள்; நான் இங்கே திரிபன்றி யந்திரமொன்று செய்து அதனைச் சுழலவிடுவேன்; அதிலுள்ள மூன்று பன்றிகளும் ஒன்று சேருங்காலத்தில் அவற்றை ஒரே அம்பினால் எய்து வீழ்த்தினார்க்கு அப் பெண்ணைத் தருவேன்" என்று அங்கே முரசறைவித்தான். இதனைக் கேள்வியுற்றுப் பலதேசத்தரசர்களும் அங்கே வந்து கூடினார்கள். கோவிந்தன், ஓரிடத்தில் அடியில் வட்டமான சக்கரம் சுழலவும், அதன் மேல் உயர்ந்த உரலில் மூன்று பொற்பன்றிகள் இடத்தும் புறத்தும் மாறி மாறி ஒன்று சேர்ந்தும் பிரிந்தும் சுழலவும் யந்திரமொன்று அமைத்து, "சுழலுகின்ற சக்கரத்தில் ஏறி

நின்று அதனுடன் சுழன்று கொண்டே மேலே சுழலும் பன்றிகள் ஒன்று சேருங்காலத்தில் மூன்றையும் ஒரே பாணத்தால் வீழ்த்த வேண்டும்" என்று அவர்களுக்குத் தெரிவித்தான். அங்குக் கூடிய இராஜ குமாரர்களெல்லோரும் வில்லையும் ஒரு பாணத்தையும் கரத்திலேந்தி, சக்கரத்தினுள்ளே பன்றிகள் சுழல்வதை நோக்கி, "இந்த யந்திரம் மிகவும் அருமையானது; இப் பன்றிகளை எய்வாரே வீரராவார்" என்று அதிசயமுற்று நின்றார்கள்.

அவ்வாறு நின்றவர்களில் ஒவ்வொருவரும் எய்யத் தொடங்கினர்கள்: வினிதைவேந்தன், வில்லைவளைத்து ஒரு பன்றியின் நெற்றியிலே அம்புபட்டுத் தூகள் எழும்படி எய்தான். காம்பிலி தேசத்தரசன் சக்கரத்தில் ஏறி அதன் விசையினாலே எல்லா வேந்தரும் நகைக்கும்படி கீழேவீழ்ந்தான். கோசல நாட்டு மன்னன் ஆகாயத்தில் அம்பு தவறியோடிப் போகும்படி எய்தான். அவந்தி நாட்டரசன் வில்லை வளைத்து அது வளையாததால் அதனை ஒடித்து அம்பை மாத்திரம் கையிற் பிடித்து வாடி நின்றான். மகத தேசத்தரசன் எய்த அம்பு பன்றியைத் தீண்டி மீண்டு போயிற்று. கலிங்க தேயத்து மன்னன் எய்த அம்பை அந்தப் பன்றி யந்திரம் விழுங்கிவிட்டது; அதனால் அவன் முசம் வேர்த்து மேனி மெலிந்து மீண்டான். வாரணவாசியின் மன்னன் ஏவிய அம்பானது யந்திரத்திற் பட்டு அழுந்த மாட்டாமல் குதித்து, மனிதர் தம்மேல் வருமென்று பயந்தொதுங்கும்படி மண்ணிற் பாய்ந்து மறைந்தது. போதன புரத்தின் வேந்தன் சக்கரத்தில் ஏறி, நிற்க முடியாமல் கண் சுழன்று சோர்ந்து, பலரும் சிரித்து ஆரவாரிக்கும்படி நிலத்தில் வீழ்ந்தான். தென்னன் எய்த பாணம் பன்றியை நோக்கிச் சென்றது; அவனும் சக்கரத்தில் நிற்க

முடியாமல் நிலத்திலே காலை வைத்தான். விஜயன் என்பான் அம்பை வில்லில் தொடுத்து இழுத்த மாத்திரத்தில் வில் இரண்டாக முறிந்துபோயிற்று; அவன் ஒருகணத்தில் சக்கரத்தினின்றும் குதித்து விட்டான்; அங்ஙனம் குதித்தவன் மற்றொரு வில்லைப் பெற்று மீண்டும் சக்கரத்திலேறிப் பன்றி மூன்றும் ஒன்றுசேருங் காலத்தையறிந்து அம்பைத் தொடுத்து நாண் செவியிற் பொருந்தும்படி அதனை இழுத்தான்; அவ்வளவிலே நாண் அற்றது; அதனால் அவன் மேலும் பானமெய்யும் கருத்து நீங்கி இறங்கிவிட்டான். இவன் ஜீவகனிடத்திலே வில்வித்தை கற்றவனாயினும் ஊழ் இவ்வாறு தவறும்படிசெய்தது. இப்படியே இன்னும் மற்ற அரசர்களும் எய்து பன்றியை வீழ்த்த மாட்டாமல் அவமான மடைந்தார்கள். இவ்வாறே இவர்கள் எய்வதில் ஆறு நாட்கள் கழிந்தன.

பிறகு பகைவனைக் கொல்ல மறைந்திருந்த ஜீவகன் யானையை அலங்கரித்து அதன் மேல் ஏறி அக் கூட்டத்திற்கு வந்தான். அங்கே வந்து யானையின் மேலிருந்த கட்டியங்காரன் அவனைக்கண்டு, 'ஆ! என்ன புதுமையிது? இவன் இறந்து போய் விட்டானென்றல்லவா நாம் நினைத்திருந்தோம்; எவ்வாறு தவறி வந்தான்! மதனன் அக்காலத்தில் இவனைத் தவற விட்டு, கொன்றதாக நம்மிடம் பொய் கூறியிருக்கின்றான்; இவன் அநங்கமாலையின் கூத்தில் தனியாக வந்தகப்பட்ட காலத்தில் இவனைக் கொல்லாமல் விட்டது நம்மீது தவறு; அவ்வாறு செய்தது வலையிற் சிக்கிய புலியை உடனே கொல்லாமல் வாளுருவிவிட்டதை நிகர்க்கும்; என்னுடைய தவறே எனக்கு இப்போது துன்பஞ் செய்வதாயிற்று' என்று யானையின் நெற்றியிலே கையாலடித்து, அதிசயமும், திகிலும், கோபமும் உடையவனாயிருந்தான்.

அப்பொழுது ஜீவகன் யானையை விட்டு இறங்கி வில் நாரியை இழுத்துவிட்டுக் குணத்தொனி செய்தான். அவ்வள விலே பகைவர் வாழ்நாள் கெட்டது. முன்னே பன்றியை எய்ய முடியாமல் தோல்வியுற்ற மன்ன ரெல்லோரும் ஜீவக னைக் கண்ட மாத்திரத்தில் சூரியனைக் கண்ட நீலமலர்கள் போல முகவாட்டத்துடன் நெருங்கினார்கள். அபபு எய் யாத மன்ன ரெல்லோரும் தாமரை மலர்களைப்போல முகச் செழிப்புடன் நெருங்கினார்கள். அதன்மேல் ஜீவகன் பன்றி யந்திரத்தருகே சென்று, மூன்று பன்றிகளும் ஒன்று சேரும் சமயத்தை நன்றாக அறிந்துகொள்ள வேண்டி ஒரு முகூர்த்த நேரமளவும் அவற்றைப் பார்த்தபடியே பூமியில் அசைவற்று நின்றான். அப்படி நிற்கும்போது அங்கே பன்றிகளை எய்ய முடியாமல் நின்ற அரசர்களெல் லோரும், அவன் பாணப் பிரயோகஞ் செய்ய முடியாமல் கலங்கி நின்றானென்று நினைத்து, "இவன் சக்கரத்தின் மேலும் ஏறாமல், வந்த வழியே திரும்பியும் போகாமல் நிற் கின்றான்; திரும்பிச் சென்றால் நாமெல்லோரும் நகைப்போ மென்று நாணி இவ்வாறு நிற்கின்றான் போலும்; இப்படி வில்லை யூன்றி மௌனமாக நின்றால் பன்றிகள் அற்று விழுமோ" என்று அவனைப் பரிகசித்தார்கள். அதனால் ஜீவ கனுக்குச் சற்று கோப முண்டாயிற்று; அவ்வாறுண்டாகவே அவன் "இவர்கள் நம் திறமை யுணராமையால் இவ்வாறு நகைக்கின்றனர்" என்றுபுன் சிரிப்புடன் வில்லையும் அம்பை யும் ஏந்திச் செண்டுபோலச் சக்கரத்திற் குதித்தேறிச் சுழ ன்றுகொண்டே, இட மாகவும் வல மாகவும் மாறி மாறித் திரிந்த பன்றிகள் மூன்றும் ஒன்று சேர்ந்த சமயம் பார்த்து ஒரே பாணத்தை விரைந்து தொடுத்து அவற்றை அறுத்து வீழ்த்தினான். அவற்றோடு கட்டியங்கார னுடைய நல் வினையும் அற்று வீழ்ந்தது.

அவ்வாருகவே ஜீவகனுடைய சேனைகள் சந்தோஷத்தால் கடலொலி போல முழங்கின ; முரசங்கள் ஆர்ப்பரித்தன ; வேறு பல வாத்தியங்களும் சப்தித்தன. அத் தருணத்தில் கோவிந்த ராஜன், ஜீவகனுடைய வரலாற்றை எல்லோரும் அறியக் கூறினன். அங்ஙனங் கூறின வுடனே ஆகாயத்திலே ஓர் இயக்கன் தோன்றி, "ஜீவகன் என்னும் சிங்கம் கட்டியங்காரன் என்னும் யானையின் உயிரை விழுங்கும்" என்று கூறினன். இவற்றையெல்லாம் கேட்டவுடனே முன்னே ஜீவகனை வணிக புத்திரனென் றெண்ணியிருந்த கட்டியங்காரன், அவன் சச்சந்தன் புதல்வனென்பதையுணர்ந்து 'இப்படியா காரியம் நிகழ்ந் திருக்கின்றது' என்று திகிற் கொண்டு தைரியத்தை விடாதவனுய் ஜீவகனை நோக்கி, "சச்சந்தன் மகனே! நீ விஞ்சையர் படையையும், மற்றப் படைகளையும் துணை சேர்த்துக் கொண்டு வந்திருப்பதனுல் நான் அஞ்சேன் ; என் வல்லமையை உன் தந்தை அறிவான் ; நீ அறியாய் ; இனி யாம் போர் செய்யத் தொடங்குவோமானுல், உன்னையும், என்னை வஞ்சனையாற் கொலை செய்யத் துணிந்த உன் மாமனையும் நான் கொல்வேன்" என்று சினந்தான். அவன் மைத்துனனுகிய மதனனும், சூரியகாந்தக் கல்லானது சூரியனைக் கண்ட மாத்திரத்தில் எவ்வாறு நெருப்பைக் கக்குமோ அவ்வாறே ஜீவகனுடைய வெற்றியைக் கேட்டவுடன் இடிபோல் முழங்கிக் கோபித்தான்.

அதன் மேல் கட்டியங்காரன் போர் செய்தற்கு நால் வகைப் படைகளையுந் தொகுத்தான். அவன் மக்கள் நாற்றுவரும் உடனே வந்து கூடினர்கள். ஜீவகனுடைய படைகளும் போர்க்கு ஆயத்தமாகி எழுந்தன. அப்பொழுது இருவகைப் படைகளிலும் யானைகள் அணியாக

வகுக்கப் பட்டன; யானைப் படை வீரர்கள் ஆயுதங்களு டன் அவற்றில் ஏறினார்கள். போர்க் குரிய குதிரைகளும், தேர்களும் அலங்கரிக்கப் பட்டன; அவற்றின் வீரர்களும் கவசத்தை யணிந்து ஆயுதங்களுடன் அவற்றி லேறினார் கள். காலாட் படை வீரர்களும் வாள் வேள் முதலியபடை களைத் தாங்கி நெருங்கினார்கள். ஜீவகனுக்கு யானைப் படையும் தேர்ப் படையும் வகைக்கு நான்கரைக் கச்சமா யிருந்தன; குதிரைகள் ஏழு நூறாயிரமா யிருந்தன; காலாட் படைகள் ஏழு தேவ கோடியா யிருந்தன. கட்டியங்கார னுக்குத் தேரும் யானையும் வகைக்கு ஐந்தரைக் கச்சமா யிருந்தன; குதிரைகள் ஏழு நூறாயிரம்; காலாட்கள் ஏழு தேவகோடி.

இவ் வகைப் படைகள் அணிவகுக்கப் பட்டவுடன் பகைவர் பெண்கள் அலங்காரத்தைக் கைவிடவும், குதிரை களும் யானைகளும் படவும், மன்னர்கள் இறக்கவும், ஜீவ கன் கோபித் தெழுந்தான். அவனுடைய வேலும்புகைந் தது; முரசங்கள் முழங்கின; சங்குகள் ஆர்ப்பரித்தன; பம்பைகள் ஒலித்தன; சிறு சின்னங்கள் சப்தித்தன. இரண்டு கடல்கள் எதிர்ப்பன போல இரு திறப் படை களும் எதிர்த்தன. வில் வீரர்கள் ஆகாயம் மறையும்படி அம்புகளைச் சொரிந்தார்கள். வாள் வீரர்கள் கோபித்து வாள்களைக் கொண்டு வீசினார்கள். இவ் விருவகையாரின் போரிலும், காற்றால் பனம் பழங்கள் உதிர்வது போல வீர ர்களுடைய தலைகள் அறுபட்டு வீழ்ந்தன. குதிரைப் படை களும் குதிரைப் படைகளும் தம்மில் எதிர்த்தன; தேர்ப் படைகளும் அவ்வாறே பொருதன; யானைப் படைகளும் ஒன்றுட னொன்று மோதின. எங்கும் இரத்தப் பெருக் கெடுத் தோடியது. இப் படைகளின் போரினால், அநேக

வீரர்கள் யானைத் தந்தங்களால் தாக்கப்பட்டு இரத்தத்தில் மூழ்கி யிறந்தனர்; சிலர் தங்கள் குடுமியை இரத்த வெள்ளம் அலைத் தோடும்படி விழ்ந்து பேய்களுக்கு விருந்தாயினர். வெட்டப் பட்ட வீரரின் கழற்கால்கள், கடல் நீரிலே நீலச் சுருக்கள் பிறழ்வது போல இரத்த வெள்ளத்திலே பிறழ்ந்தன. அநேக யானைகள் அறுபட்டு விழ்ந்தன. இன்னும், பற்பல வீரர்கள் பற்பல விதமாக இறந்தனர். இறந்தவர்களுடைய குடலைப் பிடுங்கும் நரிகள் சங்கிலியை இழுக்கும் நாய்களைப்போற் றோன்றின. பட்டவர்களுடைய தோலைக் கௌவிக்கொண் டெழுந்த பறவைகள் படநாகத்தைப் பற்றி யெழுந்த கருடனை நிகர்த்தன. இன்னும், பல அரசர்கள் தாங்கள் ஏறியிருந்த பட்டத்து யானைகளுடனே போர்க் களத்தில் விழ்ந்து மடிந்தார்கள்.

இவ்வாறு போர் நிகழும் போது கட்டியங்காரன் மைத்துன னாகிய மதன னென்பான் வீராவேசத்தோடு போர் செய்து விஜயனது யானையின் நெற்றியிலே பாய்ந்தான். அப்போது விஜயன் அவனை வாளால் வெட்டி வீழ்த்தினான். அது கண்டு அம் மதனன் தம்பியாகிய மன்மதனென்பான் தேர் மேலே நின்று விஜயன் மேல் சரமாரி பொழிந்து ஆர்ப்பரித்தான். உடனே விஜயன் அவன் தேர்க் கயிற்றையும் வில்லையும் அறுத்தான். மன்மதன் நிலத்திலே பாய்ந்தான். சிறிது நேரத்திற்குள் விஜயன் அவனையுங் கொன்றான்.

புத்திசேனன் பல அரசர்களை வெற்றி கொண்டு திரிபுர மெரித்த சிவனை நிகர்த்து விளங்கினான். தேவதத்தன் மகத தேசத்தரசன் மேல் தன் படையைச்செலுத்தி அவன் படை ஓடிப படியால் மீண்டான். ஸ்ரீ தத்தன் கலிங்கர்

கோன் தலையை வாளால் வெட்டி விழ்த்தினன். சோவிந்த ராஜன், பாரட்ட னென்பவனோடு போர் செய்து அவனை அம்பாலே அடித்து வெற்றி கொண்டான். பல்லவ தேசத்தின் மன்னனாகிய உலோகபாலன் காம்பிலி மன்னனைக் கொன்றான். நபுல னென்பான் மகதையார் கோன் களிற்றின் உச்சியிலே தன் குதிரையைப் பாய்வித்து அவன் கண் இமைத்தமையால், 'இவன் வீரனல்லன்; ஆகையால் இவனை வெட்ட லாகாது' என்று அவனை விடுத்து மற்றொரு யானைமேல் தன் குதிரையைப் பாய்வித்தான். அக்களிற்றி லிருந்த குமரன் நிராயுதபாணியா யிருந்தமையால் அவனையும் விட்டு மீண்டான். விபுல னென்பான் மிக்க வீரத்தோடு போர் செய்யத் தொடங்கி ஒரு சிறந்த வீரனை விண்ணுலகிற் கனுப்பினன். பதுமுகன் காமுகனோடு சிறிது நேரம் போர் செய்து அவனைக் கொன்றான். அது கண்டு அவன் தம்பியாகிய சோமுக னென்பான் கொதித்தெழுந்து 'நான் என் தமையனைக் கொன்றவனைக் கொல்வேன்' என்று பதுமுகனோடு வந்தெதிர்த்தான். பதுமுகன் பல அம்புகளை ஏவி அவன் வாயையும் கையையும் கிழித்து அவனைக் கொன்று அவனுடைய யானையின் உயிரையும் போக்கினன். உலோகபாலன் சேவகனாகிய சிங்கநாத னென்பான் பல வீரர்களின் உயிரைப் போக்கி வெற்றி கொண்டான்.

அதன் மேல் கட்டியங்காரனுக்குப் படைத் தலைவனாகிய பூரணசேனன் என்பான் வில்லைக் கரத்தி லேந்தி வந்து சிங்கநாதனோடு எதிர்த்துக் கடும்போர் புரிந்தான். சிங்கநாதன் சிறிது நேரத்திற்குள் அவனை எமனுலகுக் கனுப்பினன். பின்னர் நந்தட்டனுடைய சேவகன் கட்டியங்காரனுடைய சேவக னொருவனோ டெதிர்த்து அவனை அழித்

தான். அதன் மேல் ஜீவகன் தோழர்களில் ஒருவனாகிய சலதிதி யென்னும் வீரன் ஜீவகன் பாதங்களை வாழ்த்திப் போர் செய்யத் தொடங்கி, அநேக யானைகளை வெட்டி வளைந்த வாளைத் தன் புண்ணிலேயே செருகியிழுத்து அதற்கு இளக்க முண்டாக்கி அவ் வளைவைப் போக்கிப் பல அரசர்களோ டெதிர்த்து அவர்களைத் தோல்வி யடையச் செய்து, விளங்கினான்.

பின்னர், மேற்கூறிய படி கோபித் தெழுந்த ஜீவகன், வில்லைக் கையி லேந்தித் தேரி லேறிப் பல வீரர்களும் ஆர்ப்பரிக்கப் போரைத் தொடங்கி, பாணங்களைப் பகைவர் மேற் சொரிந்தான். அவற்றால் இறந்தவர்கள் அளவிலர். இரத்த வெள்ளம் புரண்டு அரசர்களுடைய முடிகளையும், முரசங்களையும், குதிரைகளையும், யானைகளையும், தேர்களையும் இழுத்துக்கொண்டு சென்றது. அநேக யானைகள் கொம்பொடிந்து வீழ்ந்தன; அரசர்கள் போர் செய்ய வகை யறியாதவர்களாய் மயங்கி நின்றார்கள். காட்டில் நெருப்புப் பற்றும் பொழுது கவரிமான்கள் சிதறி யோடுவது போலக் கட்டியங்காரன் படைவீரரில் அநேகர் நெஞ்சுடைந்து ஓடினார்கள். கட்டியங்காரனுடைய அமைச்சனாகிய அரிச்சந்தன் என்பான், அவர்கள் அவ்வாறு ஓடுவதைக் கண்டு, அவர்களுக்கு முன்னே போய் நின்று, "வீரர்களே! குமரர்களாகிய நீங்களே இவ்வாறு ஓடுவீராயின் இனி வீரம் யாரிடத்துளது? கலைமானுடைய கொம்பு கழலுங் காலத்தில் அந்த அக்கொம்பினிடத்தே விருப்பமற்று எவ்வாறு அதனைத் தானே அசைத்துப் போட்டு விடுமோ அப்படியே போரில் தேகம் தளர்ந்த காலத்தில் வீரர்கள் அதனிடத்தே பற்று வைக்காமல் அதனைக் கை விட்டு வீரத்தை நிலை நிறுத்த வேண்டும்; இன்னும், சமயத்தில் உதவு

வாரென்று தம்மைப் பல நாளும் பாதுகாத்து வந்த தலைவர்க்கு இடர் வந்த காலத்தில் அவ்வாறே உதவிப் புகழைப் பரப்பி இறக்கும் வீரர்கள் சுவர்க்கத்தை அடைவர்; இவ்வுலகத்திலும் புலவர் சொல்மாலையால் புகழப் படுவார். ஆதலின், நீங்கள் இச் சமயத்தில் வீரத்தைக் கைவிடலாகாது" என்று அவர்களுக்கு வீரத்தை உண்டாக்கினான்.

அதனால் அவர்கள் சாவுக் கஞ்சாமல் திரும்பி நின்று மிகுந்த ஆத்திரத்தோடு போர் புரிந்தார்கள். ஜீவகன் அவர்கள் மீது முன்னிலும் அதிகமாக அம்புகளை வாரியிறைத்த படியினால் அவர்களில் அநேகர் மாண்டனர். அத்தருணத்தில் கட்டியங்காரனுடைய புத்திரர்களாகிய நூற்றுவரும் திரண்டு, அநேக யானைகள் அழியவும், குதிரைகள் புரளவும், பல தேர்கள் சிதறவும் ஆயுதங்களைச் செலுத்தி ஆர்ப்பரித்துப் புலிக் கூட்டங்களைப் போன்று வந்து ஜீவகனோடு எதிர்த்தார்கள். அவர்கள் அங்ஙனம் எதிர்த்துப் போர் செய்யவே இரு திறத்தவரும் எவிய பாணங்களால் சூரியனும் மறைவுற்றது. அப்பொழுது ஜீவகன் மிகுந்த கோபங் கொண்டு வலம்புரிச் சங்கை வாயில் வைத்து முழக்கி, கண்களில் நெருப்பெழ, வில்லை அதிகமாக வளைத்து மேலும் மேலும் அளவற்ற பாணங்களை அவர்கள் மேற் செலுத்தினான். அவற்றால் அப் புதல்வர் நூற்றுவரும், கட்டியங்காரனுக்குத் துணையாக வந்த பல அரசர்களும், படைத்தலைவர்களும் வாய் கிழிந்தும், நெஞ்சு பிளந்தும், தேர்களின் மீதும் நிலத்தின்மேலும் வீழ்ந்து உயிர் விட்டனர். இப் போரில் அநேக குடைகள் தலை கீழாகக் கவிழ்ந்தன; பேய்க் கணங்கள் கூத்தாடின; நரிகள் பிணங்களை உண்டு களித்தன; எங்

கும் கவந்தங்கள் ஆடின; யானைகளும் குதிரைகளும் கவிழ்ந்தன.

இவ்வாறு கட்டியங்காரன் பிள்ளைகளும் படைகளும் சின்னபின்னமாகவே, அவன், போர்க்களமே பொய்கையாகவும், வாட்படை புறவிதழாகவும், யானைப்படைகள் உள்ளிதழாகவும், அரசர்கள் அதற்குள்ளிருக்கும் சிறிய இதழ்களாகவும், தன் பிள்ளைகள் * அல்லி ஆகவும், தான் கொட்டையாகவும் வகுத்த பதும வியூகமானது சிதைந்தது. கட்டியங்காரன் அவ் வியூகத்தி னின்றும் வெளிப்பட்டுத் தோன்றினன். அவனைக் கண்டவுடனே ஜீவகனுக்கு உண்டான கோபத்திற்கு அளவேயின்று. அவன் கண்கள் தழல் போற் சிவந்தன; புருவங்கள் நெரிந்தன; இதழ்கள் மடிந்தன; கோப நகைப்பு விளங்கிற்று; முகம் வியர்த்தது. அவனும் ஜீவகனைக் கண்டு கோபித்தான்.

அங்ஙனம் இருவரும் நெருங்கி எதிர்ப்பட்ட வுடனே அசனிவேக மென்னும் பட்டத்து யானையின்மேல் ஏறியிருந்த கட்டியங்காரன் ஜீவகனை நோக்கி, “ஜீவக! பகைவர் இட்ட நஞ்சை யுண்டாலும் நல்வினையுடையாரை அது கொல்லாது; தீவினை யுடையார் அமிர்தத்தை உண்ணினும் மாய்வர்; இருவினைகளின் தன்மை இது வாகும். ஆகவே, மனிதரில் ஒருவரை ஒருவர் தம் திறத்தால் வென்றாரென்றுவது, ஒருவரால் ஒருவர் தம் பலவினத்தால் அழிந்தா ரென்றுவது அறிவுடையார் மதியார்; ஆதலின், இப்பொழுது உனக் குண்டான வெற்றி உன் செயலால் நடந்ததென்று நீ நினைக்காதே; உன் கையில் அகப்படுதற் குரிய தீவினை யுடையாரை விலக்குவாரெவர்?

* கொட்டையைச் சூழ்ந்திருக்கும் மெல்லிய இதழ்கள்.

என் மக்கள் தீவினை வசத்தாலேயே இப்பொழுது மாண்டனர்; இவ்வாறு என் புதல்வர் உன் கையாற் பட்டதனாலே இனிச் சூரியனும் தனது வெம்மை மாறிக் குளிர்ச்சியையுடையதாம்; சந்திரனும் தனது தன்மை வேறுபட்டு வெப்பமுடையதாம்; நெய்யும் திரியும் அற்ற பொழுது விளக்கு அவியாமலிருக்குமோ ? அதுபோல் நல்வினையற்ற பொழுது செல்வாக்கு தானே குறையும்; ஆதலின் இது உன் செயலன்று'' என்று மனமுடைந்து கூறினான்.

ஜீவகன் இந்த வார்த்தைகளைக் கேட்டவுடனே, "இவன் இப்பொழுது தைரியங்குன்றிப் பேசுகின்றான்; இப்படியே இவன் மனமுடைந்து தாழ்ந்து பேசிக்கொண்டு யுத்தந் தொடங்காமல் நிற்பானாயின் இவனைக் கொல்ல நம் மனம் துணியாது; இளைத்தவனைக் கொல்லல் யுத்த தருமமுமன்று; ஆதலின் இவனுக்குக் கோபத்தை உண்டாக்கி இவனை யுத்தம் புரியும்படி செய்யவேண்டும்; அவ்வாறு செய்தாற்றான் இவனைக் கொல்ல முடியும்'' என்று சிந்தித்து அவனை நோக்கி, "நீ போர் செய்தற்கு அஞ்சினாய்; அதனாலேயே 'படுகளத்தில் ஒப்பாரி' என்றாற் போல இவ்வாறு தோல்வி காட்டிப் பேசுகின்றாய்'' என்று சொல்ல, அவன், ஜீவகனை நோக்கி, "இராஜகுமார! வெல்லுந் தன்மை விதியினாலேயே உண்டாகும்; அது பற்றியே நான் இவ்வாறு கூறினேன்; இதனால் நான் அஞ்சினேனென்று நீ நினைக்காதே; உன் கையிலிருந்து வரும் வேலைக் கண்டு நான் கண் இமைப்பேனாயின் அப்பொழுது அஞ்சினேனென்ற வார்த்தையைக் கூறி நீ நகையாடுவாயாக; நான் வெற்றி கொள்ளாவிடினும் உயிருள்ள வரையும் நின்னுடன் அஞ்சாமல் யுத்தம் புரிவது நிச்சயம்'' என்று கூறி, இழந்த கோபத்தை மீண்டும் வருவித்துக்கொண்டு வில்லையெடுத்துக் கரத்தி

லேந்தி இடியைப்போல முழங்கி, "நான் வீரத்தைக் கை விடுவேனுயின், மனையாளுக்கு அஞ்சி விருந்தினரை உபசரிக்காமல் விடும் புல்லனுகக் கடவேன்" என்று வஞ்சினங் கூறி அஸ்திரங்களைத் தொடுத்து ஜீவகன் படைகளைச் சிதைத்துச் சுச்சந்தனைக் கொன்றதுபோல ஜீவகனையுங் கொல்லக் கருதி அதற்குத் தக்க வல்லமை பெற்ற ஓ ரம்பை யெடுத்துத் தொடுத்தான்.

அது கண்டு ஜீவகன், கட்டியங்காரன் அவ்வாறு தொடுத்த அம்பை விடுதற்கு முன்னே அவ் வம்பையும் வில்லையும் அறுத்தெறிந்தான். தன் வில் ஒடிந்து போகவே கட்டியங்காரன், நல்வினை கெட்டுப் பொன்னுலகத்தை விட்டு இறங்குபவன் போன்று வாட்போர் செய்தற்கு வாளைப் பிடித்துக்கொண்டு யானையை விட்டுக் கீழே யிறங்கினான். அத் தருணத்தில் ஜீவகன் அளவில்லாத அம்புகளைச் சோனை மாரி பொழிவது போல அவன் மீது சொரிந்தான். அநேக அம்புகள் கட்டியங்கார னுடைய மார்பின் மீது ஒன்றின் மே லொன்ருகப் பாய்ந்து அழுந்தின. அவ்வாறு பல அஸ்திரங்கள் பாயவே அவன் உயிர் நீங்கிற்று. உடனே அவன் கண்டோர் அஞ்சும்படி விழித்து வாயைக்கடித்துக்கொண்டு ஆகாயத்திலிருந்து சந்திரன் விழுவது போலப் பூமியில் வீழ்ந்தான்.

அவ்வாறு துஷ்டனுகிய கட்டியங்காரன் மடியவே, ஜீவகன் கட்டளையால் முரசறைவோர், "கட்டியங்காரனென்னும் கலியரசன் பட்டான்; இனி நம் படைவீரர் போர்த் தொழிலை நிறுத்துவீராக" என்று முரசை முழக்கினார்கள். அது கேட்டு வீரர் ஆர்ப்பரித்தனர்; அப்பொழுது மண்மகள் இரத்தமாகிய கண்ணீரைச் சொரிந்து

அவன் மீதிருந்த பற்று நீங்கினாள். கட்டியங்காரனை அத்தருணம் கொன்று நின்ற ஜீவகன், சூரியனை விழுங்கிய நாகத்தை நெடுநாட் சென்று அச் சூரியன் வாயைப் பிளந்து கொண்டு வெளியேறி வந்ததைப் போன்று விளங்கினான். அப்போது ஜீவகன் ஜெயம் பெற்றதைக் குறித்து மகிழ்ச்சியோடு வீரர்கள் அவனிடம் நெருங்கினார்கள்; அரசர்கள் சூழ்ந்தார்கள்; ஆகாயத்திலுள்ள நக்ஷத்திரங்கள் போல ஜனங்களால் எடுக்கப்பட்ட விளக்குகள் எங்கும் பிரகாசித்துச் செறிந்தன. இராஜமாபுர மெங்கும் சந்தோஷ முழக்கம் அதிகரித்தது. விஜயமாதேவி தன் கணவனை நினைத்துக் கண்ணீர் விட்டுப் பின்பு மகன் வெற்றிக்காக மகிழ்ந்து கண்குளிர்ந்தாள். உடனே அரசர்களெல்லோரும் சேர்ந்து இரத்தினக் குடத்தில் புனித நீர் கொண்டு வந்து ஜீவகனுக்கு வீராபிஷேகம் செய்தார்கள். மண்மகள் அவன் வசமானாள்.



## அத்தியாயம் 16

## ஜீவகனைப் பூமகள் சேர்தல்

பின்னர் ஜீவகன், போர்க்களத்தைச் சுற்றிப் பார்த்து, பலவுயிர்களைக் கொன்றதால் நேர்ந்த பாவந் திரும்படி களவேள்வி முதலியன முடித்து, ஜனங்களால் அலங்கரிக்கப் பட்டிருந்த இராஜமாபுரத்திற் புகுந்தான். அப்போது அவன் செல்லும் வழிகளில் மாதர்கள் நெற்கூடுகளாகிய கூடகாரங்களிலும், மாடங்களிலும் மயில்கள் போலத் திரண்டு அவனை வாழ்த்தினார்கள். அவர்களில் சிலர், "மகா கொடியனாகிய கட்டியங்காரனை, அவனுடைய மக்களோடும் இம் மாலைக் காலத்திலே நம் ஜீவகசாமி கொன்று உலகத்திற் கெல்லாம் மகிழ்ச்சியை உண்டாக்கிப் புண்ணியத்தைத் தேடிக்கொண்டார்; 'கெடுவான் கேடுநினைப்பான்' என்றபடி கட்டியங்காரன் தனக்குக் கெடுங்காலம் கிட்டியிருந்தபடியினாலே அரசனுக்குக் கேடு நினைத்து விரைவில் தானும் அழிந்தான்" என்று கூறினார்கள்; சிலர் மாடங்களின்மேல் நின்றபடியே சுரபுன்னை மலரை ஜீவகன் மீது சொரிந்தார்கள்; சிலர் மாடங்களின் மேலே பட்டுத் துகிற் கொடிகளைக் கட்டி அலங்கரித்து ஜீவகனை வணங்கினார்கள்; சிலர் "தம் பகைவரை விரைவில் மடித்து இவ்வாறு உலகைக் கைக்கொண்ட இவர்க்கு இங்கே நிகராவர் யாவர்!" என்று கூறி ஜீவகனைப் புகழ்ந்தார்கள். இவ்வாறு பலரும் மலர் தூவி வாழ்த்த மைத்துன அரசர்சூழச் சென்ற அவன் மணிவண்ணனை நிகர்த்து விளங்கி இராஜமாளிகையிற் புகுந்தான்.

அவனைக் கண்ட மாத்திரத்திலே கட்டியங்காரனைச் சார்ந்தவர்களாய் அந்தப்புரத்தி லிருந்த மாதர்களெல்லோரும், சந்திரனை நீங்கிச் சூரியனுக்கு எதிர்ப்பட்ட ஆம்பல்

மலர்களை நிகர்த்து முகவாட்ட மடைந்தார்கள். அத் தருணத்தில் வீரர்கள் அங்கே புகுந்து, இடியோசை கேட்டுப் பாம்புகள் பதைப்பதுபோல அவர்கள் பதைக்கும்படி அவர்களை நோக்கி, "நீங்கள் விரைவில் இவ்விடத்தைவிட்டு வருவீராக" என்று துரத்தினார்கள். அப் பெண்களெல்லோரும் கண்ணீர் வடித்துப்பொருமி அழுது வெளியேறி, வெப்பம் பொருந்திய நிலத்திலே, மரற்பழம் போலக் கொப்புளங்கள் கிளம்பிச் சிற்றடி வருந்த, நடந்து ஜீவகனுக்கு முன்னே வந்து, புலியைக் கண்டு நடுங்கும் பெட்டைமான்களைப் போல மனம் வருந்தி, மெய்சோர்ந்து முற்றத்தில் நின்றார்கள்.

அவர்கள் அவ்வாறு நின்றவுடனே ஜீவகன், தன்னைச் சூழ்ந்தவரை நோக்கி, 'இவர்களில் கட்டியங்காரனுடைய பட்டத்துத் தேவி யாவள் ?" என்று வினவ, அவர்கள், "அவள், கட்டியங்காரன் மக்களோடு இறந்தான் என்பதைக் கேள்விப்பட்ட மாத்திரத்திலேயே அவ் வருத்தத்தால் உயிர் விட்டாள்" என்று கூறினார்கள். அது கேட்டு ஜீவகன் அவள் கற்பை வியந்து,மற்றப் பெண்களை நோக்கி, "மாதர்களே ! 'கருடன் வாய்ப்பட்ட நாகங்கள் பிழைக்காததுபோலப் பகைவனிடம் அகப்பட்ட நாம் இனிப் பிழைத்தல் அரிது' என்று நீங்கள் எனக்கு அஞ்சாநிர்கள்; நான் உங்களுக்குப் பகைவனாயினும், கட்டியங்காரன் என் தாயையுங் கொல்ல நினைத்ததுபோலப் பெண்களாகிய உங்களைக் கொல்ல நினைத்து ஸ்திரீஹத்திக் காளாக மாட்டேன்; பாம்பின் விஷமானது ஒன்றின் உயிர் போமளவும் கொதித்து அவ்வுயிர் நீங்கின பின் அவ் வெப்பந் தணிவதுபோல, என்னுடைய கோபமும் கொடியனாகிய கட்டியங்காரனைக் கொன்ற பின் தணிந்து விட்டது. ஆதலால்

நீங்கள் அழுது வருந்த வேண்டாம்; உங்களுடைய மன்னன் உங்களுக்குத் தந்த சிவிதங்களை யானும் இவ்விடத்தில் தருவேன்; அவற்றைக் கொண்டு நீங்கள் இவ் வரண்மனையிலிருந்து வாழவேண்டு மானல் வாழுங்கள்; அல்லது இங்கிருந்து பொன்னைக் கொண்டுபோய் உங்கள் சிவிதங்களிலேயிருந்து வாழவேண்டு மாயினும், அவ்வாறே வாழுங்கள்; இவ் விரண்டில் நீங்கள் விரும்பியது யாது?" என்று வினவினன். அதற்கு அம் மாதர்கள், "நாங்கள், எங்கள் சிவிதங்களுக்கே செல்வோம்" என்றுகூறி வணங்கி அவனிடம் விடைபெற்றுக் கொண்டு தங்கள் தங்கள் பதிகளிலே புகுந்து, கணவனை யிழந்ததால் ஆபரணங்களையும் அலங்காரத்தையும் நீக்கிச் சண்பகப்பூ வாடுதலை நிகர்த்து வாடி நோன்பை மேற்கொண் டிருந்தார்கள்.

அதன்மேல் வீரர்கள் கைவிளக்கை யேந்தி மதில் சூழ்ந்த அரண்மனையையும், பொன்னறையையும், பிற இடங்களையும் சோதித்துக் காவலிட்டார்கள். பின்பு திருமகள் வணங்க ஜீவகன் அக் கோவிலைத் தனக் குரியதாகக் கொண்டு அதிற் போய்க் குடியேறி, அப்போர்க் கோலத்தைப் போக்கி நீராடிப் புனிதமான ஆடை யாபரணங்களை அணிந்து கொண்டு தன் மாமனை நோக்கி, "தேவாசுர யுத்தம், இராம ராவணயுத்தம், பாரத யுத்தம் என்பவற்றிலே வீரர்கள் புண்பட்டது போல இந்த யுத்தத்திலும் நம் வீரர்கள் புண்பட்டனர்; ஆதலின், நீர் அவர்களுக்குத் தக்க பரிகாரங்கள்செய்து அவர்களைப் பாதுகாக்க வேண்டும்" என்று கூறி, அவனை அக் காரியத்திற்கு நியமித்தனுப்பி, அவனுடனே தானும் போய்க் காயம்பட்ட வீரர்களைப் பார்த்து அவர்களுக்குத் தக்க உபசார வார்த்தைகள் கூறிவிட்டுத் திரும்பி வந்து போசன முண்டு சிரமம் தீரப் பள்ளி கொண்

டான். சண்டைசெய்து வந்த யானைகளும், தேர்களும், குதிரைகளும் இளைப்பாறின. யானை கொட்டாவிகொண்டா லொத்த வாட்புண்ணை யுடைய மார்பரும் இளைப்பாறினர் கள். அன்றிரவு நீங்கி விடியுந் தருணத்தில் வீரரின் புண் வாயிற் பொருமிய காற்றை வெளிப் படுத்தும் ஒலியும், இறந்தவர் பொருட்டுப் பெண்கள் அழுகின்ற அழுகைக் குரலும், முரசொலியும், சங்கின் ஓசையும், நொந்த யானை களின் செவிப்புடைப்பின் ஓசையும், யாழிசையும், இறை வனைத் துதிக்கின்ற ஒலியும் மிகுந்திருந்தன. ஜீவகன் அவ ற்றைக் கேட்டு நித்திரைதெளிந்து எழுந்தான். இறந்தவர்க ளுடைய பெண்களெல்லோரும் துன்பக்கடலிலே வீழ்ந்து நீந்தவும், வெற்றி கொண்டவருடைய பெண்களெல்லோ ரும் இன்பக்கடலிலே மூழ்கி நீந்தவும் சூரியன் கீழ்க் கடலில் தோன்றினன்.

அங்ஙனம் விடிந்து சூரியோதய மான வுடனே ஜீவ கன், கடு, நெல்லி, தான்றி ஆகியவை ஊறின நீரிலே பச் சைக் கர்ப்பூரத்தைக் கரைத்துப் பணிப் பெண்கள் கொண்டுவந்து தர, அதனுல் தந்தசுத்தி செய்து முகத் தைக் கழுவிக் காலைக் கடனை முடித்துக் கடவுளை வணங் கித் தானம் பண்ணி, அஞ்சன மெழுதி, ஆடை யாபர ணங்களணிந்து, பஞ்சமுக வாசத்தை வாயிற்கொண்டு, கையில் கழுநீர் மலரைப் பிடித்து உயர்ந்த ஆசனத்தில் அமர்ந்தான். பகைவரை ஜெயித்த பல அரசர்கள் வந்து சூழ்ந்தார்கள். ஜீவகன் தோழர்களும், நந்தட்டனும், கோவிந்த ராஜனும், கந்துகனும், நகரத்திலுள்ள மாந்தர் களும், நாட்டி லுள்ளவர்களும் வந்து திரண்டார்கள். வெள்ளி மலையிலே கலுழவேகன் ஒழிய மற்ற விஞ்சைய ரெல்லோரும் வந்து கூடினர்கள்.

பின்பு அங்கு வந்து கூடியவர்களெல்லோரும் அமைச்சரை நோக்கி, "இனி ஜீவக சாமிக்குக் கிரீடம் சூட்டுவதற்கான ஏற்பாடுகளைச் செய்யுங்கள்" என்று கூற, அவர்கள் புரோகிதரை வரவழைத்து முகூர்த்தத்தை நிச்சயித்து, நகரையும், கோவிலையும் அலங்கரிப்பித்து, முடியையும் நன்றாக அலங்கரித்து, மகுடாபிஷேகத்திற் குரிய சிறப்புக்களை யெல்லாம் செய்து முடித்தார்கள். அத் தருணத்தில் ஜீவகனுக்கு உயிர்த் தோழனாகிய சுதஞ்சண தேவன், தன் மனைவியருடனே ஆகாயத்தி னின்றும் அங்கு வந்திறங்கி எல்லோரும் அதிசயிக்கும்படி நூற் றெட்டுக் குடங்களில் பாற்கடல் நீரை முகந்து கொண்டு வந்து ஜீவகன் மேற் சொரிந்து அபிஷேகம் செய்து, பூ மழையும் பொன் மழையும் சொரிய, தேவ துந்துபி முதலிய வாத்தியங்கள் முழங்க, பெரியோர் ஆசிர்வதிக்க, ஓமப் புகையும், பலர் சிதறும் வாசனைச் சுண்ணங்களும் மேலெழுந்து ஆகாயத்தை மறைக்க, கடவுளைத் தொழுது ஜீவகன் சிரசில் முடியை எடுத்துச் சூட்டினன். தேவர்களும் அரம்பையரும் ஜீவகனை வாழ்த்திப் புகழ்ந்தார்கள்; யாழொலி அதிகரித்தது; பல தேசத்து மன்னர்களும் அவ னடியிற் காணிக்கை யிட்டு வணங்கினார்கள். அவனுடைய வெற்றிக் குடையானது விரிந்து உலக மெங்கும் நிழலைச் செய்தது. அரசுரிமைச் செல்வ மாகிய பூமகளை ஜீவகன் அடைந்தான். சுதஞ்சணன் அவனிடம் விடை பெற்றுத் தனது இருப்பிடஞ் சேர்ந்தான்.

அதன் மேல் ஜீவகன், அரசர் மகுடாபிஷேகம் பெற்றவுடன் நன்னிலத்தில் மிதித்தல் முறைமை யாதலின், அவ்வாறே யெழுந்து சகல பரிவாரங்களுடனும் நன்னிலத்தை வலஞ் செய்து திருமகள் வாசஞ் செய்யும் கொலு மண்டபத்

திற்போய், மன்னர்கள் சிங்கம் போலச் சூழவும், ஆபரணங்களின் ஒளி திசை யெங்கும் பிரகாசிக்கவும் சூரியனைப் போலச் சிம்மாசனத்தில் வீற்றிருந்து, தம்பி யாகிய நந்தட்டன் முகத்தை நோக்கி, "சகோதரா! இவ் வூரிலுள்ள சிறைக் கோட்டத்தை இடித்து விடும் படிக்கும், கொடியனாகிய கட்டியங்காரன் ஆண்ட நாட்டில் பதினாறு வருடமளவும் கடமை கொள்ளா திருக்கவும், இன்னும் பல அறங்கள் நடை பெறவும் பணியாளரால் முரசறைவிப்பாயாக" என்று கூறிப் பின்பு மந்திரிகளை நோக்கி, "அந்தணர்க்கும், தேவர் கோவிலுக்கும்,சோதிடர்க்கும், மற்றையர்க்கும், பகுதியில்லாமல் விடப்பட்டிருக்கும் நிலங்களை முன் போலவே விடுங்கள்; கட்டியங்காரன் அரசாண்ட காலத்தில் மானியங்களை இழந்தவர்க்கு முன்னினும் இரட்டிப்பானமானிய நிலங்களை விடுங்கள்" என்று கட்டளை யிட்டான்.

இவ்வாறு கூறின அளவிலே நந்தட்டன் எழுந்து போய், இறைவன் கட்டளைப்படியே முரசறையும்படி முரசறைவோனுக்குக் கட்டளை யிட்டான். அவன் முரசத்தை யானைப் பிடரியின் மேலேற்றி, "பசியும், நோயும், பகையும் ஒழிக: இன்றுள்ளவர் உலகத்தில் என்று முள்ளோராய் வாழ்வீர்; இறைவர் நம் நாட்டில் பதினாறு வருடப் பகுதிகளை வேண்டாது விடுத்தனர்; எல்லோரும் பதினாறுண்டுகள் செல்லும் வரை அரசிறை செலுத்தாது வாழலாம்; கண் ணிழந்தவர்க்கும், நோய் கொண்டார்க்கும், புருஷரால் புறக்கணிக்கப்பட்ட பெண்டிர்க்கும், நம் அரசர் மனைகளையும், பசுக்களையும், அளவற்ற நிதியையுந் தருவார்; அத்தகையினர் அவற்றைப் பெற்று எப்பொழுதும் சுகமாக வாழலாம்" என்று கூறி எங்கும் முழக்கினன். ஜீவகன் வாக்களித்தபடியே எல்லாத் தான தருமங்களும் நிறை

வேறின. அவனருளால் அவனுடைய ஆளுகைக் குட்பட்ட மனிதரெல்லோரும் பகையும், நோயும், பசியும் நீங்கி மன மகிழ்ந்து அவனை வாழ்த்தி வாழ்ந்தார்கள்; ஏமாங்கத நாடு மிகவும் செழித்தோங்கியது.



## அத்தியாயம்—17

## இலக்கணை திருமணம்

மேற்கூறியபடி மகுடாபிஷேகம் பெற்றுச் சந்தோஷ முற்றிருக்குங் காலத்தில் ஜீவகன், தனக்குரியாரை நோக்கி, "நான் மணஞ்செய்த பெண்களெல்லோரையும் இனி இங்கே அழைத்து வருவீராக" என்று சொல்ல, அவர்கள் அவ்வாறே சென்று எல்லோரையும் அழைத்து வந்தார்கள். காந்தருவதத்தை முதல் சுரமஞ்சரி யீறுகவுள்ள வெழு பெண்களும் வந்து ஜீவகன் அடியில் வீழ்ந்து வணங்கினர் கள். நெடு நாள் வருத்த முற்றிருந்த அவர்களுக்கு ஜீவகன் வேண்டுவன கொடுத்து மகிழ்ச்சியை உண்டாக்கினன்.

அதன்மேல் பெரியோர்க ளெல்லோருங் கூடி இலக்க ணைக்கு மணம்முடிக்கவேண்டியதைப் பற்றிப் பேசினர்கள். சோதிடன் முகூர்த்த நாளை நிச்சயித்துச் சொன்னன். அரசன் கட்டளையால், கலியாண தினத்திற்கு எழு நாட்க ளுக்கு முந்தியே முரசறைவோன் யானையில் முரசையேற்றி, "மன்னர் திருமணச் சிறப்பு இது முதல் எழுநாட்கள் வரை நடைபெறும்; இவ்வெழு நாளும் எல்லோரும் மாளி கைகளை அலங்கரியுங்கள்; உயர்ந்த ஆடைகளை அணியுங் கள்; ஆபரணங்களைப் பூணுங்கள்; வாசனைச் சாந்துகளைப் பூசுங்கள்; பாலடிசில் உண்ணுங்கள்; சந்தோஷங் கொண் டாடுங்கள்" என்று முழக்கினன். அவ்வாறே எல்லாம் நடைபெற்றன. இராஜமாளிகையினும் திருமணத்திற்குரிய எல்லா அலங்காரங்களும் நிறைவேறின.

பின் கலியாண தினத்தன்று, மணத்திற்குரிய காரியங் களை நடத்தத் தொடங்கி, இராஜ குடும்பத்தைச் சேர்ந்த

பெண்கள், கோலமிட்ட இடத்திலே மங்கலமாகிய ஆசனத்தை இட்டார்கள். பழங்காசு முதலியவைகள் குவிக்கப்பட்டன; அவற்றின்மேலே அஷ்டமங்கலங்கள் விளங்கின; தூண்டாமணி விளக்குகள் எழுந்தன; வாசனைப் புகைகள் பரவின; ஆயிரத்தெட்டுப்பேர் கவரி வீசினார்கள். ஜீவக மன்னன் நன்முகூர்த்தத்திலே அந்த ஆசனத்தில் அமர்ந்தான். அப்பொழுது, கௌஷளகன் வந்து மங்கலமாகிய அறுகும் அரிசியுமிட்டு அபிமந்திரித்த பொற்கத்தியை ஜீவகன் முகத்திற் சேர்த்துக் கடவுளை வாழ்த்திப் பல வாத்தியங்கள் முழங்க க்ஷௌளம் செய்தான். பின்னர் மாதர்கள் திருமஞ்சன நீர்க் குடங்களை யானைகளின்மே லேற்றிக் கொண்டுவந்து ஜீவகனை வெள்ளிமனையி லிருத்தி, "என்றும் இலக்கணையோடு நீ நிலை பெற்று வாழ்வாயாக" என்று வாழ்த்தி, அவன் சிரசில் வாசனைத் தைலத்தை இட்டு, வாசனை வஸ்துக்கள் சேர்த் தரைத்த கலவையைப் பூசி நீராட்டினார்கள். அதன்மேல் ஜீவகன் எல்லோரும் கண்டு அதிசயிக்கும்படி மணக்கோலஞ் செய்து கொண்டான். பின்னர் அம் மாதர்கள் இலக்கணைக்கும் நீராட்டி அலங்காரம் செய்தார்கள்.

இவ்வாறு இருவர்க்கும் அலங்காரங்கள் முடிந்த பின் அவர்களை அம் மாதர்கள் மணவறையில் கொண்டு வந்து, இருக்கவேண்டிய முறைப்படி உட்காரவைத்தார்கள். அந்தணர்கள் வேதவிதிப்படி மந்திரங்களுடனே ஓமம் வளர்த்து அக்கினி வலத்தே சுழன்றெழக் கலியாணச் சடங்குகளை நிறைவேற்ற, கோவிந்தன் தன் மகளைக் கொடுப்பதற்கு அறிகுறியாகப் பல வாத்திய முழக்கத்துடன் ஜீவகன் கையிலே தாரை நீரை வார்த்தான். ஜீவகன் அந் நீரைக் கையிலேற்ற பின் மாங்கலிய தாரணஞ்செய்து இலக்கணையுடனே

அக்கினியை வலம்வந்து, அவளுக்கு அருந்ததியைக் காட்டி, அறைவாசலிலே உரிமையாளர் வந்து பாலாலே தன் மலரடியைக் கழுவின பின்பு பாலடிசிலை ஏந்தக் கண்ணுற் கண்டு, பாவையார் இட்டமஞ்சத்தில் அமர்ந்து மகிழ்ந்தான். அவ்வாறு கலிபானம் முடிந்த பின், விருந்துகளும், ஆடல் பாடல் முதலிய சிறப்புக்களும் நடந்தன. அதன்மேல் ஜீவகன் நகர மாந்தர்க ளெல்லோரும் கண்டு களிக்கும்படி பவனி வந்து, தேவாலயம் அடைந்து அருகக் கடவுளைப் பன்முறை வாழ்த்தித் தொழுது அக் கடவுளுக்கு விளக்கிடுதற் பொருட்டு நூறு கிராமங்களையும், பூசனைக்கு நான்கு கோடி பொன்னையும், சேவித்தற்கு நூறு யானைகளையும், நூறு தேர்களையும் கொடுத்து வந்து அரண்மனையிற் சேர்ந்து சிங்காசனத்தில் வீற்றிருந்தான்.

அங்ஙன மிருந்து தருமநிதிப்படி அரசு செலுத்தத் தொடங்கி, தன்னை வளர்த்து வந்த கந்துக்கடனுக்கு அதற்கு முன் பில்லாத அரசுரிமையை வலியக் கொடுத்து, அதற்குத் தக்க நாட்டை அளித்து, சுநந்தைக்குத் தேவியென்னும் பட்டத்தை நல்கி, நந்தட்டனை இளவரசாக்கி, நபுலனுக்கும் விபுலனுக்கும் சிற்றரசர் பெண்களை மணஞ் செய்வித்து நாடுகளையுங் கொடுத்தான். பதுமுகன் முதலிய தோழர்க்கு அமைச்சையும், படைத் தலைமையையும், சேனாதிபதிப் பட்டத்திற் குரிய ஏனாதி மோதிரத்தையும், செம்பொற் பட்டம் முதலியவற்றையுந் தந்து, மற்றும் தனக்குதவி செய்த சிநேகிதர்களுக் கெல்லாம் அமைச்சரைக் கொண்டு அளவற்ற நிதியையும் நாட்டையுங் கொடுப்பித்தான். தன்னைவளர்த்த செவிலித் தாய்மார்களை அழைத்து அவர்கள் சுற்றத்தார்க்குச் சிறப்புச் செய்து, அவர்களுக்கு நாள் ஒன்றுக்கு ஆயிரம் பொன் வரி தண்டத்தக்க ஐந்தூர்

களை நல்கினான். பின்னும், தன் மீது பக்திகொண்டிருந்த மன்னர்க்கு வேண்டும் திரவியங்களை ஈந்தான். தன் மாமனாகிய கோவிந்தராஜனுக்குக் கட்டியங் காரனுடைய பொருள் எல்லாவற்றையுங் கொடுத்தான். உலோகபாலனுக்கு விரும்பியவற்றை யெல்லாம் அளித்தான். தன் இடரை நீக்கிய சுதஞ்சணனுக்கு ஒரு கோவில் செய்து, அவன் வடிவத்தை அதில்பொன்னால் இயற்றி, அக் கோவிலுக்கு ஓர் ஊரையும் மானியமாக விடுத்து, அவன் சரித்திரத்தை ஒரு நாடகமாகச்செய்து நடத்தினான். அதன்மேலும், 'இனி நம்மால் உபகாரம் பெறாதார் யாவர்?' என்று சிந்தித்து, தான் சிறு பருவத்தில் விளையாடிய ஆலமரமொன்றிருக்கக் கண்டு அதற்கும் பீடங்கட்டி மாலையை அணிந்து, ஐந்தூர்களையும் விட்டு, பக்ஷிக்கூட்டங்கள் அதில் வந்து தங்கவும், அதனால் அதற்குப் புண்ணியஞ் சேரவுஞ் செய்தான்.

காந்தருவதத்தை முதலிய எண்மரும் அரசிகள் என்னும் பட்டம் பெற்றார்கள். தத்தை முதல் மனைவியாதலின் மற்ற எழுவரும் அவளை வணங்கி அவளுக் கடங்கி மரியாதையாக நடந்து கொண்டார்கள். ஜீவகன் தன் மனைவியர்க்கும் ஐந்தரைக்கோடி பொன் வருமானமுள்ள நாடுகளைச் சீவிதமாக விட்டு, மேலும் அவர்களுடைய சாந்துக்கும், உணவுக்குமாக நாளொன்றுக்கு ஆயிரம் பொன் வரத்தக்க ஊர்களையும் மானியமாக விடுத்தான்.

விஜயமாதேவி, தவப்பள்ளியிலிருந்து தனக்குத் துணையாக வந்த தவமாதர்களுக்குப் பிரதியுபகாரம் ஒன்றுமில்லையே என்று அதன் பொருட்டாக அருகக்கடவுளுக்குதச்சசால்கோவில்கட்டுவித்து,பூஜைசெய்து அப்பூஜையின் பயனையெல்லாம் அவர்களுக்குக் கொடுத்தனள். முன்னே சண்பக

மாலேபோல் வந்து மயானத்தில் தன் துன்பத்தைத் தீர்த்துத் தன்னைத் தவப் பள்ளியிலே சேர்த்துப் பாதுகாத்த தேவதைக்கு அது தங்கும் சுடுகாட்டிலே கோவில் எற்படுத்தினாள். தன்னைத் தூக்கிச்'சென்ற மயில் யந்திரத்தை எப்பொழுதும் தான் காணும்படி தான் தங்கும் மாளிகையிலே சித்திரக்காரால் எழுதுவித்தாள். ஜீவகன் பிறந்த சுடுகாட்டை அன்ன சாலையாக்கி அதில்சூாரியஸ்தர்களால் ஐந்நூற்றைந்து பிள்ளைகளுக்கு நாள்தோறும் பாலும் அன்னமும் கொடுக்கும்படி செய்தாள். சுநந்தைக்கு உபசாரமொழி கூறி அவளை மேம்பாடுறச் செய்தாள். தன்னை வணங்கிய மருமக்கள்மாராகிய காந்தருவதத்தை முதலிய எட்டுப் பேர்களையும் தழுவி, "நீங்கள் உலகத்தை ஆளும் பிள்ளைகளைப்பெறக்கடவீராக" என்று ஆசீர்வதித்தாள்.

ஜீவகன் மேற்கூறியபடி தான தருமங்களைச் செய்து மனுநீதி தவறாமல் அரசுசெலுத்தி வருங்காலத்தில், அவனுக்கு காந்தருவதத்தையிடம் சச்சந்தன் என்பவனும், குணமாலையிடத்தில் சுதஞ்சனன் என்பவனும், பதுமையிடத்தில் தரணி என்பவனும், கேமசரியிடத்தில் கந்துக்கடன் என்பவனும், கனகமாலையிடத்தில் விஜயன் என்பவனும், விமலையிடத்தில் தத்தன் என்பவனும், சுரமஞ்சரியிடம் பரதன் என்பவனும், இலக்கணையிடத்தில் கோவிந்தன் என்பவனும் புத்திரர்களாகப் பிறந்து வளர்ந்து சகல வித்தைகளையுங் கற்று மேம்பாடு பொருந்தி யிருந்தார்கள்.

ஜீவகனுடைய ஆளுகையில் முன்னே யானை திரிந்த காடுகளெல்லாம் நாடுகளாயின; பேய்த்தேர் பரந்த பாலை நிலங்களெல்லாம் அன்னங்கள் உலாவும் மருத நிலங்களாயின; அவன் செய்த தருமத்தின் மிகுதியாலே மாதம்

மாரி ... உலகத்தில் விளைவு மிகுந்தது; எங் ... ன்ன தானங்கள் மிகுந்தன; வித்தியாபிவிருத்தி யுண்டாயிற்று; பசுக்கள் விருத்தி யடைந்தன; சகல தேசத்தரசர்களும் பகுதி செலுத்தி அவனடியை வணங்கி அவன் ஏவற்படி நடந்தார்கள். பகை நீங்கிற்று; புலியும் பசுவும் ஒரு துறையில் நீர் பருகின; கொலையென்பதே இல்லாமற் போயிற்று; உண்மை உயர்ந்தது; ஜனங்களெல்லோரும் எவ்விதத் துன்பமுமின்றி நாள்தோறும் இன்புற்று வாழ்ந்தார்கள். இராஜமாபுரமானது, நாகலோகமும் தேவருலகமும் கண்டு நாணும்படி செழிப்புற்றது. ஜீவகனுடைய புகழ் மூவுலகிலும் பரவிற்று. ஜீவகன் இவ்வகைச் சிறப்புக்களுடனும், மனைவி மக்களுடனும், சுற்றத்தாருடனும் இந்திரன்போல் அரசுசெலுத்தி இனிது வாழ்ந்திருந்தான்.

சுபம். சுபம். சுபம்.

